# பஞ்சதந்திரம்



# AMIL PANCHATANTRAM

வி[illegible]ப முதலியார்

இயற்றியது






EDITED BY

T. A. RAJARUTHNAM PILLAY








THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA

MADRAS ALLAHABAD RANGOON COLOMBO

1928

## அட்டவணை—CONTENTS

பக்கம்.



# பஞ்சதந்திரம்

## வரலாறு

கல்விப் பொருளிலுஞ் செல்வப் பொருளிலுங் குறை வில்லாதவர்களுக்கு உறைவிடமாயிருக்கின்ற பாடலிபுரம் என்னுமொரு பட்டணம் உண்டு. அந்தப் பட்டணத்திற் சகல சுகுணங்களோடுங் கூடியிருக்கின்ற சுதரிசனன் என்னும் அரசனொருவன் இருந்தான். அந்த அரசன் தன் பிள்ளைகள் படியாமல் மூடர்களாயிருக்கிறதைக் கண்டு, வெகு விசனத்தோடும் ஆலோசிக்கத் தொடங்கினான். கல்வியும் தர்மகுணமுமில்லாத பிள்ளைகள் இருந்தாவதென்ன? பால் கொடாத எருமைகளைக் காப்பாற்றினாற் பலனுண்டா? வேதசாஸ்திர மறிந்தவனாய் ஒரே பிள்ளையிருந்தாலும் அவனாலே குடும்பமெல்லாம் சுகமடையும். இப்படிக்கில்லாத பிள்ளைகள் கர்ப்பத்திலே அழிந்தாலும், அழியாவிட்டாற் பிறந்தவுடனே இறந்தாலும் போகிறது நல்லது. குலத்தில் அயோக்கியமான பிள்ளை இருக்கலாகாது. ஜன்மாந்தர புண்ணியத்தினாலே இம்மை மறுமைக்குச் சுகங்கொடுக்கிற புத்திரன் பிறக்கிறான். பாபத்தினாற் குலத்தைக் கெடுக்கிற புத்திரன் பிறக்கிறான். மேலும் இந்தப் பிள்ளையைப் பெற்றவர்கள் என்ன தவஞ்செய்தார்களோவென்று கண்டோர்

சொல்லும்படி நடக்கிறவனல்லவோ பிள்ளையென்று தனக்குள்ளே ஆலோசித்துப் பெருமூச்சுவிட்டு, பின்பு சபையைப் பார்த்து, 'இளமையும் செல்வமும் இராஜசமும் அறிவில்லாமையுமாகிய இந்த நான்கினுள் ஒன்றொன்றுதானே கேட்டுக்கெல்லா மேதுவாகும். இந்த நான்கு மொருவனிடத்திலிருந்தால் அவனென்ன பாடு படான்? பிள்ளையெண்ணிக்கைக்குப் பிறந்து, துன்மார்க்கர்களாயிருக்கிற என் பிள்ளைகளுக்கு நீதிசாஸ்திரோபதேசத்தினால் எந்த மகா புருஷன் மறுஜனனம் வரப்பண்ணுவான்?' என, அப்போது சகல நீதிசாஸ்திரங்களிலும் வல்லவனாகிய சோமசன்மா என்பவனெழுந்து, 'இவர்களுக்குச் சமானமான அறிவுடையவர்கள் இவ்வுலகத்திலில்லையென்று சொல்லும்படி நான் ஆறுமாதத்திற் செய்யமாட்டுவேன். அதுவரைக்கும் நீர் நாளை எண்ணிக்கொண்டிரும்' என்று சபதம் பண்ணினான். அதைக்கேட்டு, நடுக்கடலில் திசைதப்பி மயங்கும் மாலுமிக்கு ஓர் துறை தோற்றினாற்போல, அரசன் மிகவு மனமகிழ்ந்து அவனுக்கு உபசாரஞ்செய்து தன்னுடைய பிள்ளைகளை அவன் வசத்தில் ஒப்புவித்தான். சோமசன்மா உடனே அந்தப் பிள்ளைகளைத் தன் வீட்டுக் கழைத்துக்கொண்டுபோய்க் கருப்பஞ்சாற்றைக் காய்ச்சி ஒரு சர்க்கரைக் கட்டியாகத் திரட்டினாற்போல, நீதிசாஸ்திரங்களைப் பஞ்சதந்திரக் கதையாகக் கற்பித்து, ராஜகுமாரர்களுக்குச் சொல்லத் தொடங்கினான்.

சோமசன்மா 'ஓ ராஜகுமாரர்களே! உங்களுக்கு வேடிக்கையாகச் சில கதைகள் சொல்லுகிறேன், கேளுங்கள்' என்று சொல்ல, அவர்கள் 'அதென்ன கதை' என்றார்கள். அவன் 'பஞ்சதந்திரக் கதை' என்று சொன்னான். 'பஞ்சதந்திர மென்பதென்ன? தெரியச் சொல்லவேண்டும்' என்றார்கள். அதற்கவன், 'அவை மித்திரபேதம், சுகிர்ல்லாபம், சந்திவிக்கிரகம், அர்த்தநாசம் அல்லது லப்தஹானி, அசம்பி

ரேக்ஷியகாரித்துவம் என்னு மைந்தாம். அவைகளுள் மித்திர பேதமாவது சிநேகத்தைக் கெடுத்துப் பகையுண்டாக்கல்; சுகிர்ல்லாபமாவது தங்களுக்குச் சமானமானவர்களோடு கூடிப் பகையில்லாமல் வாழ்ந்திருத்தல்; சந்திவிக்கிரக மாவது பகைவரையடுத் துறவுசெய்து வெல்லுதல்; அர்த்த நாசமாவது தன் கையிற் கிடைத்த பொருளை யழித்தல்; அசம்பிரேக்ஷியகாரித்துவமாவது காரியத்தைத் தேற விசாரியாமற் செய்தல்' என்று சொன்னான். ராஜகுமாரர்கள், 'ஐயா, அந்தக் கதைகளை எங்களுக்கு விளங்கச் சொல்ல வேண்டும்' என்றார்கள். சோமசன்மா, 'உங்களுக்கு மங்கள முண்டாகுக' என்று ஆசீர்வதித்துச் சொல்லத் தொடங்கினான்.

# பஞ்சதந்திரம்

முதலாவது

## மித்திரபேதம்

'ஒரு காட்டில் ஒரு சிங்கமும் எருதுங் கூடி மிகவு மொருமையாக வாழ்ந்திருந்தன. அந்தச் சிநேகத்தைக் கோட்சொல்லுதலு முலோபகுணமு முள்ள ஒரு நரி வந்து கெடுத்தது' என்று சொல்ல, ராஜகுமாரர்கள் 'அதெப்படி' என, சோமசன்மா சொல்லத் தொடங்கினுன்.

'தென்னுட்டிலே மகிழாரூப்பியம் என்னும் பட்டணத்தில் வர்த்தமானன் என்றொரு வர்த்தகனிருந்தான். அவனுக்கு வெகு பணமிருந்தும் இன்னுஞ் சம்பாதிக்கவேண்டுமென்கிற ஆசையினுற் பின்வருகிறபடி ஆலோசிக்கலானுன். யாதொன்று சம்பாதிப்ப தருமையோ அதைச் சம்பாதிக்கவேண்டும். சம்பாதித்ததைக் காப்பாற்றவேண்டும். காப்பாற்றினதை விர்த்திபண்ணவேண்டும். விர்த்திபண்ணினதைத் தானுமனுபவித்து உத்தம பாத்திரத்திற் செலவழிக்கவேண்டும். காப்பாற்றுத திரவியம் நாசமாகும். விர்த்திபண்ணுதது குறையும். தானு மனுபவித்துச் சற்பாத்திரத்திற் செலவழியாதது வீணுகுமெனச் சாஸ்திர மிருக்கின்றதினுலும், மேலு மின்பமும் புண்ணியமுங் கீர்த்தியும் மனிதருக்குள்ளே பெருமையு முறவும் நினைத்தது முடித்தலு மாருக்குண்டு? திரளாகப் பணங் குவித்தவர்களுக்கேயுண்டு; இல்லாதவர்கள் உலகத்திலே நடைபிணமாவார்களாகையினுலும், மேன்மேலுஞ் சம்பாதிப்பதே யோக்கியமென்றுலோசித்துக்கொண்டு, தன்னிடத்திலிருக்கிற சரக்குக்களை வண்டியிலேற்றி, அதிற் சஞ்சீவகன் நந்தகன் என்னும் பெய

ரையுடைய இரண்டெருதுகளைப் பூட்டி நடத்திக்கொண்டு தேசாந்தரம் போனான். போகும்போதொருநாள் நெருங்கிய காட்டிலே மிகுந்த பாரத்தினாற் சஞ்சீவகன் என்கிற எருது காலிடறி விழுந்து நொண்டியாயிற்று. அப்போது வர்த்தமானன் அந்த எருதுக்குப் பதிலாக வேறோரெருதை வண்டியிற் கட்டி ஓட்டிக்கொண் டவ்வெருதுக்கு ஓராளைக் காவல் வைத்துப்போனான். பிறகு அந்தச் சேவகன் வர்த்தகனிடத்துக் கிரண்டொருநாட் கழித்துப்போய் அந்த எருது செத்துப்போயிற்றென்று பொய் சொன்னான். காட்டில் விடப்பட்ட எருதோ, ஆயுசுபலத்தினாற் பிழைத்துப் புல்லு முதலாகிய மேய்ச்சலாலே மிகவும் பெருத்துக் கொழுத்து ஒடிந்த காலுங்கூடி அந்தக் காட்டிலே யதேச்சையாகத் திரிந்துகொண்டிருந்தது. அப்படியிருக்கையில், காட்டில் சஞ்சரிக்கின்ற பிராணிகளுக்கெல்லாம் ராஜ்ஜிய பட்டாபிஷேகச் சடங்குகளில்லாமல் தன் வல்லமையினால் ராஜத்துவத்தை யடைந்திருக்கின்ற சிங்கமானது தன் பராக்கிரமத்தாற் சம்பாதிக்கப்பட்ட ராஜ்ஜியத்தைச் சுகமாக அனுபவித்துக்கொண்டிருந் தொருநாள் தாகமெடுத்துத் தண்ணீர் குடிக்க யமுனையாற்றங்கரைக்குப் போகும்போது அங்கே சடிதியிலென்றைக்குங் கேட்டறியாத பேரிடி முழக்கம்போலு மந்த ரிஷபம் முக்காரம்போட்ட தொனியைக் கேட்டுத் திடுக்கிட்டு இதேது புதிதாயிருக்கின்றதென்று பயந்து நடுநடுங்கித் தண்ணீர் குடியாமற் சும்மா அசைவற நின்றுவிட்டது. அப்போ தவ்விடத்திலிருந்த சிங்கத்தினுடைய பிரதான மந்திரி குமாரர்களாகிய கரடகன் தமனகன் என்கிற நரிகளிரண்டும் இந்த அதிசயத்தை யறிந்து ஒன்றுக்கொன்று பேசத் தொடங்கின.

தமனகன் கரடகனைப் பார்த்து, நம்முடைய அரசன் தண்ணீர்க்குப் போய்க் குடியாமலேன் சும்மா நிற்கின்றான்?' என, கரடகன் 'அதை விசாரிக்கிறதினால் நமக்காவதென்ன?

இரை யகப்படுமா? பெருமை யுண்டாகுமா? கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்? சும்மாவிரு; தனக்குத் தகாத காரியத்தைச் செய்கிறவன் கடாவிய வாப்பைப் பிடுங்கின குரங்கு பட்ட பாடு படுவான்' என்று சொல்ல, 'அதென்ன?' என்று தமனகன் கேட்க, கரடகன் சொல்லுகின்றது:—

'மகததேசத்தி லிருக்கின்ற சுதத்தன் என்போ னொருவன் கோயிற் றிருப்பணிக்காகக் கொண்டுவந் தறுக்கவிட்ட மரங்களில் வாட்காரன் பிளக்கும்படி முளைகளடித்துவிட்டுப்போன ஒரு மரத்தின்மே லந்தக் கோயில் நந்தவனத்தி லிருக்கின்ற குரங்குகளி லொன்றுவந் துட்கார்ந்தது. அது அம்மரப்பிளப்பி லடித்த முளையை யசைத்துப் பிடுங்கினவுடனே பிளப்பு நெருங்கி யுடனசுங்கி யிறந்தது. ஆதலால் தனக்குத் தகாத காரியத்தைச் செய்தால் யார்க்கும் பிராணசேதம் வரும்' என்று சொல்லி, 'நேற்று நாம் தின்று மிகுந்திருக்கின்ற இரையைத் தின்று சுகமே யிருப்போம் வா' என்று கரடக னழைத்தபின்பு, தமனகன் கரடகனைப் பார்த்து 'சுவாமி காரியஞ் செய்யாம லிரைதேடுகிறதையே பெரிதாக நினைக்கலாமா? ஒருவன் மித்திரர்களுக் குபகாரமுஞ் சத்துருக்களுக் கபகாரமும் பண்ணவேண்டும். அதற் கிராஜசேவையே தக்கது. மேலும் ராஜாவை யடுத்திருக்கையில் வெகு ஜனங்களுக்கு நன்மைசெய்வதே ராஜசேவைக்குப் பிரயோசனமாம். நன்மைசெய்வதற் கிடமில்லாவிட்டால் உயிர்பிழைத்திருப்பதனாலென்ன? காக்கையுங் காக்பலியையுமெச்சிலையு மலத்தையுந் தின்றுயிர வருஷம் பிழைத்திருக்கின்றது. நாயும் பசையில்லாத வெள்ளெலும்பைக் கவ்விக் கடித்துக் கடித்துப் பல்லசைந்தும் பசிதீராமற் சந்தோஷத்தையடைகின்றது. மேலும் அது எஜமானன் கையிலிருக்கிற ஒரு கவள மெச்சிலைப் பார்த்துக் காலில் விழுந்து வயிற்றை யெக்கிக்கொண்டு எளிய முகத்தைக் காட்டி

முகத்தைப் பார்த்து வாலைக் குழைத்துக் கெஞ்சிக் காத்துக் கிடந்து கொஞ்ச மெச்சிலை வாங்கித்தின்னும். யானையோ, பாகனைப்பாராமலும் அடிக்காமலும் அவன் வேண்டி வேண்டி வலியக் கொடுக்கக் கர்வத்தோடு வாங்கி நாயைக்காட்டிலு மாயிரம்பங் கதிகஞ் சாப்பிடும். சிங்கம் பசியினாற் சங்கடப் படும்போது, நரி சமீபத்திலிருந்தாலு மதை அசட்டை பண்ணி யானையையே கொல்லும். ஆதலால் உலகத்தில் யார் புகழோடு ஜீவிக்கிறார்களோ அவர்களே பாக்கியவான் கள். சிறு குழிகள் கொஞ்சந் தண்ணீரா னிறையும். எலி யின் சேரங்கை சில தானியத்தா னிரம்பும். அப்படிப் போல மூடன் இதாகிதந் தெரியாமற் கொஞ்சத்திலே ஜீவ னம்பண்ணுவான். அவனுக்கும் பசுவுக்கு மென்ன பேதம்? ஆகையால் ராஜகாரியம் பார்த்துப் பெருமையுடனே ஜீவிக் கிறதே நல்லது' என்றிப்படிச் சொல்லக் கேட்டு, கரடகன் தமனகனைப் பார்த்து, நல்லது இந்த யோசனைகளுக்கும் இந்தப் பேச்சுகளுக்கு மிப்போது நாம் ராஜகாரியத்திலிருக் கவில்லை; இரை தேடுகிற காரியத்திலிருக்கின்றோம். அப்படி யிருக்க நீயேன் வீணான மனோராச்சியம்பண்ணுகின்றாய்? மூடவன் கொம்புத் தேனுக் காசைப்பட்டாற் கிட்டுமோ' என்றிகழ்ந்து சொல்ல, தமனகன் 'நல்ல திருக்கட்டும், பிர தானியுங் காலத்தினா லப்பிரதானியாகின்றான். தன் முயற்சி யாலுங் குணத்தினாலும் லகுவானவனுஞ் சமர்த்தனாகின் றான். யாரும் மேலான காரியத்தையே ஆலோசிக்கவேண் டும். அது கைகூடாவிட்டாலும் பெருமை வரும். புத்தி சாலிக ளருமையான காரியங்களைச் செய்வார்கள். புத்தி யீனர்க ளெளிமையான காரியங்களைச் செய்வார்கள். மலை உச்சியி லொரு பெருங் கல்லை யேற்றுதலரிது; அங்கிருந்து அதைத் தள்ளுவதெளிது. ஏரியி னீரைக் கட்டுதலரிது; உடைத்த லெளிது. பெருமையுஞ் சிறுமையு மவரவரா லேயே வரும். 'முயற்சியுடையா ரிகழ்ச்சி யடையார்' என்

னும் பழமொழியானாலுங் கேட்டிலையா?' என் றிப்படிச் சொல்ல, தமனகனைக் கரடகன் பார்த்து, 'நல்லது நீ போய்ச் சிங்கத்தினிடத்தி லெதைக்குறித்துப் பேசுவாய்?' என, தமனகன் 'நம்முடைய சுவாமி மூடத்தனத்தாற் பயந் திருக்கின்றான். அதை நீ யெப்படி யறிந்தாயென்று கேட்கின்றாயோ, சொன்ன பொருளைப் பக்ஷியு மிருகங்களு மறிந்துகொள்ளும்; சொல்லாமலறிகின்றவனே பண்டிதன். அப்படி யறியாவிட்டாற் புத்தியாற் பிரயோசனமென்ன? நானு மிங்கே யிருந்தபடியே யறிந்தேன். இப்போது நானி தை முன்னிட்டுக் கொண்டு போய்ச் சிங்கத்தைச் சிநேகம் பண்ணிக்கொள்ளுகின்றேன்' என, தமனகனைப் பார்த்துக் கரடகன், 'நம்முடைய அரசர்கள் மோந்துகொள்ளுவது போற் கடிக்கின்றவர்கள். அரசரும், நெருப்பும், பாம்புஞ் சரி. அப்படியானாற் பழக்கமில்லாம லிருக்கையி லவனை எப்படிச் சிநேகம் பண்ணிக்கொள்வாய்?' என, அப்போது தமனகன், 'நான் பேசுவதிற் சதுரனென்றறியாயா? சமர்த்தனுக் கெதுதான் பெரிது? பறக்கிற பறவைகளுக் கெது தூரம்? வித்துவானுக் கெது பரதேசம்? பிரியமாகப் பேசுகிறவர்களுக் கெவன் சத்துரு?' என, கரடகன், 'அப்படியானாலும் ராஜாக்களிடத்தில் அகாலத்திற் போனால் அவமானம் நேரிடும்' என்றது. அதற்குத் தமனகன் 'அவமானம் வந்தாலு மெஜமானன் சமீபத்திலேயே இருக்கவேண்டும். யார் சமீபத்திலிருக்கின்றானோ அவனுடனே அரசர்கள் காரியங்களைச் சொல்லுகின்றார்கள். கொடிகள் கிட்டவிருக்கிற மரத்திலேயே படரும். அரசர்களும் ஸ்திரிகளுந் தங்களைக் காத்து இங்கிதம் பேசுகிறவர்களிடத்தில் மனதிரங்குவார்கள்' என, கரடகன் 'நல்லது, நீ அவனிடத்தி லெப்படிப் பேசுவாய்?' என்றது. தமனகன் 'நல்ல மழை பெய்திருக்கையி லெப்படி விரையினின்று முளைகள் புறப்படுமோ அப்படி ராஜாவின் கேள்விக்கேற்க என் வாக்கி

னின்று முத்தரம் புறப்படும். ஆயினு மொருவேளை பிரகஸ்பதியும் பேச்சிற் றவறுவானானால் மற்றவர்களுக்குக் கேட்பானேன்? எப்படியுங் காலமறிந்து பேசினால் யாதோர் அவமானமும் வராது. அரசர்கள் தங்கள் காரியம் யாராலே யாகின்றதோ அவனிடத்தி லொருவேளை சிறிது குற்றம் நேரிட்டாலுமதைப் பாராட்டாமலவனைப் பரிபாலித்து விர்த்தியடையப் பண்ணுவார்கள்' என, கரடகன் 'அரசர்கள் மலைபோ லனுசரிக்கிறதற்குக் கடினமாயிருக்கின்றார்கள்' என, தமனகன் 'ஆயினுமவர்கள் சுபாவ மறிந்து பேசித் தனக்கிதம் பண்ணிக்கொள்ளவேண்டும்' என்று கரடகனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு சிங்கத்தினிடத்திற்குப் போய்த் தூரத்திலே நின்று தண்டம்பண்ணி அரசனுத்தரவினா லுட்கார்ந்தவுடனே, சிங்கம் 'நெடுநாளா யுன்னைக் காணோம்' என, தமனகன் 'இப்போது தேவரீரிடத்திற்கு வரத்தக்க காரியம் நேரிட்டதனால் தங்களுடைய திருவடியண்டை வரலானேன். இல்லாவிட்டால் வந்ததற்குப் பிரயோஜனமென்ன? ராஜாக்களுக் கொருவராலும் பலனில்லாவிட்டாலு மொருவேளை சிறு துரும்பும் பல்லுக்குக்குத்த உதவும். மற்றவைகளுக்குக் கேட்பானேன்? மேலுமொருவேளை அரசர்கள் குணவானை அசட்டைபண்ணித் தள்ளிவிட்டாலும் அவன் சற்குணம் போய்விடுமா? நெருப்பைத் தலைகீழாகப் பிடித்தாலு மதன் சுவாலை கீழாகுமா? ஆதலா லரசர்கள் பரிசோதித்தறிந்து யோக்கியனை நல்ல காரியத்தில் வைத்தால் அவன் ராஜாவுக்குக் கீர்த்தியைப் பெருகப்பண்ணுவான். ஆகையா லென்னைத் தாங்கள் சிறுநரியென் றவமானம் பண்ணலாகாது. விஷ்ணு எடுத்திருந்த வராகவடிவை உலகத்திற் பூசிக்கவில்லையா? ரூபத்தைப் பாராமற் குணத்தையே பார்க்கவேண்டும். மலைபோலிருக்கின்ற தேர் சிறு சுள்ளாணியால் நிலைபெறும். நானோ சுவாமி காரியத்திற் பற்றுள்ளவன். கருவியுங் காலமுமறிந்து கரும

முடிக்கும் ஆற்றலுள்ளவன். இந்த வல்லமையெல்லா முமது சார்பிருந்தாற் பிரகாசிக்கும். வாள் முதலிய ஆயுதங்களும், வீணை முதலிய வாத்தியக் கருவிகளும், பூமியும், ஸ்திரீக ளும், யோக்கியர்களும், சாஸ்திரங்களுமாகிய இவையெல் லாம் பரிபாலனம் பண்ணுகின்றவர்களாற் பிரகாசிக்கும். அண்டையிற் சமர்த்தனில்லாத ராஜாவுக் கபகீர்த்திவரும்' என்றிப்படிச் சொல்லக் கேட்டு, சிங்கம் 'தமனகா! நீ என் பிரதானி புத்திரனல்லவா?' என, கரடகன் 'சுவாமி' என்று வணங்கிச் சும்மாவிருந்தது. சிங்கம் 'ஏதாவது சொல்லவேண்டுவதிருந்தாற் சொல்' என, தமனகன் 'தேவ ரீர் தண்ணீர்க்கு வந்து குடியாமல் மெய்ம்மறந்து சும்மா நிற்கின்றீர்களே' என, சிங்கம் 'மெய்தான், நானிந்தக் காட் டில் வெகுநாட் சுகமாகவிருந்தேன்; இப்போதிதை விட்டு விடத் தக்கதாகச் சம்பவித்திருக்கின்றது; என்றைக்குங் கேளாத மேகமுழக்கம்போ லொரு தொனி இன்றைக் குக் கேட்டேன்; அதனாலேதான் அப்படி நின்றேன். அந்த முழக்கம்போலவே யிருக்குமல்லவோ வந்தப் பிரா ணியும்; ஆதலா லிதைக்குறித் தென்ன சொல்லுகின்றாயோ அதுவே எனக்குப் பிரமாணம்; இப்போது நீ வழுக்கிவிழு கையி லூன்றுகோல்போற் கிடைத்தாய்' என, தமனகன் 'சுவாமி, தொனியினாலே பயப்படலாகாது. முன்னொரு வன் ஒரு தொனியைக் கேட்டுப் பயந்து பிறகு நெருங் கிப் பார்த்தவுடனே அங்கே தோலுங் கோலு மிருக்கக் கண் டான்' என, சிங்கம் 'அதென்ன என்று கேட்க, தமன கன், 'ஒரு நரி பசியால் வருந்தி இரைக்காகத் திரிந்து திரிந் தொரு போர்க்களத்தில் வரும்போது அங்கே அசதியி லுண்டான ஒரு பெரிய தொனியைக் கேட்டு மிகவும் பய ந்து நான் செத்தேனென்று திடுக்கிட்டது. பிறகு சற்றே முன்னே போனவுட னங்கொரு பெரிய பேரிகையைப் பார்த்து, அடுத்திருக்கிற மரத்தின் கிளை காற்றிலசைந் ததி

லடிக்கத் தொனியுண்டாயிற்றென் றறிந்துகொண்டு அதன ருகே போய்ப் பார்த்து, அங்கே பேரிகையின் றோலுங் கோலுமேயல்லாமல் வேறொன்றுமில்லையெனத் தெளிந்து சந்தோஷமடைந்தது. ஆகலாற் சத்தத்தினாலே மாத்திரம் பயப்படலாகாது. தாங்கள் கட்டளை கொடுத்தா லிந்தச் சத்தத்தின் மூலத்தை யறிந்துவருவேன்' என, சிங்கம் அப்படியே செலவு கொடுத்தது. பிறகு தமனகன் சஞ்சீவக னென்னு மெருதினிடத்திற் போய்ப் பேசி அதைச் சிநேகம் பண்ணிக்கொண்டு, சிங்கத்தண்டை வந்து தண்டம்பண்ணி முன்னே நின்றது. சிங்கம் 'நீ அந்தப் பிராணியை இன்ன தென் றறிந்துவந்தாயா?' என, தமனகன் 'தங்கள் கட் டளைப்படியே போய்ப் பார்த்தேன். முன் தாங்க ளெப் படி நினைத்தீர்களோ அப்படியே புஷ்டியாயிருக்கின்றான். அவன் தங்கணட்பை விரும்புகின்றான். கட்டளையானாற் றிரும்பிப் போய்த் தரிசனத்துக் கிட்டுக்கொண்டு வருவேன்' என, சிங்கம் 'நல்ல தப்படியே யாகட்டும்' என, மறுபடி தமனகன் எருதண்டைபோ யுபசாரத்தோ டழைத்துவந்து ராஜாவைத் தரிசனம் பண்ணுவித்தது. பிறகு பிங்களனுக் குஞ் சஞ்சீவகனுக்கும் வெகு சிநேகமுண்டாய் ராஜாவுக்கு மற்ற யாரு மவசியமில்லாம லிப்படி வெகுகாலங் கழிந்தது. அப்போது பிரதானி புத்திரர்களாகிய கரடக தமனக ரென்னு மிரண்டு நரிகளுக்கு மிரையொன்று மகப்படா மையால் ஆலோசிக்கத் தொடங்கின. தமனகன் 'நாம் காட்டிலே தனித்திருந்த சிங்கத்துடனே எருதைச் சிநே கம் பண்ணுவித்தது, யானையானது தன் மத்தகத்தைக் கொத்துகிறதற்கு அங்குசத்தைத் தானே யெடுத்துப் பாகன் கையிற் கொடுக்கிறதுபோலாயிற்று; மேலும் முன்னாளாட் டுக்கடாச் சண்டையில் நரி செத்ததும், ஆஷாடபூதியின் கூட்டுறவாற் சந்நியாசி பொருளிழந்தது மெப்படி அவரவர் கள் குற்றத்தினாலேயே சம்பவித்தனவோ அப்படியே நம்

முடைய தோஷத்தினாலே நமக்கிரை கிட்டாமற்போயிற்று’ என, கரடகன் ‘அதெப்படிச் சொல்’ என, தமனகன் சொல்லுகின்றது.

‘ஒரு தேசத்தில் தேவசன்மாவென்கின்ற ஒரு சந்நியாசி தான் பிச்சையெடுத்துச் சம்பாதித்த திரவியத்தைக் கந்தைக்குள்வைத்து யார்க்குந் தெரியாமற்றைத்துப் போர்த்துக்கொண்டு பின்னும் பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு திரிய அச்சூதையறிந்த ஆஷாடபூதி யென்னுமொரு திருட்டுப் பிராமணன் இந்தக் கந்தையைமாத்திரமெப்படியாயினுந் திருடிக்கொண்டால் நாமெப்போதுந் திருட்டுவேலை செய்யவேண்டுவதில்லை; நம்முடைய தாசிக்கு வெகுநாளைக்கு நடக்குமென் றாலோசித் தொரு பிரமசாரியைப்போல அந்தச் சந்நியாசினிடத்திற்போய் அவன் காலில்வீழ்ந் தடியேனுக்கு ஞானோபதேசஞ்செய்து இந்த நிசாரமாகிய சமுசார சாகரத்தில் நான் இன்னு மலையாமற் சிறிது கடைக்கண்ணாற் பார்த் தென்னைக் கடைத்தேறப் பண்ணும்; ஓ மகானுபாவா! ஓ பாதுக்கஞ் சகியாத பரம புருஷா! என்றிப்படி யழுத கண்ணுஞ் சிந்திய மூக்குமாகக் கலங்கிநிற்க, அதைப் பாசாங்கென்றறியாத அந்தச் சந்நியாசி, இவன் தலைமேற் கையைவைத்துப் ‘பயப்படாதே’ என்றான். அது முதலாக ஆஷாடபூதி வெகு பயபக்தியுடனே அவன் காலாலிட்ட வேலையைக் கையாற் செய்துகொண்டு, கந்தைக்குச் சமயம் பார்த்துக்கொண் டிருக்குநாளில் ஒருநாள், ஒரு பிராமணன் வீட்டி லிருவரும் விலாப்புறம் வீங்கப் பிட்சை பண்ணிக்கொண்டு வெகுதூரம் வந்தபிறகு ஆஷாடபூதி ஒருவரு மறியாம லொரு துரும்பையெடுத்துத் தன் தலைமேலே வைத்துக்கொண்டு அந்தத் துரும்பைக் குருவுக் கெடுத்துக் காட்டி, ‘ஐயா! நமக்குப் பிட்சை கொடுத்த பிராமணன் வீட்டுத் துரும்பென் றலையிலொட்டிக்கொண்டு வந்துவிட்டதே, ‘அன்னமிட்ட வீட்டிற்

கன்னமிடலாமா? உப்பிட்டவரை யுள்ளளவு நினை' என்று பழமொழியு மிருக்கிறதன்றோ?' என வாய்பதற நடுநடுங்கி 'இதை யந்த அன்ன தாதா வீட்டிற் போட்டுவிட்டிதோ நொடியளவில் வருவேன்' என்று குருக்கள் பார்க்கும்படி பரபரப்பாசச் சிறிதுதூரங் காலடி பிட்டத்திற் படும்படி யோடி, ஒரு செடிமறைவி லுட்கார்ந்திருந்துவிட்டு, பின்பு இரைக்க விரைக்க ஓடிவந் தாசாரியன் காலில் விழுந் தெழுந்து, 'சுவாமி, உம்முடைய அநுக்கிரகத்தி னிந்தப் பாவத்திற்குத் தப்பினேன்' என்றான். இதைப் பார்த்தந்த வேழைச் சந்நியாசி ஆச்சரியப்பட்டு இவன் பரசொத்துக் காசைப்படாத பரமாத்துமாவென்று நம்பித் தன்னுயிர்க் குச் சமானமாக நினைத்திருந்த கந்தையைச் சீஷன் கையிற் கொடுத்தொரு குளக்கரையி லிருக்கச்சொல்லித் தான் ஜல பாதைக்குப் போய்க் காலலம்பப் போனவிடத்தி லிரண் டாட்டுக்கடாக்க ளொன்றோடொன்று முட்டிச் சண்டை செய்ய, அவைகளின் மண்டையிலிருந் தொழுகுகிற உதி ரத்தை உண்ணலாமென்றொரு நரிபோ யிரண்டுக்கு நடுவி லகப்பட்டிறந்தது. அந்த வனர்த்தத்தைப் பார்த்துக் கொண்டு சிறிதுநேரமிருந்தான். அப்போதந்தச் சீஷ னிதுதா னல்ல சமயம், இதுவிட்டாலினிக் கிட்டுமா, காற் றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டுமென்று நினைத்துக் கந்தையைச் சுருட்டிக்கொண் டோடிப்போனான். உடனே சந்நியாசி வந்து பார்த்துச் சீஷனைக் காணாமல், ஓகோ நம்மை ஆஷாடபூதி வஞ்சித்தானே, நாம் மோசம்போனோ மேயென்று திகிற்பட்டு உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப் பாத்தியைப்போ லொருவருடனுஞ் சொல்லாமலிருந்துவிட் டான் என, இதைக் கேட்டுக் கரடகன் 'இதற்கு நான் செய் யத்தக்கதென்ன?' என்று கேட்க, தமனகன் 'யாதொன்று போயிற்றோ அதை மறுபடி சேகரிக்கவேண்டும், எது சம் பாதிக்கவில்லையோ அதைச் சம்பாதிக்கவேண்டும், எதி

ராகவரும் விக்கினங்களைத் தடுக்கவேண்டும், என்றிப்படி யாலோசித்துப் பண்ணுகிறவனல்லவோ மந்திரி. இப்போது நமக்குப் பிங்கள சஞ்சீவகர்களுடைய சிநேகத்தா லெல்லாச் சங்கடமு நேரிட்டது. இவர்களுடைய நட்பைப் பிரித்தாற் றான் நமக் கிவ்வள வன்னங் கிடைக்கும்' என்று சொல்ல, கரடகன் 'அந்தப் பிங்கள சஞ்சீவகர்க ளுறவைக் கெடுக்க யாராலாகும்? மணியினின்று மொளிபிரிக்கப்படுமோ? இது முடியாத காரியமல்லவோ?' என, தமனகன் 'என்ன சொல் லுகின்றாய்? உபாயத்தாலாகிறது பராக்கிரமத்தாலாகுமோ? ஒரு காகஞ் சொர்ணமாலையா லொரு கிருஷ்ண சர்ப்பத் தைக் கொன்றதறியாயோ?' என, கரடகன் 'அதெப்படி?' என்றுவலோடு கெட்கத் தமனகன் சொல்லத் தொடங் கிற்று :—

'ஒரு பெரிய மரத்திற் கூடு கட்டிக்கொண்டு ஆணும் பெண்ணுமாகிய இரண்டு காக்கைகள் நெடுநாள் வாழ்ந் திருக்கும்போது அந்த மரப்பொந்தி லொருநாகம் வந்து சேர்ந்து அந்தக் காக்கையிடுகிற முட்டைகளையெல்லாங் குடிக்கக் கண்டு இதற்கென்ன செய்யலாமென்று மிகவும் வியசனப்பட்டுத் தனக்குச் சிநேகமாகிய நரியிடத்திற் போய் நடந்த சங்கதிகளைச் சொல்லி 'இப்போதாகிலும் முட்டை களைக் காப்பாற்றுகிறதற் கென்ன செய்யலாம்?' என, நரி 'ஒரு நண்டானது வெகு நண்டாசையைக் காட்டிக் கொக் கைக் கொன்றாற்போல் அதை ஒருபாயத்தாற் கொல்ல வேண்டும்' என, காகம் 'நண்டு கொக்கை எப்படிக் கொன் றது? சொல்லுமையா' என, நரி சொல்லுகின்றது :—

'மீன்களையே மிகுதியுந் தின்று வளர்ந்த ஒரு கிழக் கொக்கானது குளக்கரையில் வந்து வியசனமாய் நின்று கொண்டிருந்தது. அப்போ ததிலிருந்த மீன்கள் கொக்கைப் பார்த்து, 'நீ உன்னுகாரத்தை விட்டுச் சும்மா விருப்பா னேன் சொல்' என, கொக்கு 'நான் மீன் தின்பது மெய்

தான்; ஆயினும் இன்றைக்கிங்கே செம்படவன் வந்தெல்லா மீன்களையும் பிடிக்க விருக்கிறதினு லென்னுடைய இரைக ளெல்லாம் நிர்மூலமாய்ப் போகுமே யென்றேங்கிச் சும்மா விருக்கின்றேன்' என, இதைக்கேட்டு மீன்களெல்லாங் கூட்டங்கூடி எவன் நமக்கபாயஞ் சொன்னுனே அவனே உபாயஞ் சொல்லுவானென்றுலோசித்துப் பிறகு கொக்கைப் பார்த்து, 'நீயே எங்களை இப்போதிரட்சி' என, கொக்கு 'நான் செம்படவனோடு சண்டைபண்ணச் சமர்த்தனல்லேன்; மேலும் நான் கிழவன்; உங்களை வேறோரிடத்திற்குக் கொண்டுபோவேன்; அதனு லெனக்கும் இந்தத் தள்ளாமையான காலத்திற் பரோபகாரி யென்கிற பெயரும் வரும்; நீங்களும் வெகுகாலம் பிழைத்திருப்பீர்கள்' என, அப்போது அந்தப் பேதமையான மீன்களெல்லாம் பிராணனைக் காப்பாற் றும்பொருட் டதன் பேச்சை நம்பி, 'நல்ல தப்படியே கொண்டுபோகவேண்டும்' எனக் கெஞ்ச, அந்த வஞ்சனையான கொக்கு நடைக்கொவ்வொன்றுகக் குளத்திலிருக்கின்ற மீன்களையெல்லாம் மூக்கினுற் கௌவிக்கொண்டுபோய்ச் சில மீன்களைத் தின்று, மற்ற மச்சங்களை ஒரு பெரிய பாறையின்மே லுலரவைத்தது. பிறகு அந்தக் குளத்தி லிருந்த ஒரு நண்டு இந்தக் கொக்கைப் பார்த்து 'ஓ சீவகாருண்யனே! என்னையு மவ்விடத்திற்குக் கொண்டுபோக வேண்டும்' என வேண்டிக்கொள்ள, கொக்கு, வருங்காலத்தி லெதுவும் வலியவருமென் றுள்ளுக்குள்ளே சந்தோஷித்து அப்படியே நண்டையுங் கௌவிக்கொண்டு போகும்போது, வழியில் மீன்கள் செத்துக்கிடக்கிறதையும், மீன்முட்கள் சிந்திக்கிடக்கிறதையும், மீன்கள் பாறையின்மே லுலருகிறதையும், நண்டு பார்த்து, 'ஐயோ! இந்தக் கொக்கு, பல மீன்களையுங் கொன்று நம்மையுங் கொல்லவந்தது! நம்மைக் கொல்வதற்கு முன்னமே நாமிதைக் கொல்வோமென்று ஒருபாயம் நினைத்துக் கொக்கைப்பார்த்து 'நீ என்னை வருத்

தப்பட் டெடுத்துக்கொண்டு வந்தா[illegible]
பரிவாரங்கள் இருக்கின்றன; ஆகையால் [illegible] என்னை
நீ மறுபடியுங் கொண்டுபோனால் அவைகளைக் காண்பிப்
பேன்' என, அதைக் கேட்டுக் கொக்குப் பேராசைப்பட்டுத்
திரும்பி அந்தக் குளத்திற்கு நேரே வருகையில் நண்டு
கொடுக்கினால் அந்தக் கொக்கின் கழுத்தை இரண்டுதுண்டாக
நறுக்கிக் குளத்தில் வீழ்ந்து சுகமாய் வாழ்ந்தது. ஆகை
யால் அந்தக் கொக்கைப்போலப் பாம்பையுங் கொல்ல
வேண்டும்' என, காகம் 'அப்படிப் பாம்பைக் கொல்ல நான்
செய்யவேண்டிய உபாயமென்ன?' என்று கேட்க, நரி,
'இப்பட்டணத்து இராஜகுமாரி குளிக்கிற மஞ்சனச்சாலைக்
குப்போ; அவள் ஸ்நானம்பண்ணும்போது ஆபரணங்
களைக் கழற்றி வைத்திருப்பாள்; அந்த ஆபரணங்களி
லொன்றை யெடுத்து ஜனங்கள் பார்க்கும்படி கொண்டுவந்து
அந்த மரப்பொந்திற் போடு.' என்று சொல்ல, காக்கையும்
அப்படியே செய்ய அந்த இராஜனுடைய வேலைக்காரர்
போய் அந்த மரத்தின் பொந்தைப் பிளக்க, நாகஞ் சீறி
வந்தது; வரவே அதை இரண்டு துண்டாய் நறுக்கி யெறிந்
தார்கள். இப்படிக் காகத்தின் காரியம் நிறைவேறிற்று.
ஆகையால் எல்லாம் உபாயத்தாற் கைவசப்படும். எவன்
புத்திமானோ அவன் பலவான். எவனுக்குப் புத்தியில்
லையோ அவனுக்குப் பலமெங்கே? பூர்வம் புத்திபலத்தினால்
ஒரு முயல் சிங்கத்தைக் கொன்றது என, 'அதெப்படி?'
என்று கரடகன் கேட்க, தமனகன் சொல்லுகின்றது:—

'ஒரு நெருங்கிய காட்டில் மதோன்மத்தன் என்னுஞ்
சிங்கமானது அக்காட்டிலிருக்கின்ற மிருகங்களையெல்லாங்
கொன்று தின்று கொழுத்து வெறிகொண்டு திரியும் நாளில்
மிருகங்களெல்லாம் ஒன்றாகத் திரண்டுபோய், 'ஓய் மிரு
கேந்திரா! உம்முடைய காட்டிலிருக்கின்ற மிருகங்களை யெல்
லாம் இப்படிக் கொன்றால் மிருகங்கள நிர்மூலமாய்ப்போம்.

ஆதலால் நாங்கள் தினமொவ்வொன்று உமக்கிரை கொடுத்துக்கொண்டு வருகின்றோம்; அதை நீர் பட்சித்துக்கொண்டிருக்கலாம்' என்று பிரார்த்திக்க, சிங்கம் மெய்தானென்று நம்பி அதற்குடன்பட்டு 'அப்படியே செய்கின்றேன்' என்று சத்தியஞ்செய்து கொடுத்தது. பின்பு அவ்வாறு ஒவ்வொன்றாகத் தின்றுகொண்டு வருநாளில், ஒருநாள் ஒரு கிழமுயலினுடைய முறைவந்தது. அப்போது விலங்குகளெல்லாங் கூடி 'இன்றைக்கு உன் முறை போ' என்று சொல்ல, முயலானது இன்றைக்கு நமக்கு மரணம் வந்தபடியால் இதற்கோருபாயம் யோசிக்கவேண்டும். புத்திமானுக்கெதுதான் கைகூடாது? ஆகையால் நாமிப்போது உபாயத்தாற் சிங்கத்தைக் கொல்வோமென்று ஆலோசித்து, மெள்ள மெள்ள வந்து அச்சிங்கத்தின் பசிவேளை தப்பிவரச் சிங்கம் பார்த்து, 'முயலே! யானையானாலும் என்னுடைய பசிவேளை தப்பி வருகிறதில்லையே; நீ எவ்வளவு பிராணி? இப்படித் தாமசமாய் வரலாமா?' என்று மிகுந்த கோபத்தோடு கையைத் தரையிலே மோதிக் கேட்க, முயல் 'ஐயனே! இதுவென் குற்றமன்று; உம்முடைய பசிவேளைக்கே வந்தேன், வந்த வழியில் ஒரு பொல்லாத சிங்கத்தைக் கண்டு பயந்து ஒளித்திருந்து அந்தச் சிங்கம் போனபின்பு வந்தேன்' என்று சொல்ல, சிங்கம் 'என்னையல்லாமல் இந்தக் காட்டில் வேறே சிங்கம் நீ பார்த்தாயா? காட்டு வா' என்றழைக்க, முயல் அழைத்துக்கொண்டுபோய்ச் சேறும் நீரும் மிகுந்த ஒரு பாழ்ங்கிணற்றைக் காட்டி 'இதிலே யிருக்கின்றது' என்று சொல்ல, சிங்கம் முயலின் பேச்சை நம்பிக் கிணற்றை யெட்டிப் பார்த்து அதிற் றோன்றின தன் நிழலைக் கண்டு அந்தச் சிங்க மிங்கே யிருக்கின்றதென்று நினைத்துக் கோபத்தோடு அதைக் கொல்லவேண்டுமென்று அதிற் பாய்ந்து சேற்றிலழுந்தி யிறந்தது. ஆகையால், எவன் புத்திமானோ அவன் பலவானென்று உனக்குச் சொன்

னேன்' என, கரடகன் 'சிங்கத்தினிடத்திற்குச் சுகமாய்ப் போ, உனக்கு மங்களமுண்டாகட்டும்' என, பிறகு தமனகன் அந்தச் சிங்கந் தனித்திருக்கின்ற சமயம்பார்த்துப் போய்த் தண்டம்பண்ணி, 'சுவாமீ! உமக்கு இன்றைக்கொரு பொல்லாங்கு நேரிட்டது, அதை நானறிந்து கட்டளையில்லாமல் விண்ணப்பம் பண்ணிக்கொள்ளலானேன்' என, சிங்கம் 'அஃதென்ன சொல்' என, தமனகன் 'உம்முடைய மித்திரனாகிய சஞ்சீவகன் உம்மிடத்தில் விசுவாசங் காண்பித்து உம்முடைய இராச்சியத்தைப் பிடுங்கிக்கொள்ள யோசித்திருக்கின்றான். இதை நீர் பொய்யென்று நினைத்துக் கோபித்தாலும் அல்லது தண்டித்தாலும் ராஜனுக்கொரு துன்பம் வரும்போது தன் நலத்தைப் பாராமல் ராஜனுக்கு நல்ல உபாயங்களைப் போதித்துச் செய்யத்தக்க காரியங்களைச் செய்வித்தல் மந்திரிகளுக்கு நீதித்தொழிலாகையால் உமக்கிதைத் தெரிவித்தேன்' என, பிங்களன் இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டுச் சும்மாவிருந்தது. பின்னும் தமனகன் 'நீரவனை முக்கிய பிரதானியாக்கினீர்; அப்படியே யிருக்கட்டும், எனக்கென்ன? ராஜாவும் பிரதானியுஞ் சமானமாயிருந்தால் ராஜலட்சுமி அவ்விருவரிலொருவனைக் கைவிடுவாள்; மேலும் எப்போது ராஜா ஒருவனையே பிரதானியாக்குகின்றானோ அப்போதந்தப் பிரதானிக்குக் கர்வமுண்டாகின்றது. அவன் சுதந்தரனாய் இராச்சிய வாசையால் ராஜாவைக் கொல்ல இச்சிக்கின்றான்; ஆகையால் இப்படிப்பட்ட மந்திரியை வேரோடு களையவேண்டும். இல்லாவிட்டால் அவனால் தீங்கு நேரிடும்; இது தங்களுக்குச் சொல்லவேண்டுமா? தாங்களெல்லா மறிந்திருக்கின்றீர்கள்; உலகத்திற் செல்வத்தை விரும்பாதவன் அருமை' என்றிப்படியெல்லாஞ் சொல்லக் கேட்டுச் சிங்கம் நகைத்து 'சஞ்சீவகனிடத்தில் எனக்கிருக்கின்ற சிநேகம் போகாது; மித்திரர்கள் அநேக அநியாயம் பண்ணினாலும்

அதைப் பிரியமாகவே நினைக்கவேண்டும்' என, தமனகன் 'இதுதான் புத்திக்குத் தோஷம்; இதனால் உமக் கபாயம் வரும்; சாதுக்கள் புத்தியைக் கேளாமல் துட்டர் புத்தியைக் கேட்கிறவனெவனோ அவன் மருந்து தின்னாத ரோகியைப் போல விபத்தையடைவான். காதுக் கினிமையாயும் இதம் பண்ணுகிறதாயு மிருக்கின்ற வசனந் துர்லபம். காதகனு டைய வசனஞ் செவிக் கினிமையாயினும் அதைக் கேட்கலா காது' என, சிங்கம் 'நான் அபயங்கொடுத்து இரட்சித்த வன் எனக்குத் துரோகம்பண்ணுவானோ? என்ன பேச்சுப் பேசுகின்றாய்? போ' என, மறுபடியும் தமனகன் 'துஷ்டர் குணம் மாறுமா? நாயின்வாலைக் குணக்கெடுக்கலாமா? எட் டிமரத்துக்கு அமுதம் வார்த்து வளர்த்தாலும் அதற்குத் தித்திப்புண்டாகுமா? எப்படியும் பிறர்க்கு இதம்பண்ணு வது சாதுக்களுக்கு முக்கிய தருமம். ஆகையால் தாங்கள் கேளாமலிருந்தும் இந்த விருத்தாந்தத்தைச் சொன்னேன். இனிமே லென்மேற் குற்றமில்லை. சிலவேளை ராஜா பாம ரர்களுடைய புத்தியைக் கேட்டுச் சங்கடப்படும்போது காரிய காரர்மேற் குற்றஞ் சுமத்துகிறதுண்டு; ஆகையாற் சொன் னேன்' என்றிப்படிச் சொல்லிச் சும்மாவிருந்தது. அதற் குச் சிங்கம் 'இதை நான் சஞ்சீவகனுக்குச் சொல்லவேண் டும்' என, தமனகன் 'அவனுக்கு இதைச் சொன்னால் அவன் ஜாக்கிரதைப்பட்டு வேறோருபாயத்தாற் பொல் லாங்கு தேடுவான். ஆகையால் இதை அவனுடன் சொல்லா திருப்பதே யோக்கியம். ராஜாவின் மந்திராலோசனை இரக சியமாகவே இருக்கவேண்டும்' என, இதைக் கேட்டு மறு படியுஞ் சிங்கம் 'அந்தச் சஞ்சீவகன் விரோதப்பட்டு என்ன செய்யமாட்டுவான்? அவன் சாமர்த்திய மெவ்வளவு' என்று சொல்ல, நரி 'நாமவனை யறியமாட்டோம்; அவன் பராக்கிரமமும் சுபாவமும் நமக்கெப்படித் தெரியும்? ஒரு வன் குணத்தை யறியாம லவனைச் சேர்க்கலாகாது. சேர்த்

தாலொரு சீலைப்பேன் மூட்டுப்பூச்சியைச் சேர்த்து நாச மடைந்தாற்போலாகும்' என, சிங்கம் 'அஃதெப்படிச் சொல்' என, தமனகன் 'ஒரு ராஜாவின் பஞ்சணையில் மந்தவிசர்ப்பணி என்னுமொரு சீலைப்பேன் நெடுநாளாக வாசம்பண்ணிக்கொண்டிருக்கையில் ஒருநாள் அவன் வீட்டுக்கு டிண்டிபன் என்னும் மூட்டுப்பூச்சி வந்தது. அதைப் பார்த்துச் சீலைப்பேன், 'அப்பா நீ பொல்லாதவன்; முட்களைப்போன்ற பற்களினாலே தூங்குகிறதற்கு முன்னமே துடுக்காய்க் கடிப்பாய்; நீ சமயந் தெரியாதவனாதலால் ராஜ சயனத்தி லிருக்கத்தக்கவனல்ல; இவ்விடம்விட்டோடிப்போ' என்று கடுகடுத்துச்சொல்ல, மூடு 'நான் அப்படிச் செய்யவில்லை; நீ சொன்னபடியே கேட்பேன்' என்று காலில் விழுந்து பிரார்த்திக்க, சீலைப்பேன் மனதிரங்கி, 'நல்லது, நீ வெடுக்கென்று கடியாமல் நித்திரைசெய்யப் பார்த்து மெத்தெனக் கடித்துக் கொஞ்ச ரத்தங் குடித்திரு' என்று சொல்ல அப்போதந்த மூட்டுப்பூச்சி நல்லதென்றிருந்து பிறகு ராஜா விழித்திருக்கும்போதே சுறுக்கென்று கடிக்க ராஜன் திடுக்கென் றெழுந்திருந்து என்னமோ கடித்த தென்று சோதனைக்காரருடனே சொல்ல, அவர்கள் விளக்கைக்கொண்டு சோதிக்க, மூடு கட்டிற் சந்தி லொளித்துக் கொண்டது. அதற்கிடங்கொடுத்த சீலைப்பே னகப்பட்டது. அவர்களதனை 'நீயல்லவா எங்க ளிராசனைக் கடித்தாய்?' என்று நசுக்கிக் கொன்றார்கள். ஐயோ! அது வகைதெரியாம லிறந்தது. ஆகையால் ஒருவன் குணத்தைத் தெரிகிறதற்கு முன்னமே அவனுடனே சகவாசம் பண்ணலாகாது' எனச், சிங்கங் கேட்டு, 'அந்தச் சஞ்சீவகனுடைய துஷ்டசுபாவ மின்னபடியென் றெனக்குத் தெரிந்தா லப்போது ஜாக்கிரதையாய் இருப்பேன்' என்று சொல்ல, தமனகன் 'அந்த எருது உம்மைக் கொல்ல நினைத்துத் தன் கொம்புகளை முன்னிட்டுக்கொண்டு உம்முடைய சந்நிதி

யிலே வரும்போது தங்களுக்குத் தெரியவரும்' என்று சொல்லிவிட்டு எருதினிடத்திற்குப்போய் அங்கே தன் மன தில் மிகவும் வியசனமிருக்கிறதாகத் தோற்றுவித்தது. அப்போது சஞ்சீவகன், 'மித்திரா! சுகமா?' என்று கேட்க, தமனகன் 'சேவகனுக்குச் சுகமெங்கே யிருந்துவரும்? சம் பத்தும் விபத்தும் கூடவே யிருக்கின்றன; ராஜாவுக்குப் பிரியமாய் யாரிருக்கின்றார்கள்? யாசகன் சம்மானத்தை யடை வானோ? இந்தக் காலமேது? தனக்கு மித்திரன் யார்? தன் வலி எவ்வளவென்று எப்போதும் விசாரித்துக்கொண்டிருக் கவேண்டும்' என, இதைக் கேட்டுச் சஞ்சீவகன் 'இப்படி யேன் சொல்லுகின்றாய்?' என தமனகன், 'ராஜகாரியத்தி லுண்டாகிய வஞ்சகத்தை' மற்றொருவரோடு சொல்லலா மோ? ராஜா அறிந்தாற் கொல்லுவான். ஆனாலும் நீ என் நம்பிக்கையாலே சிங்கத்தோடு சிநேகம் பண்ணினதினால் உனக்குச் சொல்லுகின்றேன். அந்தச் சிங்க முன்மேல் மிக வுங் கோபங்கொண்டுன்னைக் கொன்று தன்னுடைய சேனைக் கெல்லாம் நல்ல விருந்திட நினைத்திருக்கின்றது' என்று சொல்ல, அதைக் கேட்டவுடனே சஞ்சீவகன் வருத்தத்தோ டும் ஆலோசித்துக்கொண்டிருந்தது. தமனகன், 'வேறே ஆலோசனை யென்ன? யாதொன்று சம்பவித்ததோ அதற் குத் தக்கதாக நடக்கவேண்டும்' எனச் சஞ்சீவகன், 'நீ சொன் னதெல்லாஞ் சரிதான். உலகத்திலும் அப்படியே இருக் கின்றது. சாதாரணமாய் ஸ்திரீகள் துர்ச்சனர்களுக்கு வச மாயிருக்கின்றார்கள்; ராஜாக்கள் துஷ்டர்களைப் பரிபாலிக் கின்றார்கள்; துஷ்டனை மிகவுஞ் சிநேகித்தால் அவன் விபரீதமாக நினைக்கின்றான்; குருடனுக்குக் கண்ணாடியைக் காண்பித்தாலும் செவிடன் காதில் உபதேசித்தாலும் அவர் கள் விபரீதமாகவே நினைப்பார்கள்; துஷ்டனும் அப்படியே விபரீதமாக நினைக்கின்றான்; எப்படிச் சந்தனமரம் பாம் போடு கூடியிருக்குமோ, எவ்வாறு தாழை முட்களோடு

கூடியிருக்குமோ அப்படியே பெரும்பாலும் ராஜாக்கள் துஷ்டர்களாற் சூழப்பட்டிருக்கின்றார்கள். ஆகையா லிப்படிப்பட்ட பொல்லாங்கு நமக்கு நேரிட்டது' என, இதைக் கேட்டுத் தமனகன், 'அந்தச் சிங்கத்துக்கு வாய்ப்பேச்சு மாத்திரந் தித்திப்பேயல்லாமல் மனது மிகவுங் கடூரந்தான். பூர்வம் பிரமா கடலைக் கடக்கிறதற்குக் கப்பலை யுண்டாக்கினான். இருட்டைப் போக்கடிக்க விளக்கைச் சிருஷ்டித்தான். யானையை அடக்க அங்குசம் நிருமித்தான். துஷ்டர்களுடைய மனதை அடக்கும்படி யாதொன்றுஞ் செய்யாமற்போனான்' என, இவையெல்லாங் கேட்டுச் சஞ்சீவகன், பெருமூச்செறிந்து, 'பெரிய பொல்லாங்கு நேரிட்டது; இதைத் தப்பித்துக்கொள்ள எனக்குச் சாமர்த்தியமில்லை. எமனுடைய வாயில் அகப்பட்டவன் எப்படித் தப்பிப்போவான்? எப்படி யொரு குற்றமுமில்லாத ஒட்டையைக் காக முதலானவை கூடிக் கொலைசெய்தனவோ அப்படியே வஞ்சனைபண்ணுகிற துஷ்டர்கள் ஒருவனிடத்திற் குற்றமில்லாதிருக்கவும் அவனைக் கொலை செய்கின்றார்கள்' என, 'அஃதெப்படி? சொல்லவேண்டும்' என்று தமனகன் கேட்க, சஞ்சீவகன் சொல்லுகின்றது :—

'ஒரு காட்டில் மதோற்கடன் என்கிற ஒரு சிங்கம், நரியையும் புலியையையும் காக்கையையும் தனக்கு மந்திரிகளாக வைத்துக்கொண்டு அரசாண்டுவருகிற காலத்தில் ஒரு நாள் அந்தக் காட்டில் ஒட்டகமொன்று வழிதப்பிவரக் கண்டு, மந்திரியாகிய காக்கை 'நீ யார்' என்று கேட்க, அந்த ஒட்டகம் 'நான் வழி தப்பி வந்துவிட்டேன்' என்று சொல்ல, அதை இட்டுக்கொண்டுபோய்ச் சிங்கத்தினிடத்தில் விட்டு நடந்த காரியத்தைச் சொல்ல, அதைச் சிங்கங் கேட்டு 'பயப்படாதே நம்முடைய மந்திரிகளுடனே நீயுமொரு மந்திரியாயிரு' என்றதற் கபயங்கொடுத்து, மந்தாணகன் என்று பெயரிட்டுத் தன்னிடத்தில் வைத்துக்கொண்

டது. இப்படி வெகுகாலஞ் செல்லுகையில் ஒருநாள் சிங்கத்துக்குச் சரீரம் அசௌக்கியமாயிருந்தபடியினால் அம்மூன்றையு மழைப்பித்து 'இன்றைக் கெம்மாலிரை சம்பாதிக்கக்கூடாது. நீங்கள்போயெனக் கேதாவதிரை கொண்டு வரவேண்டும். பிறகு நான் தின்று மிகுந்ததை நீங்கள் தின்னலாம்' என, இம்மூன்றுஞ் சிங்கத்தின் கட்டளைப்படி அந்தக் காட்டிற்போய் இரை தேடிப்பார்த் தகப்படாமையால் அப்போது தங்களோடு கூடவிருந்த மந்தானகனைத் தூரத்திற் போம்படி ஒரு வேலையிட்டுக் காகம் மற்றை யிருவரையும் பார்த்து, 'இன்றைக்கு நாம் மந்தானகனைக் கொல்லுவோம். புல்லுந் தழையுந் தின்னுகிறவனால் நமக்குப் பிரயோஜனமென்ன?' என, மற்றிரண்டும் 'சரிதான், அவனுக்கு நம்முடைய ராஜா அபயங்கொடுத்திருக்கின்றதினால் அவனை நாமெப்படிக் கொல்லலாம்? கூடாது' என, காகம் 'நாம் இன்றைக்குச் சிங்கத்தின் கையால் தப்பாமல் மரணமடைவோம்; பசியெடுத்தால் தாயும் பிள்ளையை விட்டுவிடுகின்றாள்; பாம்புந் தானிட்ட முட்டைகளைக் குடிக்கின்றது; ஆகையாற் பசியாற் பீடிக்கப்படுகிறவன் எந்தப் பாதகந்தான் பண்ணமாட்டான்? இது உங்களுக்குத் தெரியவில்லையா?' என்று சொல்லி உடனே சிங்கத்தண்டைபோய்க் காகம் 'சுவாமீ! இன்றைக்கெதுவுங் கிடைக்கவில்லை' என 'இதற்கென்ன உபாயம் பண்ணலாம்?' என்று சிங்கங் கேட்க, காகம் 'தங்கள் சுவாதீனத்தில் இரையிருக்கையில் வேறே ஆலோசிப்பானேன்? வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய் தேடலாமா?' என, சிங்கம் 'என்னிடத்தாகார மெங்கே யிருக்கின்றது?' என, காகம் 'மந்தானகனென்னும் ஒட்டையிருக்கின்றதே' என, இதைக் கேட்டுச் சிங்கம் பூமியைக் கையாற்றொட்டுச் 'சிவ சிவா' எனக் காதின்மேற் கையைவைத்து, 'நான் அவனுக் கபயங்கொடுத்திருக்கையில் நீங்க ளிப்படி விபரீத வார்த்தை சொல்ல

லாமா? அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிடலாமா? பசு, பூமி, தானிய மிவற்றின் முனத்தைக்காட்டிலும் அபயதான மதிகம். அசுவமேத புண்ணியத்தைக் காட்டிலும் இந்தப் புண்ணிய மதிகமென்று சாஸ்திரமு மிருக்கின்றதே' எனக் கேட்டுக் காகம் 'ஐயாவே! என்னொரு விண்ணப்பத்தைக் கேட்டருளும். ஒரு குலத்துக்காக ஒருவனை விட்டுவிட லாம்; ஒரு கிராம ரக்ஷணைக்காக ஒரு குடும்பத்தைத் துறக் கலாம்; ஒரு தேச பரிபாலனத்தின்பொருட்டு ஒரு கிராமத் தைக் கைவிடலாம்; தன்னிமித்தம் பூமியை விடலாம்; ஆகையாலிது தப்பன்று. ஆகிலும் அவனைத் தாங்கள் கொல்லவேண்டாம். நாங்களே கொல்லுவோம்; இல்லா விட்டால் அவனே சாக உடன்பட் டென்னைக் கொல்லுங்க ளென்பான். அப்போது நாங்கள் கொல்லுவோம்' என்று சொல்லச் சிங்கஞ் சும்மாவிருந்தது. பிறகு காகம் அதுவே கட்டளையாக நினைத்துக்கொண்டுபோய், மற்றை மூன்றையு மிட்டுக்கொண்டு சிங்கத்தின் கிட்டவந்து, 'சுவாமீ! இன் றைக்கொன்று மாகார மகப்படவில்லை; அதனால் நீங்கள் இன்றைக்குப் பட்டினி யிருக்கலாயிற்று; அப்படி யிராம லென்னைப் புசிக்கலாம்' என, சிங்கம் 'நீ யெவ்வளவு? உன்னை யுண்டதினு லென்பசி தீருமா?' உன்னுடலென் கடை வாய்ப் பல்லுக்குப் போதுமா?' என்று கேட்க, நரி 'அப் படியானு லென்னைத் தின்னும் என்று நிற்க, 'நீயு மப்படி தான். நீ யதிகமல்ல' என்று சிங்கம் மறுக்க, புலி, 'இவ் விருவரிலும் நான் பெருத்திருக்கிறதினுல் என்னைப் பக்ஷித் துப் பசிதீரும்' எனச் சிங்கம் 'நீ தான் எனக் கெவ்வள விரை? உன்னைப் பெரிதாக நினைத்துக்கொண் டிருக்கின் ருயோ?' என்று சொல்ல, ஒட்டக மிதைப் பார்த்து 'சுவாமீ! நான் எல்லாரைக் காட்டிலும் பெருத்திருக்கவில்லையா? சித்தமானுல் என்னைக் கொல்லலாம்' என, இதைக் கேட் டவுடனே புலியும் நரியும் பாய்ந்து விழுந்து அந்த

க்ஷணமே, ஐயோ! அதைக்கொன்றெல்லாம் புசித்தன. ஆகையால் எங்கே மிகவுங் கீழ்க ளிருக்குமோ அங்கே சுகமிராது. பிராணனுக்கு நாசம் வருமென்றே நினைக்க வேண்டும்; இவ்விடத்திலு மப்படியேயிருக்கின்றது. துஷ்டர்கள் கையி லகப்பட்டுச் சும்மா விறக்கிறதைக் காட்டிலும் சண்டை செய்வதே யோக்கியம். ஒருவன் சண்டை முனையிற் செத்தாற் சொர்க்கமடைகின்றான். சத்துருவை ஜயித்தா லிராச்சிய மடைகின்றான். ஆதலாற் சூரர்களுக்குச் சாவும் பிழைப்புஞ் சமானம் என்றது. அதைக் கேட்டுத் தமனகன் 'பகைவர்களுடைய பராக்கிரமத்தை அறியாமல் எவன் பகைத்துக்கொள்ளுகின்றானோ அவன் சமுத்திரம் சிட்டுக்குருவியினா லெப்படி அவமான மடைந்ததோ அப்படியே அவமானமடைவான்' என, அப்போது, 'தம்பீ! அதெப்படி?' என்று சஞ்சீவகன் கேட்கத் தமனகன் சொல்லுகின்றது :—

'சமுத்திரக்கரையில் இரண்டு சிட்டுக்கள் ஆணும் பெண்ணுமாய் ஒரு செடியின்கீழ்க் கூடு கட்டிக்கொண்டிருக்கும் போது, பெட்டை ஆண்பறவையைப் பார்த்து, 'எங்கே முட்டையிடலாம்' என்று கேட்க, ஆண் 'இது நல்லவிடம்' என்று சொல்ல, பெண் 'இந்தக் கடற்கரையில் ஒருவேளை அபாயம் நேரிடும்' என, ஆண்சிட்டு 'சமுத்திரத்திற் கென்னுடனே பகைத்துக்கொள்ளச் சாமர்த்தியமில்லை' என, பெண் 'உனக்கும் சமுத்திரத்திற்கும் வெகு தாரதம்மிய மிருக்கின்றதே; எவன் தன் வலியும் பிறன் வலியும் பார்க்கிறதில்லையோ அவன் விபத்தையடைவான்; எவன் பார்க்கின்றானோ அவன் சுகமடைவான். மேலும் தனக் கிதம் பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவன் ஆமை எப்படிக் கழியைவிட்டு மரணமடைந்ததோ அப்படியே மரண மடைவான்' என, ஆண் 'அஃதெப்படி? பெண்ணே சொல்' எனப், பெட்டைக்குருவி சொல்லுகின்றது:—

'விகட சங்கடங்கள் என்று மிரண்டன்னமும் கம்புக்கிரீவன் என்று மாமையுஞ் சிநேகமா யொருகுளத்தில் வாழ்ந்து கொண்டிருக்கையில், அன்னங்கள் இப்போ திங்கே மழை பெய்யாமையால் குளம் வற்றிப்போ மாகையால் இனி வேறொரு குளத்திற்போய்ச் சேர்வது யோக்கியமென்று நினைத்து இதை நம்முடைய சிநேகிதனுக்குச் சொல்ல வேண்டுமென் றூலோசித்து அப்படியே அதற்குச் சொல்லும்போது, கம்புக்கிரீவன் 'நீங்கள் செப்பட்டையினுற் பறந்துபோவீர்கள், நான் வேறோரிடத்திற் கெப்படிப் போவேன்' என, விகட சங்கடங்கள் 'எங்கள் வார்த்தையில் நம்பிக்கைவைத்து ஸ்திரமா யிருப்பாயானல் உன்னையுங் கொண்டுபோவோம். கொண்டுபோகையில் வழியிலேதொன்றும் பேசாமலிருந்தாற் போகக்கூடும்' என்று சொல்லி, ஒரு கழி கொண்டுவந் தாமையைப் பார்த்து 'இந்தக் கழியைப் பல்லினலே பலமாய்க் கடித்துப் பிடித்துக்கொள்; விட்டுவிடாதே; நாங்களிருவரு மிதை இருபுறத்திலும் மூக்கால் கௌவிக்கொண்டு ஆகாயமார்க்கமாய்ப்போகின்றோம்' என்று சொல்லி அந்தக் கொம்பை இரண்டும் பற்றிக்கொண் டெழும்பிப் பறந்துபோகையில், இதை யொரு பட்டணத்து ஜனங்கள் பார்த்து அதிசயித்து நகைத்து எல்லோரு மொருமிக்க 'இஃதென்ன? ஒரு கழியை இரண்டு பறவைகள் தூக்கிக்கொண்டு அதை ஆமையாற் பிடிப்பித்துக்கொண்டுபோகின்றன' என்றிப்படிப் பேரிரைச்சலிட்டுப் பேசினர்கள். அதைக் கேட்டுக் கம்புக்கிரீவன் இந்த விரைச்சல் எங்கிருந்துண்டாகின்றதென்று சொல்வதற்கு வாய் திறந்தவுடனே கழியினின்றும் விடுபட்டுப் பூமியில் விழுந்தது. அப்போது அங்கேயிருந்த புலாற்றின்பவர்கள் உடனே அதைக் கொன்று தின்றூர்கள். ஆகையால் தனக் கிதம்பண்ணுகின்றவர்கள் பேச்சை அசட்டைபண்ணலாகாது. மேலும் யாதொரு காரியம் நேரிடு

வதற்கு முன்னேதானே ஆலோசிக்கின்றவனும், வருகிற போதே ஆராய்கின்றவனும் சுகமடைவார்கள். இதைவிட்டு யாதொன்று வரத்தக்கதோ அது வரட்டுமென்று யார் சொல்லுகின்றானோ அவன் வந்தபின் காப்போன் என்னும் மீனைப்போல் நாசமடைவான்' என, சேவல் 'அஃதெப்படி' என, பெட்டைச்சிட்டுச் சொல்லுகின்றது:—

'ஒரு பெரிய குளத்தில் வருமுன் காப்போன் என்றும், வருங்காற் காப்போனென்றும், வந்தபின் காப்போனென்றும் மூன்று மீன்கள் அநேகநாளாய் வாழ்ந்துகொண் டிருக்கும் நாளில் ஒருநாள், வலைஞர்வந்து அதில் தண்ணீர் கொஞ்சமா யிருக்கின்றதாகையால் நாளைவந்து அதிலிருக்கிற மீன்களை யெல்லாம் பிடிப்போமென்று பேசிக்கொண்டதை வருமுன் காப்போன் கேட்டுத் தன் சிநேகிதரிடத்திற்குப் போய், 'நாமிவ்விடம்விட்டுச் சீக்கிரமாகப் புறப்படவேண்டும்; இனி இங்கே நிமிஷநேரமு மிருக்கலாகாது' என, இதைக் கேட்டு வருங்காற் காப்போன் 'நமக்கு விபத்து வரும்போது பார்த்துக்கொள்ளுவோம்; காரியம் நேரிடும்போது அதற்குத் தக்கதாகப் புத்தியுண்டாகும்' என, பிறகு வந்தபின் காப்போன் 'தன்னிடத்தை விட்டுவிடுகிறதுதான் மூடத்தனம். எது வரத்தக்கதோ அது வரவே வரும்; யாதொன்று வரத் தகாததோ அதை நாம் வருந்தியழைத்தாலும் வராது. ஆதலால் நான் வரமாட்டேன்' என்று சொல்லி அந்தக் குளத்திலேயே இருந்தது. பிறகு வருமுன் காப்போன் 'வேறிடத்துக்குப் போய்விட்டது. மறுநாள் உதயத்திற் செம்படவர் வந்து வலையெறிந்து மீன்களைப் பிடித்தார்கள். அதில் வருங்காற் காப்போன் அகப்பட்டுச் செத்தாற்போற் பாசாங்கு பண்ணிக்கொண்டிருந்தது. அதைப் பார்த்து இது செத்ததென்றெண்ணிக்கொண்டு செம்படவன் அதைக் கரைமேற் போட்டுவைத்தான். இதற்குள்ளே அது அவன் கண்ணுக்குத் தப்பித் தண்ணீரிற் புகுந்து ஒளித்துக்கொண்டது. பிறகு வந்த

பின் காப்போன் வலைக்குள் அகப்பட் டிப்போ தென்னசெய் யலாமென் றங்குமிங்கு மோட, இதைச் செம்படவன் கண்டு தடியாலடித்துக் கொன்றான். மற்றிரண்டுஞ் சுகமடைந்தன. ஆகையா லெதையு மாலோசித்துச் செய்யவேண்டும்' என்று சொல்லிப் பிறகு புருஷன் சொற்படி அங்கே தானே முட்டையிட்டது. அப்பொழுது, சமுத்திர மதன் வல்லமையை யறியாமல் முட்டைகளை யடித்துக்கொண்டுபோயிற்று. சிட்டு அதைப் பார்த்து வெகு துக்கமாய்ச் சேவலுடன், 'சுவாமீ! தங்களுக்குப் பெரிய சங்கடம் வந்தது; முட்டைகளைச் சமுத்திரங் கொண்டுபோயிற்று; இப்போ தென்னசெய்ய லாம்?' என, சேவல் 'நீ பயப்படாதே, நான் முட்டைகளைக் கொண்டுவருவேன்; என் திராணியைப் பார்' என்று சொல்லி எல்லாப் பறவைகளையுங் கூட்டிக்கொண்டு கருடனைச் சரணமடைந்தது. கருடன் அதை விஷ்ணுவுக் கறிவித்து 'அப்பறவை மிகவும் வருத்தப்படுகிறதாகையால் அதன் முட்டைகளைக் கொடுப்பிக்கவேண்டும்' என, விஷ்ணு சமுத்திரத்தைப் பார்த்து, 'அதன் முட்டைகளைச் சீக்கிரமாய்க் கொடு' என்று கட்டளையிட்டவுடனே, சமுத்திரம் முட்டைகளை கொண்டுவந்து கொடுத்தது. ஆகையால் சத்துருக்களுடைய பராக்கிரம மறியாமற் பகைத்துக் கொள்ளலாகாது. அந்தச் சிங்கத்திற் ககங்காரத்தினால் தெரியவில்லை' எனக் கேட்டுச் சஞ்சீவகன் தமனகனைப் பார்த்து, 'நல்லது அந்தச் சிங்கத்தின் சண்டைக்குறிப்பு எப்படியிருக்குஞ் சொல்' என, தமனகன் 'எப்போது அவன் காதுகளை நெறித்துக்கொண்டு வாலைத் தூக்குவானோ அப்போது கொல்ல நினைத்தானென் றறியவேண்டும். அக்காலத்தில் அப்படியே நீயு மவனுக்கு முன்னே யிருக்கவேண்டும். சுத்த வீரனாகிய உனக்குத் தெரியாதா? எல்லாந் தெரிந்தவர்களுக்குச் சொல்வானேன்?' எனச் சொல்லிவிட்டுத் தமனகன் மறுபடி கரடகனிடத்திற்குப் போயிற்று.

அப்போது கரடகன் 'என்னவாயிற்றுச் சொல்' என, தமனகன் 'காரிய முடிந்தது; இருவருடைய சிநேகத்தின் வாயிலும் மண் விழுந்தது. இப்போது நான் சிங்கத்தின் கோபக்குறி இப்படி யிருக்குமென்று சஞ்சீவகனுக்குச் சொன்ன படியே செய்விக்கின்றேனென்று பிங்களனிடத்திற்குப் போய் அப்படியே அதைச் செய்வித்தது. பிறகு சஞ்சீவகன் சிங்கமிருக்கு மிடத்திற்குவந்து பார்க்கும்போது, தனக்குத் தமனகன் முன் சொன்னபடியே யிருக்கக்கண்டு, மிகவும் விசனமடைந்து, பராக்கிரமத்தினாலேயே பிராணனை விடவேண்டுமென்று நிச்சயித்து யுத்தத்திற் காரம்பிக்கவே இரண்டுக்கும் பெரிய சண்டை விளைந்தது. கரடகன் அதைப் பார்த்து, 'தமனகா! துஷ்டா! உன் சேர்க்கையால் ராஜாவுக்குஞ் சிநேகனுக்குஞ் சண்டையுண்டாயிற்று. ராஜநீதியிற் சாமபேத தானதண்டமென்னும் நான்குபாயங்களிருக்கின்றன. அவைகளிற் சாமமென்னும் உபாயம் முக்கியமானது. அதனாற் காரியசித்தி யுண்டாகிறதுபோல மற்றவைகளா லுண்டாகாது. பகையிருந்தாலும் சாமவுபாயத்தாலேயே போம். இப்படியிருக்கையில் நீ ராஜாவைப் பெரிய பொல்லாப்பில் வீழ்வித்தாய். ராஜாக்களிற் சிலர் ஈனர்களுடைய புத்தியைக் கேட்டுச் சங்கட மடைகின்றார்கள். ஆகையாற் குணவந்தர்களுடைய கூட்டுறவு ராஜாக்களுக் கிருக்கவேண்டும். கபடியாக விருக்கின்ற பிரதானி புத்திசாலியானாலும் அவன் ஒருபோதும் ராஜாவண்டையி லிருக்கலாகாது. மேலும் தானே சம்பத்தை யடையவேண்டுமென்று நினைத்து ராஜாவினிடத்தில் வேறொருவன் சேரலாகாதென் றிச்சிக்கிறவனும், ராஜாவுக்கு உபயோகியாகான். பலபெயர் சமர்த்தர்கள் ராஜாவினிடத்திலிருந்தால், ராஜா பிரகாசிப்பான். ஆசைக்காரருந் துஷ்டருமாகிய இவர்களுடைய கூட்டுறவால் ராஜா பிரகாசிக்கமாட்டான். தன்னைவிட ராஜாவினிடத்தில் வெறொருவ

னிருக்கலாகாதென்று யார் இச்சிக்கின்றனோ அவனே ராஜா வுக்குச் சத்துருவென்று நினைக்கவேண்டும். அப்படியே நீ இந்தத் தீங்கு விளைத்தாய். எசமானனுடைய தயை கிடைத் தாற் சேவகர்கள் கர்வங்கொள்ளாமல் மிகவும் அடக்கமாக இருக்கவேண்டும். நீ அதைவிட்டு விபரீதமாக நடக்கின் றாய். 'பிதாவைப்போ லிருப்பான் புத்திரன்' என்பதை நீ பொய்யாக்கினாய். இப்போது உனக்கு நானென்ன சொல்வேன் ? கொக்கு குரங்குக் குபதேசம்பண்ணி யெப்படி இறந்ததோ அப்படி உன்னாலே நான் மரணமடைவேனென் றெனக்குத் தோன்றுகின்றது' என் றிப்படிக் கரடகன் சொன்னதைக் கேட்டுத் தமனகன் 'அஃதெப்படி? சொல்' என, கரடகன் சொல்லுகின்றது :—

'ஒருநாட் குளிரால் வருத்தப்படுகிற குரங்குக்கூட்டம் மின்னும்பூச்சிக் கூட்டத்தைப் பார்த்து இது நெருப்பென்று நினைத்துக் குளிர்காய்வதற்காக அதனருகே போயிற்று. அப் போ தங்கே ஒருமரத்தின்மேலிருந்த சுமுகன் என்னுமொரு பறவை இதைப் பார்த்துக் குரங்கினருகே வந்து, 'இது மின்மினிப்பூச்சி, நெருப்பன்று' என்று சொன்னவுடனே அந்தக் குரங்குக்கூட்டத்தி லொன்று கோபித்து அந்தப் பக்ஷியைப் பிடித்து 'நீ யெனக்குப் புத்திசொல்லுகிறவனா? என்று கல்லிலறைந்து கொன்றது. ஆகையால் துஷ்டர்க ளுக் குபதேசம் பண்ணலாகாது' என்று கரடகன் சொல்ல, தமனகன் ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்து, மன தில் மிகவும் விசனப்பட்டு 'நான் இந்தப் பாதகம் பண்ணி னேன்' என்று சொல்ல மறுபடியுங் கரடகன் 'அடா தமனகா! இப்படிப்பட்ட நடக்கையினாலே துஷ்டபுத்தி யைப்போல நீயும் நாசமடைவாய்' என, அப்போது தம னகன் 'துஷ்டபுத்தி எப்படிக் கெட்டான்? சொல்' என, கரடகன் சொல்லத் தொடங்கிற்று :—

'துஷ்டபுத்தி, சுபுத்தி என்றிரண்டு செட்டிப் பிள்ளைகள் பணஞ் சம்பாதிப்பதற்காகத் தேசாந்தரம் போனார்கள். அவ்விடத்திற் சுபுத்திக்குப் பூமியில் ஒரு பணப்புதையல் அகப்பட்டது. அதைச் சிநேகத்தினாலே துஷ்டபுத்திக்கு உடனே சொல்ல, துஷ்டபுத்தி 'அந்தத் திரவியத்தை அங்கேயே புதைத்துவிட்டுக் கொஞ்சம் பணமெடுத்துக்கொண்டு போவோம்' என, சுபுத்தி சிநேகத்தினால் அதற்குச் சம்மதித்துப் பிறகு அதிற் கொஞ்சம் பணமெடுத்துக்கொண்டு மற்றப் பணத்தை ஒரு மரத்தடியிற் பள்ளந்தோண்டி அதிலே புதைத்துவைத்துப் பின்பு வீட்டுக்குப் போய்ப் பழையபடி சிநேகமாயிருக்கையில் ஒருநாள் துஷ்டபுத்தி தனியேபோய் அந்தப் பொருளையெல்லாம் எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டான். சிலநாட் கழித்துத் துஷ்டபுத்தி சுபுத்தியைப் பார்த்து 'நாம் போய் நம்முடைய அந்தத் திரவியத்தைக் கொண்டுவருவோம்' என, இருவரும்போய் அந்த விடத்திற் பார்க்குமளவில் அங்கொன்றுமில்லாமையால் துஷ்டபுத்தி மிகவும் வருத்தத்தோடு சுபுத்தியைப் பார்த்து 'இங்கிருந்த பணத்தை நீயே கொண்டு போனாய்; மேலுங் கபடமாய் வருத்தப்படுகின்றாய்' என்று சொல்லிக் கலக்கப்பட்டு இதை ராஜாவுக் கறிவித்தான். ராஜா நியாயாதிபதியை அழைப்பித்து 'இதைப் பஞ்சாயத்தில் தீர்க்கவேண்டும்' எனக் கட்டளையிட, அவன் 'ஐந்து நாளைக்குள்ளே திர்த்துப்போடுகிறேன்' என்று ராஜாவின் முன்னே கெடுவைத்துக்கொண்டு வந்து சஞ்சாயத்துக் காரம்பித்தான். அப்போது துஷ்டபுத்தி 'எனக்குச் சாக்ஷியிருக்கின்றது; அந்தச் சாக்ஷியை இப்போதே கேட்கலாம்' என, பஞ்சாயத்தார் 'உன் சாக்ஷியைக் கொண்டுவா' என, துஷ்டபுத்தி வீட்டுக்குப் போய்த் தன் தகப்பனுடனே சொல்லுகின்றான், 'அப்பா! உன்னுடைய ஒரு பேச்சால் எனக்குப் பதினாயிரம் வராகன் கிடைக்கும்' என, கிழவன்

'எப்படிக் கிடைக்குஞ் சொல்' என துஷ்டபுத்தி 'நீ மரப் பொந்தில் இராத்திரிக்குப்போய் உட்கார்ந்திருக்கவேண்டும்; அங்கே நியாயாதிபதி முதலானோர் வந்து அங்கிருந்த பணத்தை யார் கொண்டுபோனார்க ளென்னும்போது, நீ சுபுத்தி கொண்டுபோனா னென்றாற் காரியமாகும்' என, இதைக் கேட்டுப் பிதா 'பொல்லாங்கு நேரிடுகிற காரியத் தைப் பண்ணிச் சுகமடைய வேண்டுமென் றிச்சிக்கிறது கொக்கைப்போல் மூடத்தனமாயிருக்கின்றது' என, துஷ்ட புத்தி 'அஃதெப்படி?' என, பிதா சொல்லுகின்றான்:—

'தான் பொரிக்கின்ற குஞ்சுகளையெல்லாம் ஒரு பாம்பு தின்னப் பறிகொடுத்துக்கொண்டு வருகிற ஒரு மூடக்கொக்கு அப்போது பொரித்த தன் குஞ்சுகளைக் காப்பாற்றுகிற தைக்குறித்து என்ன செய்யலாமென்று பெண்கொக்கோடு கூட ஏரிக்கரையி லுட்கார்ந்து ஆலோசித்துக்கொண்டிருக் கையில் அக்கொக்கின் சிநேகனாகிய குளிரன் என்னும் பெயரையுடைய நண்டானது கொக்குகளைப் பார்த்து 'இன் றைக்கு நீங்கள் ஏன் வியாகுலமா யிருக்கின்றீர்கள்' என, அவைகள் தங்கள் விருத்தாந்தமெல்லாஞ் சொல்லக் குளி ரன் அதைக் கேட்டு ஆண்கொக்கைப் பார்த்து, 'நல்லது உனக்குப் பாம்பைக் கொல்லுகிற உமாயமொன்று சொல்லு கின்றேன். கீரிப்பிள்ளையின் வளைமுதற்கொண்டு பாம்பி ருக்கு மிடமட்டும் மீன்களை யிறைத்துவைத்தாற் காரியஞ் சித்தியாகும்' என்றது. கொக்கு அப்படியே செய்யக் கீரிப் பிள்ளை தன் வளையினின்றும் புறப்பட்டு மீன்களைத் தின்று கொண்டே போய்ப் பாம்பையுங் கடித்தெறிந்துவிட்டுக் கொக்கின் குஞ்சுகளையுஞ் சாப்பிட்டது. ஆகையால் இப் படிப்பட்ட ஆலோசனை பண்ணலாகாது' என, துஷ்ட புத்தி பிதா சொன்னதைக் கேளாமல் அவனை வலுவி லிழுத் துக்கொண்டு வந்து, மரப்பொந்தி லுட்காருவித்து, விடியற் காலத்தில் நியாயாதிபதி முதலான பேரையுஞ் சுபுத்தி

முதலானோரையும் அவ்விடத்திற் கிட்டுக்கொண்டுபோய் 'சாட்சி இந்த மரத்தைக் கேளுங்கள்' என்றான். அப்போ தந்த மரத்திலிருந்து 'இங்கிருந்த பணமுழுதுஞ் சுபுத்தியே கொண்டுபோனான்' என்றொரு சத்தம் புறப்பட்டது. சுபுத்தி 'இதென்ன மோசமாயிருக்கின்றது? இங்கே ஒரு பிராணியு மில்லாமல் தொனி எங்கேயிருந்து புறப்பட்டது? இது தெய்வீகமாகவிருந்தால் மெய்யல்லவோ சொல்லவேண்டும்' என்று இப்படித் தனக்குள் எண்ணமிட்டுக்கொண்டு அந்த மரத்தின்மேலேறிச் சோதிக்கையில் அதிலொரு பொந்து காணப்பட்டது. உடனே இங்கே கிருத்திரமம் இருக்கு மென்றெண்ணி அங்கே நெருப்பை மூட்டிப் பற்றுவித்தான். உள்ளேயிருந்த கிழவன் பாதி வேகிறமட்டும் பல்லைக் கடித் துக்கொண்டிருந்து, பொறுக்கமுடியாமல் அலறிக்கொண்டு வெளியேவந்து விழுந்தான். அப்போது அங்கிருந்தோரெல் லோரும் இதென்ன! இதென்ன! எனக் கேட்கக் கிழவன் 'என் பிள்ளை துஷ்டபுத்தி கபடத்தினால் என்னைப் பலாத் காரமாகக்கொண்டுவந்து இங்கேவைத்தான்' என்றுசொல்லி இறந்துபோனான். நியாயாதிபதி இதைப் பார்த்து, ராஜா வுக்கு விண்ணப்பம் பண்ண, பிறகு துஷ்டபுத்தி வாயினா லேயே ராஜா எல்லாமறிந்துகொண்டு அவனைக் கழுவி லேற்றினான்' என்று சொல்லிப் பின்னுங் கரடகன் தமனக னைப் பார்த்து 'பாம்பை வெகுநாள் வளர்த்தாலும் அதெப் படியும் வளர்த்தவனையே கடிக்கும்; ஆகையால் எனக் குன்னிடத்திற் பயம் தோன்றுகின்றது. இனிமேல் உன்னி டத்தில் தேவதத்தனைப்போல் நடந்துகொள்ளவேண்டும்' என, அதைக் கேட்டுத் தமனகன் 'தேவதத்தன் எப்படி நடந் துகொண்டான் சொல்' என, கரடகன் சொல்லுகின்றது:—

'ஒரு பட்டணத்தில் தேவதத்தன் என்னுமொரு சாவ காரி தான் திரவியமிழந்துபோனதினால் மறுபடி திரவி யஞ் சம்பாதிக்க நினைத்துத் தேசாந்தரம் போகப் புறப்

படும்போது, தன் வசத்திலிருந்த ஆயிரம் இருப்புக்கம்பிகளை அவ்விடத்திலிருந்த தன் சிநேகிதனிடத்தில் வைத்துவிட்டுப் போனான். போனவிடத்தில் திரவிய சம்பாத்தியத்தைக் குறித்து அநேக உபாயம் பண்ணியும், பணமகப்படாமையால் மீண்டும் வீட்டுக்கு வந்து தன்னுடைய இருப்புக்கம்பிகளைக் கேட்டான். வைத்துக்கொண்ட சிநேகிதன் மிகுந்த துராசையினால் 'இருப்புக்கம்பிகளை எலிகள் தின்றுவிட்டன' என்றான். இவனிந்த அபூர்வத்தைக் கேட்டு நல்லது இருக்கட்டுமென்று சொல்லி வீட்டுக்குப் போய்விட்டான். பிறகொருநாள் சிநேகிதன் பிள்ளையை விளையாடுகிறதற்காக அவனிடத்திலிருந்து எடுத்துக்கொண்டுபோய் மற்றொரு வீட்டி லொளித்துவைத்துவிட்டுப் பின்பு சிநேகிதனிடத்தில் வந்து உட்கார்ந்தான். அவன் 'உன்னிடத்திலிருந்த என் பிள்ளை எங்கே?' என, சாவகாரி 'உன் பிள்ளையைப் பறவை தூக்கிக்கொண்டு போயிற்று' என்றான். இதை 'அவன் கேட்டு மிகவும் கிலேசப்பட்டு இவனை இழுத்துக் கொண்டு ஊரதிகாரியண்டைபோய், இந்தத் துஷ்டன் என் பிள்ளையைக் கொண்டுபோய் ஒளித்து வைத்துவிட்டுப் பிள்ளையைப் பட்சி எடுத்துக்கொண்டுபோயிற்று என்கின்றான்; என் பிள்ளையை எனக்குக் கொடுப்பிக்கவேண்டும்' என, அதிகாரி இதைக் கேட்டுச் சாவகாரியை அழைத்து, 'இவன் பிள்ளை எங்கே யிருக்கிறது சொல்' என, அவன் 'இவன் பிள்ளையைப் பட்சி கொண்டுபோயிற்று' என, அதிகாரி இதைக் கேட்டுக் குலுங்க நகைத்து 'இந்த அசம்பவம் இதுவரைக்கும் உலகத்திலில்லை; அப்படியிருக்க, நீ எப்படிச் சொல்லுகின்றாய்?' என, அப்போது அவன் 'இது ஓர் ஆச்சரியமா? எப்படி இரும்புக் கம்பிகளை எலிகள் தின்றுவிட்டனவோ அப்படியே அதுவுஞ் சம்பவித்த தாண்டவனே' என, இதைக் கேட்டு நியாயாதிபதி முன்னடந்தவைகளை விசாரித்தறிந்துகொண்டு அவனுடைய இரும்

புக்கம்பிகளை நீ கொண்டுவந்து கொடுத்தால் அவனுன் பிள்ளையைக் கொண்டுவந்து கொடுப்பான் என்றவுடனே அவ்விருவரு மப்படியே செய்து தங்கள் வீட்டுக்குப் போனார்கள் என்று இப்படிப்பட்ட கதைகளைச் சொல்லிப் பின்னுந் தமனகனுக்குக் கரடகன், 'சொன்ன பொருளைத் தெரிந்துகொள்ளாதவன் கல்லுக்குச் சமானம்; அவனுக்குபதேசித்துப் பலனில்லை' என்று சொல்லி கரடக தமனக நரிகளிரண்டும் பிங்களனிடத்திற்குப் போகும்போது சிங்கம் சஞ்சீவகனோடுகூடச் சண்டைபண்ணி அதைக் கொன்றுவிட்டு விசனமா யுட்கார்ந்திருந்தது. இதைக் கண்டு தமனகன் ராஜாவைப் பார்த்து 'சுவாமீ! தாங்கள் சத்துருவைக் கொன்று துக்கப்படுகின்றீர்கள்; இது நியாயமல்லவே; சத்துருவைக் கொல்லவேண்டுமென்று சாஸ்திர மிருக்கின்றது. பிதாவானாலும், பந்துவானாலும், புத்திரனானாலும், மித்திரனானாலும் இவர்களில் யார் தன்னைக் கொல்லப் பிரவர்த்திக்கின்றானோ அவனை ராஜா கொல்லவேண்டும்; சுதந்தரையாயிருக்கின்ற பெண்சாதியும், துஷ்ட சிநேகிதனும், விபரீத சேவகனும், அசாக்கிரதையான மந்திரியும், நன்றியறியாதவனும் இருக்கலாகாது; மேலும் மெய், பொய், கடுமை, மென்மை, கொலை, தயை, உதாரத்துவம், உலோபத்துவம், பலவழியாகத் திரவியஞ் சம்பாதித்தல், வெகுபெயருடைய சிநேகம் இப்படிப்பட்ட பல குணங்கள் ராஜாவுக் கிருக்க வேண்டுமென்று ராஜநீதியிலிருக்கின்றன; அப்படியே தாங்களிது செய்தீர்கள்' என்று சொல்லித் தமனகன் சிங்கத்தைச் சந்தோஷிப்பித்தது. பிறகு சிங்கம் அந்தக் காட்டில் முன்போலத் தன்னிராச்சியத்தை அனுபவித்துக்கொண்டு சுகமாயிருந்தது.'

இ ர ண் ட ா வ து

## சுகிர்ல்லாபம் அல்லது நட்புப்பேறு

'புத்திசாலிகளா யிருக்கின்ற சிநேகிதர்கள் திரவியமில் லாதிருந்தாலும், வேறே சாதனங்கள் இல்லாதிருந்தாலுங் காகமும், எலியும், ஆமையும், மானும் நட்பினால் ஒன்றை யொன்று காப்பாற்றினாற்போல் ஒருவர்க்கொருவர் உதவு வார்கள்' என்று சோமசன்மா சொல்ல, இராசகுமாரர்கள் 'அஃதெப்படி?' என, அவன் சொல்லத் தொடங்கினான்:—

'கோதாவரி நதிக்கரையில் ஒரு பெரிய வன்னிமரத்தில் இலகுபதனன் என்னுங் காகம் வாசஞ்செய்துகொண்டிருக் கையில் ஒருநாள் விடியற்காலத்தில் அங்கே யமனைப்போல மிகவும் பயங்கரமான ஒரு வேடன் வந்தான். இலகுபதனன் அவனைப் பார்த்துப் பயப்பட்டு, 'இந்தத் துராத்மா என்ன பண்ணுவானோ தெரியவில்லை; ஆகையால், இதைச் சோ திக்கவேண்டும்' என்று இரைதேடுகின்ற யத்தனத்தை விட்டிருக்க, இதற்குள்ளே அவ்வேடன் வலையை விரித்துப் பலவகைப்பட்ட தானியங்களையுந் தெளித்து அங்கே ஒரு செடி மறைவிற் பதுங்கிக்கொண்டிருந்தான். அதன்பிறகு தன் பரிவாரத்தோடும் அந்த மரத்தில் வந்திறங்கின சித் திரக்கிரீவன் என்னும் புறுவரசு அங்கே இறைந்திருக்குந் தானியத்தைப் பார்த்துத் தன் பரிவாரப் புறுக்களுடனே 'இந்த நிர்மானுஷியமான காட்டில் தானிய மெப்படி வரும்? யாராகிலுங் கொண்டுவந்து போட்டிருக்கவேண்டும்; இது நமக்குத் தெரிந்தாலல்லாமல் இதைப் பக்ஷிக்கலாகாது; ஒரு பிராமணன் பொற்காப்புக்கு ஆசைப்பட்டுப் புலியினால் எப்

படி மரணமடைந்தானே அப்படி இஃது ஏதோ ஒரு விப ரீதமாகத் தோற்றுகின்றது' எனப் புறுக்கள் அதைக் கேட்டு 'அஃதெப்படி? ராஜாவே!' எனச் சித்திரக்கிரீவன் சொல் லுகின்றது:—

'நான் தென்காட்டில் மேய்ந்துகொண்டிருக்கையிற் பார்த்தேன், அதைக் கேளுங்கள்: ஒரு கிழப்புலி பலவீனத் தால் ஆகாரஞ் சம்பாதிக்கக்கூடாமல் ஒரேரிக் கரையில் நீராடிக் கையில் தருப்பையை வைத்துக்கொண்டு உட்கார்ந் திருக்கையில் ஒரு பிராமணன் அந்த வழியில் வந்தான். புலி அவனைப் பார்த்து, 'ஓ பிராமணா! இந்தப் பொற்காப்புத் தருகின்றேன் வா' என, இதைக் கேட்டு அந்தப் பிராமணன் இந்தக் காப்பு நமக்கு வலியக் கிடைக்கின்றது; மரணத்துக் கிடமாகிய புலியின் கிட்டப் போகலாகாது; ஆகையால் இந் தக் காப்பில் ஆசை வைக்கலாகாது என்போமானால், மரணத் துக்கு நாலண்டையும் வழியாகையால் இதைக் குறுத்துப் பிரயத்தனம் அவசியம் பண்ணவேண்டும்' என்று தன் துராசைக் கேற்பத் தனக்குள்ளே ஆலோசித்து நிச்சயித் துக்கொண்டு புலியை நோக்கி 'ஓ புலியாரே! காப்பெங்கே யிருக்கின்றது?' எனப் புலி கையில் வைத்துக்கொண்டு 'இதோ பாரும் பிராமணோத்தமரே!' எனக் காண்பித்தது. பிராமணன் 'உன்னிடத்திலெனக் கெப்படி நம்பிக்கையுண் டாகும்?' எனப் புலி 'நான் வைகறையில் மூழ்கி நித்திய தானம் பண்ணிக்கொண்டிருக்கின்றேன்; நகமும் பல்லும் போன கிழவனுயிருக்கின்றேன்; இப்போது என்னிடத்தில் நம்பிக்கையில்லையா?' வேட்டல், ஓதல், கொடுத்தல், தவம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசையின்மை என்னு மிவ்வெட்டுத் தருமங்களையும் நான் அறிந்திருக்கின்றேனாதலின் இந்த அபூர்வ வஸ்துவை யார்க்காகிலுங் கொடுக்க இச்சிக்கின்றேன். இதனால் என்னிடத்தில் நற்குண மிருக் கின்றனவென்றும் எள்ளளவாகிலுந் துர்க்குண மில்லையென்

றும் அறியவில்லையா?' என, அப்போது பிராமணன் 'இது மெய்தான், ஆனாலும் புலி மனிதனை அடித்துத் தின்னு கின்றதென்று மிகவும் லோகாபவாத மிருக்கின்றதே' எனப் புலி 'நான் தருமசாஸ்திரமு மறிந்திருக்கின்றேன்; தன் பிராணன் தனக்கு எப்படித் தித்திப்போ அப்படியே எல்லார்க்கு மிருக்குமென்றறிந்து, சாதுக்கள் பிராணிக ளிடத்தில் தயையாயிருக்கின்றார்கள்; தன்னைப்போலச் சுக துக்கங்களைப் பிறரிடத்தில் நினைக்கின்றார்கள்; நீ மிகவும் தரித்திரனாகையால் உனக்குக் கொடுக்க யத்தனிக்கின் றேன்; சாஸ்திரமு மிப்படியே யிருக்கின்றது; எப்படியும் ஏழைக்கே கொடுக்கவேண்டும்; செல்வமுள்ளவனுக்குக் கொடுக்கலாகாது; மருந்து நோயாளிக்கு எப்படிக் குணங் கொடுக்குமோ அப்படி நோயில்லாதவனுக்காகுமா? நீ இந்த ஏரியிலே மூழ்கிவந்து காப்பை வாங்கிக்கொண்டு வீட்டுக் குப் போ' என்றவுடன் ஐயோ! பிராமணனுக்குப் பின் புத்தியாகையாற் அவ்வேதியன் புலியின் பேச்சை நம்பி ஸ்நானம்பண்ணுகிறதற்காக ஏரியி லிறங்கினவுடனே, உளை யிற் புதைந்து காலைப் பிடுங்கிக்கொண்டு வரக்கூடாமல் திகைத்தான். புலி அதைப் பார்த்து, 'பிராமணா! பயப்ப டாதே; நானுன்னைச் சேற்றினின்று மெடுக்கின்றேன், சற் றிரு' என்று சொல்லிக்கொண்டு மெல்லெனப் போய் அவ னைப் பிடித்துக்கொண்டது. அப்போது பிராமணன் எண் ணமிடுகின்றான்; 'துஷ்டர்கள் வேதாத்தியாயனம் பண்ணி யிருந்தாலும் தருமசாஸ்திரம் அறிந்திருந்தாலும் அவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைக்கலாகாது. எவன் சுபாவ மெப்படியோ அஃதெப்போதும் போகாது. இப்படியிருக் கையில் நம்முடைய ஜாதிக்கியல்பா யிருக்கின்ற பேராசை யினால் இந்தத் துட்டனிடத்தில் விசுவாசம்வைத்து மோசம் போனேம்' என்று இப்படிப் பச்சாத்தாபப்பட்டுக்கொண் டிருக்கையில் அந்தப் புலி அவனைக் கொன்று தின்றது.

ஆகையால் மிகவும் ஆலோசனைபண்ணி யாதொன்று செய்யத்தக்கதோ அதைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் யாதொரு தீங்கும் நேரிடாது' என்றிப்படிச் சித்திரக்கிரீவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு ஒரு புறா கர்வத்தோடு 'இப்படி ஆலோசித்தால் ஓரிரையும் நமக்ககப்படாது; மேலும் வெட்கப்படுகின்றவன், பொறுமையுள்ளவன், சந்தோஷப்படாதவன், குரோதமுள்ளவன், நீசாச்சந்தேகமுள்ளவன், பிறர் பொருளால் ஜீவிக்கின்றவன், இந்த ஆறு பேரும் துக்கத்தையே அநுபவிப்பார்கள்' என, இதைக் கேட்டுப் புறாக்களெல்லாந் தானியத்தைத் தின்னும்பொருட்டுப் போய் நிலத்திலிறங்கி வலையிலகப்பட்டன. புறாவரசன் அதைப் பார்த்து எல்லாரும் என் சொல்லைக் கேளாமற் போனார்கள். இப்போது நான் ஒன்றியாயிருந்து பலனில்லை' என்று சொல்லி அதுவும் வலையில் வந்தகப்பட்டது. வேடன் பக்ஷிகள் வலையிற் சிக்கிக் கொண்டதைப் பார்த்து அதனிடத்திற்கு வரத் தொடங்கினான். அதைப் புறாக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்து, 'நாங்கள் நீசன் புத்தியைக் கேட்டு உன்னை அவமானம் பண்ணினோம்; அதன் பலன் பிராப்தியாயிற்று' என, அப்போது சித்திரக்கிரீவன் 'இப்போது இதைச் சொல்லிப் பயனென்னை? இதற்கோருபாய மிருக்கின்றது; எல்லோரும் வலையோடுகூட ஒருமிக்கப் பறந்து வேற்றிடத்திற்குப் போகவேண்டும்; அப்படிச் செய்தாற் பிராணனைக் காப்பாற்றலாம்' என இதைக் கேட்டவுடனே எல்லாப் பறவைகளும் வலையோடுகூடச் சடுதியிற் பறந்து போயின. அதை வேடன் தூரத்திலிருந்து கண்டு ஆச்சரியப்பட்டு 'இவைகள் ஓரே மனமாய் வலையைக் கொண்டு போயின. ஆயினும் இவைகளில் ஒன்றுக்கொன்று சண்டை நேரிடும்; அப்போது என் கையில் அகப்படும்' என நினைத்துக்கொண்டு அவைகளின் பின்னே யோடும்போது புறாக்

கள் கண்ணுக்கு எட்டாமல் மறைந்து போய்விட்டன. பிறகு அவன் வருத்தப்பட்டுத் திரும்பி வந்துவிட்டான். இவ்வாச்சரியங்களை யெல்லாம் பார்த்திருந்த இலகுபதனன் என்னுங் காகம் அந்தப் புருக்களின் பின்னே போயிற்று. கபோதராஜன் தன் கூட்டத்தைப் பார்த்துக் 'கண்டகி நதி தீரத்திலிருக்குஞ் சித்திரவனத்தில் என் சிநேகிதனான இரணியகன் என்னுமோர் எலியரச னிருக்கின்றான். அவன் பல்லினாலே நம்முடைய வலையை யறுப்பான்; அங்கே நடப்பீர்கள்' என இதைக் கேட்டுப் புருக்களெல்லாம் அப்படியே சென்று எலியரசன் வளையண்டை இறங்கின. அப்போது ஏதாவது ஆபத்து நேரிடும் என்பதைக்குறித்துத் தன் வளைக்கு நூறுவழி செய்துகொண்டு உள்ளேயிருந்த எலியரசன் புருக்களிறங்கின சப்தத்தைக் கேட்டுப் பயந்து அடங்கியிருக்கையிற் சித்திரக்கிரீவன் 'சிநேகிதா! இரணியகனே! எங்களோடே ஏன் பேசவில்லை?' என, இதைத் தன் சிநேகனுடைய தீங்குரலென் றறிந்து சந்தோஷத்தோடு கூடச் சீக்கிரமாக வளையினின்றும் வந்து, 'நான் புண்ணியவானாகையாற் சித்திரக்கிரீவன் என்னும் மித்திரன் என் வீட்டுக்கு வந்தான்; இவ்வுலகத்தில் மனமொத்த மித்திரனோடு சம்பாஷிப்பதிலும் வேறே ஆனந்தமேது?' என்று உபசாரஞ் சொல்லிப் பிறகு அதினுடைய அவஸ்தையைப் பார்த்து மிகவும் துக்கித்து 'மித்திரா! நீ யாவரினும் மிக்க சமர்த்தனாயினையே; உனக்கு இப்படிப்பட்ட காரியமெப்படி நேரிட்டது?' எனப் புரு 'விதி வலிது; அதன்முன் யாருடைய உபாயம் நடக்கும்? கடல்பெருகி மேலிட்டால் அதற்குக் கரையேது?' என, இரணியகன் 'இந்தப் பேச்சு மெய்யே, நூறுநாழிகை வழித் தூரத்திலிருந்து வஸ்துக்களைத் தெரிந்துகொண்டுபோகின்ற நீ, இன்றைக்கு வேடன் வலையிற் பாராமற் சிக்கிக்கொண்டனையே பார்; சந்திர சூரியர்களுக்கு இராகு கேதுக்களாற் பிடை வருதலும், யானையும் பறவை

யும் பாம்புங் கட்டுப்படுதலும், புத்திசாலிகளுக்கு வறுமை வருதலும் தெய்வத்தின் மகிமையேயல்லாமல் வேறன்று' என்று சொல்லிச் சித்திரக்கிரீவன் கட்டுண்டிருக்கின்ற வலைக் கயிற்றை அறுக்கத் தொடங்கிற்று. அப்போது சித்திரக் கிரீவன் 'மித்திரா! முன்னே என் பரிவாரத்தினுடைய கயிற்றை யறு; பிறகு என் பாசத்தைத் துணி' எனக் கேட்டு எலி 'என் பற்கள் மிகவும் மெதுவானவை; அவற்றிற் கும் பலமுங் கொஞ்சம், இத்தனை பெயருடைய பந்தனைகள் எனக்கெப்படி யறுபடும்? உன் தளையை அறுத்ததன்பின் என் சாமர்த்தியத்துக்குத் தக்கவாறு அவர்களுடைய தளை களையும் அறுப்பேன்' எனச் சித்திரக்கிரீவன் 'நல்லது, முன்னே இவர்களுடைய பாசத்தை யறு' என, இரணியகன் 'தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தன் பரிவாரங்களைக் காப் பாற்றவேண்டும்; அறம் பொருள் இன்பம் வீடாகிய இவை களுக்குப் பிராணன் முக்கிய சாதனமாகையால் அதைக் காப்பாற்றினு லெல்லாவற்றையுங் காப்பாற்றினாற்போலா கின்றது' எனச் சித்திரக்கிரீவன் 'இந்த நீதி சரிதான்; ஆயி னும் இப்படிப்பட்ட வேதனையினின்றும் பாலனம்பண்ணு வதற்காகவன்றோ என்னை இவர்கள் இராஜாவாக நினைக் கின்றார்கள்? ஆகையால் என் பிராணனிடத்தி லிச்சையை விட்டு இவர்களைப் பிழைப்பிப்பாய்' என, அதைக் கேட்டு எலி 'நீ பரம சாது; அடுத்தவர்களை யாதரிக்கின்றவனா யிருக்கின்றாய்; எசமானனிடத்தில் விசுவாசமாய் இருக்கின்ற சேவகனும் சேவகனிடத்திற் பிரீதியாயிருக்கின்ற எசமான னும் சுகமடைவார்கள்' என்று சொல்லி எல்லாவற்றின் பாசங்களையும் அறுத்துச் சித்திரக்கிரீவனுடைய கட்டையுஞ் சேதித்தது. பிறகு ஒன்றுக்கொன்று தழுவிக்கொண்டு பிரிய வார்த்தைகள் சொல்லின. சித்திரக்கிரீவன் பரிவாரத் தோடுகூடத் தன்னிடத்திற்குப் போயிற்று. இலகுபதனன் என்னுங் காகம் இவற்றையெல்லாம் பார்த்து ஆச்சரியப்

பட்டு இரணியகனை நோக்கி 'நீ பாக்கியவானுய் இருக்கின்ருய் ஆகையால் நானும் உன் சிநேகத்தை விரும்புகின்றேன்; நீ தயைசெய்து எனக்குச் சிநேகனுகவேண்டும்' என, அப்போது இரணியகன் 'நீ யார்?' எனக் காகம் 'நான் இலகுபதனன் என்னுங் காக்கை' என, அதைக் கேட்டு எலி 'உனக்கும் எனக்கும் வெகுதூரம்; உலகத்தில் சமானஸ்தர்களுக்குள்ளேயே சிநேகமுண்டாகின்றது; நானுனக்கிரை; நீ என்னைத் தின்கின்றவன்; இப்படியிருக்கையி லிஃதெப்படியாகும்? ஆபத்துக்கே முகாந்தரமாம்; நரியின் சிநேகத்தினல் ஒரு மான் வலையிலகப்பட்டதுபோல் உன்னு லெனக்குப் பொல்லாங்கு நேரிடும்' என, இலகுபதனன் அதைக் கேட்டு 'மானெப்படி வலையிற் சிக்கிக்கொண்டது?' என, எலி சொல்லத் தொடங்கிற்று:—

'மகததேசத்திற் சண்பகவனத்தில் மானுங் காகமும் ஒன்றுக்கொன்று நட்பாயிருந்தன. அப்படியிருக்கையில் அந்த மான் தன் மனத்தின்படி புல் முதலானவைகளை மேய்ந்து கொழுத்திருப்பதை ஒரு நரி பார்த்துத் தனக்குள்ளே யாலோசித்து 'இவன் நமக்கு அசாத்தியனு யிருக்கின்ருன்; ஆகையாலிவனை வஞ்சனையாற் கொல்லவேண்டும்' என்று இப்படி நிச்சயித்து அதன் சமீபத்திற் போய்ச் 'சிநேகிதா! சுகமா?' என, அதைக் கேட்டு மான் 'நீ யார்?' என, நரி 'நான் க்ஷுத்திரபுத்தி யென்னும் நரி; இந்தக் காட்டில் யாருமற்ற பாவியாய் ஒருவனுகத் திரிந்துகொண்டிருந்தேன்; இன்றைக்கு உன்னைப் பார்த்து மிகுந்த சந்தோஷத்தை யடைந்தேன்; இப்போது உனக்கு வேலை செய்துகொண்டு உன்னிடத்திலிருக்க இச்சிக்கின்றேன்' என, இதைக் கேட்டு மான், நல்லது என்று பொழுதுபோனவுடனே இரண்டுஞ் சண்பகமரத்தின் கீழேவந்தன. மானின் சிநேகிதனுய் அம்மரத்தின்மேல் வாசம் பண்ணிக்கொண்டிருக்கின்ற சுபுத்தி என்னுங் காகம் இவ்விரண்டையும்

பார்த்து மானை நோக்கி 'ஓ மித்திரா! உன்னண்டையி லிருக்கின்றவன் யாவன்?' என வினவ, மான் 'இந்தச் சம்புகன் என்னுடன் சிநேகிக்க விரும்புகின்றான்' என, அப்போது காகம், 'மித்திரனே! சடுதியில் வந்த பழக்கமில்லாதவனை நம்பலாகாது; ஒருவன் குலமும் நடத்தையுந் தெரியாமல் அவனுக் கிடங்கொடுத்தால் ஒரு பூனைக்குச் சரற்கவன் என்னுங் கழுகு இடங்கொடுத்து இறந்தாற்போல் நேரிடும்' என, அதைக் கேட்டு மான் 'சரற்கவன் எப்படிச் செத்தான்?' எனக் காகம் சொல்லுகின்றது:—

'பாகிரதி தீரத்தில் திரிகூடம் என்னும் மலையில் ஒரு முதிய இத்திமரத்தின் பொந்தில் வாசம் பண்ணிக்கொண்டிருந்த நகமும் கண்ணுமில்லாத சரற்கவன் என்னுமொரு கிழக்கழுகானது மற்றைப் பக்ஷிகள் தன்னிடத்தில் இரக்கம் வைத்துத் தங்களாகாரத்திற் கொஞ்சங் கொஞ்சம் நெருக்கிக் கொடுக்கத் தின்றுகொண்டு ஜீவித்திருக்கையில் ஒரு நாள் நெடுஞ்செவியன் என்னும் பூனை பறவைகளுடைய குஞ்சுகளைத் தின்னவேண்டி அந்த மரத்தின் கீழே வர அதைக் குஞ்சுகள் பார்த்துப் பயந்து பெருங்கூச்சலிட்டன. கழுகு அதைக் கேட்டு 'நீங்களேன் பயப்படுகின்றீர்கள்? இங்கே எவன் வந்தான்?' என, இதற்குள்ளே பூனை சரற்கவனைப் பார்த்து 'நான் செத்தேன்' எனப் பயப்பட்டு, உடனே மனதில் தைரியம்பண்ணிக்கொண்டு, 'இந்தச் சத்துருவைத் தப்பித்துக்கொண்டு ஓடுவதற்கு நமக்குச் சக்தியில்லை, ஆகையால் இவன் சமீபத்திற் போகவேண்டும், பின்னர் எஃதுண்டாகுமோ அஃதுண்டாகட்டும்' என்று இப்படி நிச்சயித்து அந்தக் கழுகின் அருகிற்போய், 'சமர்த்தனே! உனக்கு வந்தனம்பண்ணுகின்றேன்' எனக் கழுகு அதைக் கேட்டு 'நீ யார்?' என, அப்போது பூனை 'நெடுஞ்செவியன் என்னும் பூனை' எனப் பின்பு சரற்கவன் 'நீ சீக்கிரமாய் இவ்விடம்விட்டு ஓடிப்போ, இல்லாவிட்டாற்

சாவாய்' எனப் பூனை 'நான் என் விருத்தாந்தந்தைச் சொல்லுகின்றேன், அதைக் கேள்; பிறகு என்னைக் கொல்லுதல் தக்கதானால் கொல்லு; ஜாதி பேதத்தினாலேயே பிராணிகளைக் கொல்லுவதாவது பூசிப்பதாவது யோக்கியமன்று; ஆதலால் அவனவன் நடத்தையைப் பார்த்து எது செய்யத் தக்கதோ அதைச் செய்யவேண்டும்' எனக் கழுகு இதைக் கேட்டுப் பூனையைப் பார்த்து 'நீ ஏன் வந்தாய்? சொல்' எனப் பூனை 'நான் கங்காதீரத்தில் நித்திய ஸ்நானம்பண்ணிச் சாந்திராயண முதலாகிய விரதங்கள் ஆசரித்துக்கொண்டிருக்கின்றேன்; நீ மிகவுந் தருமவானாயிருக்கின்றாயென்று பக்ஷிகளால் எப்போதுங் கேள்விப்பட்டதனாலும் வயது முதிர்ந்த வித்துவான்களிடத்தில் தருமங் கேட்கவேண்டுமென்று சாஸ்திர மிருப்பதனாலும் நான் உன்னிடத்திற்கு வந்தேன்; நீ தர்மத்தைவிட்டு என்னைக் கொல்லத் துணிந்தாய்; இப்படி இல்லறத்தாருடைய ஆசாரம் யானெங்கும் பார்த்ததில்லை; சத்துருவும் தன் வீட்டுக்கு வந்தாற் சாதுக்கள் அவனுக்குச் சன்மானம் பண்ணுவார்கள்; மரம் தன்னை வெட்டுகின்றவனுக்கு நிழல் கொடுக்கவில்லையோ? சாதுக்கள் தங்கள் வீட்டுக்கு எவன் வந்தாலும் பூசிக்கின்றார்கள்; குறையொன்றும் பண்ணுகிறதில்லை. அதிதி எவனுடைய வீட்டிற்கு வந்து முகம் வாடிப் போகின்றானோ அவ்வீட்டு எசமானனுக்குத் தன் பாவத்தைக் கொடுத்து அவன் புண்ணியத்தைத் தான் கைக்கொண்டு போகின்றானாகையாற் சாதுக்கள் யாவரிடத்திலுந் தயை செய்கின்றார்கள்; சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கின்றான்' என, இதைக் கேட்டுக் கழுகு 'பூனை இறைச்சிகளைத் தின்னும், மேலுங் கொலைசெய்யுமென்று நினைத்து இப்படி நான் சொன்னேன்' என அதைக் கேட்டு நெடுஞ்செவியன் பூமியைத் தொட்டுச் 'சிவ சிவா!' என்று உச்சரித்துக் காதின் மேற் கையைவைத்து, 'நான் தரும சாஸ்திரங்கள் கேட்டு

மிருந்த வைராக்கியமடைந்து பொல்லாத கருமங்களையெல்லாம் விட்டுவிட்டேன்; அநேக சாஸ்திரங்களிற் கொலைசெய்வதுபோல வேறொரு பாதகமில்லையென்று சொல்லியிருக்கின்றது; எவர்கள் மற்றொருவனைக் கொன்று தங்களுக்குச் சுகத்தை விரும்புகின்றார்களோ அவர்கள் நரகத்தை யடைகின்றார்கள்; ஆகையாற் கொலைசெய்யாம லிருப்பதுபோல வேறொரு தருமமில்லையென்று நினைத்துக் காட்டிலிருந்துகொண்டு காய் கனி கிழங்குகளைச் சாப்பிடுகின்றவர்கள் பாதக மெப்படிப் பண்ணுவார்கள்?' என்று சொல்லிக் கழுகுக்கு நம்பிக்கை வரப்பண்ணி அதன் வீட்டிலிருந்து பிறகு அந்த ருத்திராக்ஷப் பூனை பட்சிகளின் குஞ்சுகளை நாடோறும் அங்கே கொண்டுவந்து தின்றுகொண்டிருக்கத் தலைப்பட்டது. அப்போது குஞ்சிழந்த பறவைகளெல்லாங் கிலேசப்பட்டு ஒன்றாய்க் கூடித் தங்கள் குஞ்சுகளைச் சோதிக்கத் தொடங்கின. பூனை இதையறிந்து அவ்விடம்விட்டு ஓடிப்போயிற்று. அந்தப் பக்ஷிகள் அங்கே பார்த்துக்கொண்டே கழுகின் பொந்தண்டை வந்து பார்க்கையில் அக்குஞ்சுகளுடைய எலும்புகளும் சிறகுகளும் விழுந்துகிடக்கக் கண்டு, நம்முடைய குஞ்சுகளை இந்தத் துரோகிக் கழுகே பக்ஷித்தது என்று நிச்சயித்து அந்தக் கழுகைக் கொத்திக் கொன்றன. ஆகையால் ஒருவனுடைய குணந்தெரியாமல் அவனுக் கிடங் கொடுக்கலாகாது' என, அப்போது நரி 'ஒருவன் சுபாவஞ் சிநேகிப்பதற்கு முன்னே தெரியுமோ? நல்லோர்களுக்குச் சுபாவத்திலே காரியமில்லை; அவர்களுடைய சிநேகங் கண்ட மாத்திரத்தினாலேயே ஆகின்றது' என, மான் அதைக் கேட்டுக் காகத்தைப் பார்த்து 'எப்படி நீ எனக்கு மித்திரனோ அப்படியே இவனு மிருக்கட்டும்; நீ ஒன்றுக்குந் தடைசொல்லாதே' என்று சொல்லி நரியைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டது; பிறகு மூன்றுந் தங்கள் மார்க்கத்தின்படி வயிற்றை நிரப்பிக்கொண்டு

இராத்திரிக்கு அந்த விடத்தில் வந்துகொண்டிருந்தன. இப்படியிருக்கையில் ஒருநாள் நரி மானைப் பார்த்து 'மித்திரா! இந்தக் காட்டில் இளவிளவென்று நேர்த்தியான பயிரிருக்கின்றது; அதை உனக்குக் காண்பிக்கின்றேன் வா' என்று சொல்லி அதை இட்டுக்கொண்டுபோய்க் காட்டிற்று. அன்றுமுதலாய் அந்த மான் போய்த் தினமானம் பயிரை மேய்ந்துகொண் டிருக்கையில் அதைக் கொல்லைக்காரன் பார்த்து அருகே வலை கட்டினான். பின்பு மான் அங்கே வழக்கப்படி மேயப்போய் அதிற் சிக்கிக்கொண்டு 'இப்போ தென்னை மித்திரனைத்தவிர யாவன் விடுவிப்பான்' என்று மனத்தி லெண்ணிக்கொண்டிருக்கையில் அங்கே நரி வந்து 'என்னுடைய மனோரதம் நிறைவேறிற்று; இப்போது நான் இதன் எலும்பையும் மாமிசத்தையும் நிரம்பத் தின்னுவேன்' என்று வாயூற மனதிலெண்ணிக்கொண்டு சும்மா விருந்தது. அதைக் கண்டு மான் 'மித்திரா! ஏன் சும்மா விருக்கின்றாய்? என்னுடைய தளையைச் சீக்கிரமாய் அறுத்தென்னை விடுவி; சங்கடகாலத்திற் சிநேகிதர்கள் உடை யிழந்தவன் கைபோ லுதவுகின்றார்கள்' எனச் சம்புகன் 'ஆம் நீ சொல்வது மெய்யே; ஆயினும் எனக்கு இன்றைக்கு விரதத்தினமாகை யால் நான் இந்தத் தோல்வலையைத் தீண்டமாட்டேன்; நாளைக்கு என்ன சொன்னாலுங் கேட்பேன்; சிநேகிதனுக் காக நான் பிராணனை விடத்தக்கவன்' என்று சொல்லி அதன் கண்ணுக்குத் தப்பித்துக்கொண்டு அங்கே யோரிடத் தில் ஒளித்துக்கொண்டிருந்தது. காகம் இராத்திரிக்கு, மான் வரவில்லையென் றதைத் தேடும்பொருட் டிங்குமங் குந் திரிந்துகொண் டங்கே வருகையி லந்த மானி னவஸ்தை யைப் பார்த்துச் 'சிநேகிதா! உனக்கிந்த அவஸ்தை இப் படி யேன் வந்தது?' என, மான் 'இது உன் வார்த்தை யைக் கேளாமையால் வந்த பலன்' என, காகம் 'உன் கூட் டாளியான சம்புக னெங்கே போனான்?' என, மான் 'என்

னுடைய இறைச்சியைத் தின்பதற்காக இங்கே தானே ஒளித்துக்கொண்டிருப்பான்' என, அதைக் கேட்டுக் காகம் 'தனக் கிதம்பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவ னுக்கு விபத்துச் சீக்கிரமாக வரும்; இன்னு மவன் சத் துருவுக்குச் சந்தோஷம் வருவிக்கின்றான்' எனச் சொல் லிக்கொண் டிருக்கையிற் கொல்லைக்காரன் கையிலொரு தடியையெடுத்துக்கொண்டு வர, அவனைப் பார்த்துக் காகம், மானுக்கு 'மித்திரா! நீ இப்போது மூச்சையடக்கிக்கொண்டு செத்தவனைப்போலக் கிடந்தால் அவன் உன்னைப் பார்த்து நீ செத்தாயென் றெண்ணிக்கொண்டு கட்டிய வலையை அவிழ்த்துச் சுருட்டி வேறோரிடத்தில் வைக்கப்போவான்; அப்போது நான் கத்துகிறே னதைக் கேட்டமாத்திரத்தில் நீ மிகவும் விரைவா யோட்டம்பிடி' என்று சொல்லித் தான் அப்படியே பொய்யாக மானின் கண்ணைக் குத்திக்கொண் டிருந்தது. இதற்குள்ளே வந்த கொல்லைக்காரன் மானைப் பார்த்துச் செத்ததென் றெண்ணிக் கட்டியிருந்த வலையை யவிழ்த்தோரிடத்தி லொன்றாகக் கூட்டி வைக்கப்போனான். காகம் அதைப் பார்த்துச் சங்கேதப்படி கத்த, மான் அதைக் கேட்டவுடனே யோட்டம் பிடித்தது. அதைக் கொல்ல நினைத்து அந்தக் குடியானவன் தடியை விசிறி யெறிய அது பதிவிருந்த நரிமேற் படவும் அந்நரி இறந்தது. ஆகை யாற் புண்ணியமாவது பாவமாவது மிகுதியானால் அதன் பலன் உடனே யுண்டாகின்றது' என்று சொல்லிப் பின்னும் எலி 'இப்படி மானுக்கு நரியின் சிநேகம்போல் உன்னுற வும் எனக்கு உபயோகமன்று' எனக் காகம் 'உன்னைத் தின்றா லெனக்குப் போதுமோ? நீ பிழைத்திருந்தால் நான் சித்திரக்கிரீவனைப்போலச் சுகமடைவேனென்று உன்னட்பை விரும்புகின்றேன்' எனப் பின்னும் இரணியகன் 'நீ எனக் குப் பகைவன்; உன்னுடனே நான் சிநேகம்பண்ணுவேனல் லேன்; சத்துரு தனக்கு அநுகூலமாயிருந்தாலும் அவ

னுடனே சிநேகிக்கலாகாது; தண்ணீர் வென்னீரானாலும் நெருப்பை அவிக்கும்; எது தக்கதோ அதைச் செய்யவேண்டும்; தண்ணீரில் வண்டியும் பூமியின்மேற் கப்பலும் நடக்குமோ? இதனாற் சத்துருக்களிடத்திலும் வியபிசாரியிடத்திலும் நம்பிக்கை வைக்கலாகாது' என்று இப்படிப் பல விதமாகச் சொல்லக் காகம் 'நான் உன்னுடனே சிநேகிப்பேன்; இல்லாவிட்டாற் பட்டினியாக விருந்து இங்கேயே பிராணனை விடுவேன். நெருப்பின் வெப்பத்தினாற் பொன் முதலானவை யுருகி ஒன்றுகின்றன; யாதேனுமொரு நிமித்தத்தினாலே விலங்கு பறவைகள் மித்திரத்துவத்தை யடைகின்றன; பயத்தினாலாகிலும் யாதோ ராசையினாலாகிலும் மூடர்களுக்குச் சிநேகமுண்டாகின்றது; சாதுக்களுடைய சிநேகமோ கண்டமாத்திரத்தி லுண்டாகின்றது. மண்பானை சீக்கிரமாயு முடையும், பிறகு பொருந்துகிறதுமில்லை; பொற்குடமோ சீக்கிரத்திலுடையாது, உடைந்தாலு மொன்றும்; இப்படியே துற்சன சற்சனர்களுடைய சிநேகமுமிருக்கின்றது' என, இதைக் கேட்டு இரணியகன் 'உன் வார்த்தையால் நான் சந்தோஷமடைந்தேன், இப்போ துனக்கும் எனக்குஞ் சிநேகத்துவ மிருக்கட்டும்; இனிமேல் நாமிருவரும் ஒரு மனதினராயிருக்கவேண்டும்; உபகாரம் பண்ணுகின்றவன் மித்திரனென்றும் அபகாரம் பண்ணுகின்றவன் சத்துருவென்றும் அறிந்து மனக்களங்கமில்லாமல் நடக்கவேண்டும்' என்று இப்படியே பேசி நிச்சயித்து இரணியகன் இலகுபதனனுக்குச் சிறிது ஆகாரங் கொடுத்துத் தன் வளைக்குட் போயிற்று. சிநேகலாபம் பெற்ற காகமும் அதனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு தன்னிடத்திற்குப் போயிற்று. அதுமுதலாய் இவைகள் அத்தியந்த சிநேகமாய் ஒன்றுக்கொன்று ஆகாரங் கொடுத்துக்கொண்டு பல பல வார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கையில் ஒருநாள் இலகுபதனன் எலியைப் பார்த்து, 'மித்திரா! இப்போது

இங்கே இரை யகப்படாமையால் வேறோரிடத்திற்குப் போக இச்சிக்கின்றேன்' என, அதைக் கேட்டு இரணியகன் 'எங்கே போகின்றாய்?' என, அப்போது அது 'தண்டகாரணியத்திற் கற்பூரகௌரமென்னும் தடாகத்திலிருக்கின்ற ஆமையாகிய மந்தரன் என்பவன் எனக்குச் சிநேகனா யிருக்கின்றான். அவனெனக்கு விதம்விதமான மீன்களைக் கொடுத்துப் போஷிப்பான்; அதைக்குறித்து நான் அவனிடத்திற்குப் போகின்றேன்' எனக் கேட்டு இரணியகன் 'மித்திரா! அவ்விடத்திற்கு என்னையும் கொண்டுபோகவேண்டும். நான் தேசாந்தரம் போக விரும்புகின்றேன்' என, அப்போது காக்கை 'நீ அப்படி விரும்புவானேன்?' என, இரணியகன் 'அங்கே போனபின்பு சொல்லுவேன்' என, இலகுபதனன் இரணியகனை யெடுத்துக்கொண்டு அவ்விடத்திற்குப் போயிற்று. அவைகளைப் பார்த்து மந்தரன் அவ்விரண்டுக்கும் ஆதித்யம் பண்ணிற்று. அப்போது இலகுபதனன் மந்தரனைப் பார்த்து 'இந்த இரணியகன் மிகவும் பரோபகாரி. இவன் சித்திரக்கிரீவனை அவன் கூட்டத்தோடுகூட வலையினின்றும் விடுவித்தவன்; அப்போது இவன் நட்புநிலைமையைப் பார்த்து நானு மிவனுடனே நட்புக்கொண்டேன்' என, அதைக் கேட்டுக் கூர்மம் சந்தோஷப்பட்டு இரணியகனைப் பார்த்து 'மித்திரா! நீ இந்த மனித சஞ்சாரமில்லாக் காட்டில் வருவானேன்?' என, அப்போது எலி சொல்லுகின்றது :—

'சம்பகாவதி யென்னும் பட்டணத்திற் சூடாகர்ணன் என்னுமொரு சந்நியாசி மிகுந்த சோற்றைக் கப்பரையிற் போட்டு உறியின்மேல் வைத்துவிட்டு நித்திரை பண்ணிக் கொண்டிருப்பான்; பின்பு அந்தச் சோற்றை நான் தின்று கொண்டு சுகமாக இருக்கின்ற நாளில் அங்கே வீணாகர்ணன் என்னுமொரு சந்நியாசி வந்து அவனோடுகூட அநேக கதாப்பிரசங்கம் பண்ணிக்கொண் டிருக்கையில் அந்தச்

சூடாகர்ணன் கையிலொரு தடியினாலே பூமியைத் தட்டிக் கொண்டு சோற்றைக் காப்பாற்றிக்கொண்டிருந்தான்; அப் போது வீணாகர்ணன் 'என்னுடைய கதையை அநாதரவு பண்ணி நடுவே வேறேயென்ன வியாபாரத்திலிருக்கின்றாய்?' எனச் சூடாகர்ணன் 'உன் வார்த்தையை அநாதரவு பண்ண வில்லை; இவ்வெலி என் பாத்திரத்திலிருக்கின்ற அன்னத்தை நாடோறுந் தின்னுகின்றது; அதை யோட்டுகின்றேன்' என வீணாகர்ணன் அப்போது உறியைப் பார்த்துக் 'கொஞ்சம் பலமுள்ள இந்த எலி இவ்வளவுயரம் எப்படிக் குதிக்கின் றது? இதற்கேதோ ஒரு காரணமிருக்கவேண்டும்; அது தான் ஏதுவாயிருக்கலாமென்று ஆலோசித்துப் பார்த்தால் இங்கே மிகவும் திரவியமிருக்கவேண்டும்; உலகத்தில திர வியமுள்ளவர்கள் பலமுள்ளவர்களாய் இருக்கின்றார்கள்; அசாத்தியமான காரியங்களைச் சாதிக்கின்றார்கள்; இராஜத் துவத்துக்கு மிது காரணமாகும்; எல்லா மிதனாலாகின்றன' என்று சொல்ல, அந்தச் சந்நியாசி இதைக் கேட்டு மெய்தா னென்று நம்பிப் பூமியை வெட்டி, ஐயோ! என் திரவி யத்தை யெடுத்துக்கொண்டான்; அன்றுதொடங்கி நான் இளைத்துப்போனேன்; பின்பு எனக்கிரையுங் கிடையாததி னால் மெள்ள மெள்ள நடந்துகொண்டிருக்கையில் அந்தச் சந் நியாசி பார்த்து, 'பார் இந்த எலி இப்போது தன்னுடைய சாதித் தன்மையை யடைந்திருக்கின்றது. முன்னிருந்த தன் மதம் போய்விட்டது; ஆகையாற் பணமில்லாதவர் களை எல்லோரும் அற்பமாய் நினைக்கின்றார்கள்' என, இதைக் கேட்டு நானிப்போது இங்கேயிருப்பது சரியன்று; இதை வேறொருவரோடுஞ் சொல்லலாகாது; பொருளிழ வும் கிருகச் சித்திரமும் தானமும் மானமும் அவமானமும் ஆயுளும் தனமுமாகிய இவைகளைப் புத்திமான் வெளிப்ப டுத்தலாகாது; தன்விதி பிரதிகூலமா யிருக்குங்காலத்திற் பராக்கிரமும் முயற்சியும் வீணாகின்றன; பணமில்லாதவ

னுக்கு வனவாசத்தைக் காட்டினுஞ் சுகமில்லை; எந்த விடத்தில் நாம் பணக்காரரா யிருந்தோமோ அந்த விடத்திலேலேழையாயிருப்பது உத்தம மன்றென்று இழந்த பணத்தை மறுபடி எடுத்துக்கொள்ள ஆயத்தப்பட்டேன். அப்போது சந்நியாசி என்னைத் தடியாலடித்தான்; அதனாலே மிகவுந் துக்கப்பட்டு உன் சிநேகிதனோடேகூட இங்கே வந்தேன்' என, மந்தரன் 'மித்திரா! நீ இதனால் அதைரியப்பட்டு உறைவிடந் துறந்தோமென்று வருத்தப்படவேண்டாம்; சாதுக்க ளெங்கே போனாலும் மரியாதை பெறுகின்றார்கள்; சிங்கம் வேறொரு காட்டுக்குப் போனாலும் புல்லைத் தின்பதில்லை, யானையையே தின்னும்; உற்சாகமுள்ளவன், சந்தோஷமுள்ளவன், தைரியசாலி, சூரன், களங்கமில்லாதவன் இவர்களிடத்திலே இலட்சுமி தானே வந்து அடைகின்றாள்; நீ பணமிழந்தாலும் எப்போதுஞ் சந்தோஷத்தோடே கூடியிருக்கின்றாய்; ஆகையால் உனக்கிருக்கின்ற சுகம் பணத்தாசையால் மயங்குகின்றவர்களுக்கில்லை. இன்னுங்கேள்; மேகச்சாயை, துஷ்டனுடைய தயை, இளம்புல், பாலஸ்திரீ, யௌவனம், தனம் இவைகள் வெகுநாளைக்கு நில்லா; ஆகையால் இதை இழந்துபோனால் அழுது கொண்டு ஆகாரத்தைக்குறித்து ஏங்கி யிருக்கலாகாது; எவன் கர்ப்பத்தி லிருக்கின்றானோ அவன் பிறக்கிறதற்கு முன்னே தானே தாய் முலையிற் பாலையமைத்து வைக்கின்றான்; அப்படிப்பட்டவன் ஆயுளுள்ளவரைக்கும் காப்பாற்ற மாட்டானா? நீ நல்ல விவேகியாயிருக்கின்றாய்; ஆதலி னிவையெல்லா முனக்குத் தெரிந்தேயிருக்கும்; இனிச் சிநேகமாய் என்னிடத்திற் சுகமாயிரு' என, இவையெல்லாங் கேட்டு இலகுபதனன் 'மந்தரா! நீ சகலகுண சம்பன்னன்; மேலுஞ் சற்குணன். சாதுக்களுக்கு வந்த ஆபத்தைச் சாதுக்களே நிவிர்த்தி பண்ணுகிறார்களென் றறிந்து நாங்களுன்னை நாடிவந்தோம்' என்று சொல்லி நீண்ட பெரிய

மாத்தின்மேற் போய் உட்கார்ந்து தன் சுபாவப்படியே இங்குமங்கும் பார்த்துக்கொண்டிருக்கையில் ஏதோ ஒரு பயமுகாந்தரத்தை யறிந்து அவ்விரண்டிற்கும் நீங்க ளுங்க ளிடத்தி லொளித்துக்கொண்டிருங்கள்' என மந்தரன் தண் ணீரிற் போயிற்று; எலி வளையி னுழைந்தது. காகம் விருட்சத்தின் நுனியிலிருந்து பார்க்கையில் ஏதொன்றுங் காணப்படாமையாற் பின்பு அம்மூன்று மொன்றுக்கொன்று பேசிக்கொண்டிருக்கையில் அங்கு அவைகளின் சமீபத்திற் சித்திராங்கன் என்னுமொரு கலைமான் வந்து 'நான் வேடர் பயத்தால் உங்களிடத்திலிருக்கலாமென்று வந்தேன்' என, அதைக் கேட்டு மந்தரன் அதற்குச் சன்மானம்பண்ணி 'இஃது உன் வீடு, நான் உன் சேவகனென் றெண்ணிக் கொண்டு சுகமாயிருக்கவேண்டும்' என, முகமலர்ந்து மனங் கலந்த இன்சொற் சொல்லப் பிறகு அதுவும் இவைகளு டன் நட்புக்கொண்டிருந்தது. அப்படியிருக்கையில் ஒரு நாள் சித்திராங்கன் என்னும் மான் புன்மேய வேரோரிடத் திற்குப்போய் மீண்டும் சாயங்காலம் வாராமையால் ஆமை 'மேயப்போன மான் இன்றைக்கேன் சாயந்திரம் வரவில்லை?' என்று விசனப்பட அதை யறிந்து எல்லாம் விசனமடைந் தன. மறுநாள் விடியற்காலத்தில் காக்கை பறந்து நாலு பக்கத்திலும் பார்த்துக்கொண்டு போகையிற் சித்திராங்கன் தோல்வலையி லகப்பட்டிருப்பதைக் கண்டு அதனருகிற் போய் 'மித்திரா! உனக்கிந்த அவஸ்தை எப்படி நேரிட் டது?' என, மான் 'இப்போது இதைக் கேட்டுப் பிரயோ சனமில்லை; நீ போய் இரணியகனைச் சீக்கிரமா யிட்டுக் கொண்டு வந்தால் அவன் வேடன் வருகிறதற்குள் என் பாசத்தை யறுத்து என்னையும் விடுவிப்பான்; வேடன் வந் தால் ஒருபாயமும் நடவாது' என இதைக் கேட்டவுடனே காகம் விரைவாகப்போய் அவைகளுடனே நடந்த காரியத் தைச் சொல்லி இரணியகனை யிட்டுக்கொண்டு வந்தது.

அந்த இரணியகன் மானைப் பார்த்து 'நீ சமர்த்தனு யிருக்கையில் வலையி லெப்படி யகப்பட்டாய்?' என, மான் 'வல்லமையிருந்தாலும் வருவது வரும்; இப்போதென்னைச் சீக்கிரமாய் விடுவி; எனக்குப் பழைய பயமிருக்கின்றது; முன் குட்டியாயிருக்கையில் வேடன் வலைகட்டி யென் கூட்டத்தை வளைத்தான். மற்றவைகள் பெரிய மான்களா யிருந்தபடியாற் குதித்து வலையைத் தாண்டிப்போயின; எனக்குக் குதித்தோடச் சக்தியில்லாதிருந்ததாதலால் வேடன் பிடித்து இராஜனிடத்திற் கொண்டுபோனன்; இராஜா வாங்கித் தன் பிள்ளைகையிற் கொடுக்க, அங்கே நான் வெகு நாளிருக்கையில் ஒருநாள் மேக கர்ச்சனையைக் கேட்டு மிகவுஞ் சஞ்சலப்பட்டுக் காற்றுமழையாற் பீடிக்கப்பட்டு மான்கூட்டங்கள் ஓடும்போது அவற்றின்பின் நான் ஓடுவேனே என்று மனுஷபாஷையின லெனக்குள்ளே பேசிக்கொண்டேன்; இராஜகுமாரன் இதைக் கேட்டு நாற்றிசையும் பார்த்து என்னையும் பார்த்தான். பின்பு சற்றுநேரஞ் சும்மாவிருந்து இது மனுஷனைப்போ லெப்படி உச்சரித்தது? ஆகையால் இஃது ஒரு விசித்திரப் பிராணியா யிருக்கின்றதென்று நினைத்துப் பயத்தினற் சுரத்தில் விழுந்தான்; பிறகு விடியற்காலத்திற் சோதிடர்களை யழைப்பித்து அவர்களுடனே இதைச் சொல்ல, அவர்களெல்லாம் 'மிருகங்களும் மனிதரைப்போற் பேசுகின்றன; ஆயினும் நமக்கு முன்னே பேசுகின்றதில்லை; அதுவு முன்னைப் பாராமற் பேசிற்று; இதற்காக நீ பயப்படவேண்டாம்; இது யாதொரு விசித்திரப் பிராணியும் அன்று; இதனலுனக்கு எவ்வளவும் பயமில்லை' என, இதைக் கேட்டு இராஜகுமாரன் என்னை விட்டுவிட்டான். பிறகு இக்காட்டில் வந்தேன்; இப்படி முன்னொருதரம் வலையிலகப்பட்டேன்; ஆகையால் என்னைச் சீக்கிரமாக விடச் சொல்லுகின்றேன்' என, இதற்குள்ளே மித்திரத்துவத்தினலே மந்தரனும் அங்கே வந்து

இரணியகனைப் பார்த்து, 'மித்திரா! இப்படித் தாமசம் பண்ணுகின்றது சரியன்று; இப்போது வேடன் வந்தால் நாமெல்லாம் ஓடிப்போவோம், வலையிலகப்பட்ட சித்திராங்க னைப் பிடித்துக்கொள்வான்; இதைக்குறித்து எனக்குக்கிலே சமாயிருக்கின்றது; நினைப்பின்படி மனத்திலிருப்பதை அறி கின்ற சிநேகிதனும் மனோகரமான ஸ்திரீயும் பிறர் துக்க மறிகின்ற பிரபுவும் கிடைப்பதருமை' என்று இப்படி மந்த ரன் சொல்லிக்கொண்டிருக்கையில் வேடன் சடுதியில் எம னைப்போல் தூரத்தில் வருவதை இலகுபதனன் கண்டு எலி யைப் பார்த்து, 'மித்திரா! வேடன் வந்தான்; இப்போது பெரிய சங்கடம் நேரிட்டது' என அதைக்கேட்டு இரணி யகன் அதிசீக்கிரமாய்ச் சித்திராங்கன் வலையை யறுத்தது. அறுத்தவுடனே அருகில் வந்த வேடனைப் பார்த்து எல் லாம் ஓட்டம் பிடிக்க, அப்போது அவன் விசனமடைந்து நாலண்டையும் பார்க்கையில், மந்தரன் தன்னடையின்படி நடந்துகொண்டிருந்தது. வேடன் அதைப் பார்த்துத் தன் வில்லிலதைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு கொஞ்சம் சந் தோஷத்தோடே போகும்போது, அதைப் பார்த்து மானு மெலியுங் காகமும் மிகவும் மனவருத்தப்பட்டு 'இப்போது என்ன செய்யலாம்?' என்று வேடன் பின்னே போகத் தொடங்கின. அப்போது இரணியகன் 'ஒரு சங்கட நிவிர்த்தியாகின்றதற்குள்ளே மற்றொன்று வந்து நேரிட் டது; ஆகையால் ஜீவனுக்குத் தேகத்தோடுகூட அநேகந் துக்கங்களை அநுபவிக்கவேண்டி யிருக்கின்றது; இந்தத் துன்பஞ் சிநேகத்தினால் நமக்கு வந்தது; எவன் மித்திர னிடத்தில் விசுவாசம் வைக்கின்றானோ அந்த விசுவாசம் அவனுக்குத் தாய் தந்தை சகோதரன் பிள்ளை சுற்றங்க ளிடத்திலிராது' என்றிப்படி வெகுவிதமாய்த் துக்கித்துப் பின்னும் 'வேடன் தூரமாகப் போவதற்குமுன்னே மந்த ரனை விடத்தக்க வுபாயம் பண்ணவேண்டும்; பிறகு ஆக

மாட்டாது' என, அப்போது அவைகள் 'என்ன செய்ய லாம்? சொல்' என, எலி 'சித்திராங்கன் ஏரிக்கரையிற் செத்தவனைப்போலக் கிடக்கவேண்டும்; அதன்மேற் காக முட்கார்ந்துகொண்டு பொய்யாகக் குத்தவேண்டும்; அப்படி யிருந்தால் அதை வேடன் பார்த்து மந்தரனைப் பூமியில் வைத்துவிட்டு மானண்டை போவான்; இதற்குள்ளே நான் ஆமையின் கட்டைச் சேதிப்பேன்; பிறகு அவ்வாமை தண்ணீரி லோடிப்போம்' என, இதைக் கேட்டு எல்லாம் அவ்வாறே செய்து மந்தரனை விடுவித்தன. பிறகு அந்த வேடன் வாய்த்தவிடம் போய் அடுப்பு நெருப்பு விழுந்த வன்போல வெட்கி மிகவும் வருத்தமடைந்து 'கைக்குவராத பெரிய லாபத்தை இச்சித்துக் கைக்குவந்த சிறிய லாபத்தை யிழந்தேனே! யார்க்கும் 'அதிக ஆசை அதிக நஷ்டம்; கிடைத்தமட்டும் போதுமென்று நினைக்கின்றவனே மகா புருஷன்' என்றிங்கன மெய்ணிக்கொண்டு தன் வீட்டுக்குப் போனவுடனே அந்தக் காகமும், ஆமையும், மானும், எலியும் மிகவும் சந்தோஷமடைந்து தங்களிடத்தில் முன் போல வாழ்ந்திருந்தன.

## சந்திவிக்கிரகம் அல்லது அடுத்துக் கெடுத்தல்

'முன்னே பகையாளிகளா யிருந்தவர்களுடைய விசுவாசத்தில் நம்பிக்கை வைக்கலாகாது. நம்பினு லெப்படிக் காகங் கோட்டான்களின் குகையைக் கொளுத்தி நாசம் பண்ணினதோ அப்படி நேரிடும்' என, அதைக் கேட்டு இராஜகுமாரர்கள் 'அஃதெப்படிச் சொல்லும்' என, சோம சன்மா சொல்லுகின்றான் :—

'தென்தேசத்தின் மயிலை நகரத்தின் சமீபத்தி லொரு பெரிய ஆலமரத்தில் மேகவர்ணன் என்னுங் காகராஜன் தன் கூட்டங்களோடுகூட விருக்கையி லங்கே உருமர்த்தனன் என்னும் இராஜகோட்டான் கூட்டத்தோடு மலைக் குகையிலிருந்துவந் தாலமரத்தை வளைத்துக்கொண் டிராத்திரியி லகப்பட்ட காகத்தையெல்லாங் கொன்றுவிட்டு நாடோறும் போய்க்கொண்டிருந்தது. அதனு லவ்விடத்தை விட்டுவிடும்படி காக்கைகட்கு நேரிட்டதனுல் மேகவர்ணன் தன் மந்திரிகளை யழைத்து 'நம் பகைவர் நாடோறுமிங்கிராமாறு வந்து காக்கைகளைக் கொல்லுகின்றார்கள்; நமக்கோ இரவிற் கண் தெரிகிறதில்லை; மேலு மவர்களிருப்பிடமு மறியோம்; அறிந்தா லங்கேபோ யவர்களைக் கொல்லலாம்; பகைவரை அசட்டை பண்ணினுலது நோய் போற் பெருகிப் பொல்லாங்கு விளைக்கும்; ஆதலா லிப்போழ்து சந்திவிக்கிரகம், பேதம், கலகம் என்னு மிவற்றுட் டக்க திதுவென்று சொல்லுவீர்கள்' என, இதைக் கேட்டு மந்திரிகள் 'அரசன் கேட்பதற்கு முன்னேதானே பிரதானி

கள் இதற்சொல்லவேண்டும். இல்லாவிடிற் கெட்ட பிறகா யினும் விரைவாய்ச் சொல்லவேண்டும், அப்படிச் செய்யா மற் சும்மா இச்சகம் பேசுகிறவனை அரசனுக்குச் சத்துரு வென்று நினைக்கவேண்டும்' என் றிவ்வாறு சொல்லிப் பின்பு மந்திரிகளைந்து மென்ன செய்வோமென் றென்றுக் கொண் டாலோசிக்கத் தொடங்கின. அப்போ தவைகளில் உத்தமசீவி என்பதுகாசனை நோக்கி 'மகாராஜாவே! வலிய வர்களுடனே பகை பண்ணலாகாது. சமாதானமே தகுந் தது. பகைவர்களை வணங்கிக் காலம் பார்த்து மோசம் பண்ணுகிறவர்கள் சுகமடைகிறார்கள். ஆற்றில் தண்ணீர் நிரம்பிப் பெருகிவருகையில் வணங்கிய செடி நாசமடை யாமற் பின்பு முன்போ னிமிர்ந்திருக்கிறதே. நெருக்க மான காலத்தில் துஷ்டர்களுடனே சமாதானம்பண்ணி உயிரைக் காப்பாற்றினாற் பின்பெல்லாச் செல்வமுஞ் சம் பாதிக்கலாம். மேலும் தனக்குப் பலபேர் பகைவர்களி ருந்தால் அவர்களி லொருவனோ டுறவுகொண் டெல்லா ரையுங் கெடுக்கவேண்டும். நிலமும் நட்பும் பொருளு மாகிய விவற்றி னிருப்பைத் தன்னிடத்திலும் மாற்றானிடத் திலும் இவ்வளவென் றாராய்ந்துகொண்டு கூடுமானாற் பின் பகையுட னெதிர்க்கவேண்டும். இல்லாவிடிற் கூர்மவிர்த்தி யை அநுசரித்துத் தனக்குப் பலமுள்ள காலத்திற் கிருஷ்ண சர்ப்பத்தின் வியாபாரத்தை யனுசரிக்கவேண்டும். கெலிப் புந் தோற்பு மொருவன் பங்கல்ல; ஆதலால் மாற்றா னுடைய வலியும் வலியின்மையும் பார்த் தெது செய்யத் தக்கதோ அது செய்யவேண்டும். அச்சமயத்திற் கொக் குப்போ லுறங்கியிருந்து சமயத்தில் அதன் குத்தைப்போ லிருக்கவென்று பெரியோருஞ் சொல்லியிருக்கின்றார்களே' என, இப்படி அதன் வாக்கியத்தைக்கேட் டிராச னிரண் டாம் பிரதானியைப் பார்த்து 'உன் கருத்தென்ன சொல்' என, இரண்டாம் மந்திரி 'அவன் சொன்னவற்றிற் சிறிதும்

நன்மையில்லை; பெரிய சங்கடம் நேரிட்டபோது பகைவரு டனே சந்திபண்ணலாகாது. நெருப்பினால் காய்ச்சின நீர் அந்த நெருப்பை யவியாதா? நம்மைக் கோட்டான்கள் வருத்துகின்றனவென்று அவர்களோடு சந்திபண்ணினாற் கொல்லுவார்கள். விஷமச்சுரம் அப்பியங்கனத்தால் வளர் கிறதுபோலும், நெய்யினால் நெருப்பு விர்த்தியாகிறதுபோ லும் பொல்லாங்கு சம்பவிக்கும். சத்துரு வலியவன் நாமெ ளியோ மென்பீரானால் அதற்குச் சிந்தையில்லை. யானை பெரிதாயிருந்தாலு மதைச் சிங்கக்குட்டி கொல்லா நிற்கும்; ஆதலான் மனோபலத்தோடு பகைவரைக் கொல்லவேண்டும். அரனுடைய கொடுந்தண்டத்தைப் பார்த்து வைரிக ளியல் பாய்ப் பயமடைகின்றார்கள். எங்கும் பெயர்பெற்றிருக்கின்ற பராக்கிரமசாலியாயும் எல்லாராலு மறியப்பட்டவனாயு மிருக்கிறவன் எவனோ அவனே பாக்கியவான். இல்லா விடில் தாயின் யௌவனத்தைக் கெடுத்துப் பயனென்ன! பராக்கிரமத்தா லுயிர்த்திருக்கிறவனே உயிருள்ளவன்; மற் றவர்கள் பிணத்துக் கொப்பானவர்கள்' என் றிப்படி அது சொன்னவற்றையெல்லாம் அரசன் கேட்டு, மூன்றும் பிர தானியைப் பார்த்து, 'உன் கருத்தைச் சொல்வாய்' என, அது 'அரசனே! கேள், பகைவன் தன்னிலும் வலியவனா யிருந்தால் அவனோடு பொருந்தலாவது பொருதலாவது ஒன் றுஞ் செய்யாமல் தன்னிடத்தைவிட்டு வேறிடத்திற் போக வேண்டும். இதுவே நல்லது. இவ்வேளை சண்டை செய்ய லாகாதென்று வைரியின் பலத்தைப்பார்த் தெவன் தேசத் தைத் துறந்து போகின்றானோ அவன் பாண்டவர்களைப் போற் சுகமடைகின்றான். இதைவிட்டெவன் செருக்குடனே யுத்தஞ்செய்கின்றானோ அவன் குலமுதலறக் கெடுகின்றான்' என, இதைக்கேட் டரசன் நாலாம் மந்திரியைக் கேட்க, நாலாம் மந்திரி 'தன்னிடம்விட்டுப் பெயர்தல் தகுதியாகக் காணவில்லை. முதலை தன்னிடத்திலிருந்தால் மலையொத்த

யானையையு மிழுத்துக்கொண்டு போகிறது. அதுவே தன் னிடம்விட்டுப் பெயர்ந்தால் அதை நாய்களு மிழுத்துக் கொண்டு போகின்றன. ஆகையாற் றன்னிடத்திலிருந்து நட்புள்ளவர்களை உதவிக்காக அழைப்பித்துக்கொண்டு பகை வர்களைக் கெடுக்கவேண்டும். எவன் சத்துரு வருகின்று னென்று பயந்து தன்னிடம்விட்டுப் போகின்றானோ அவன் மறுபடி அவ்விடத்திற்கு வருகிறதில்லை. பல் பிடுங்கின பாம்பும் மிதமில்லாத யானையும் இடம்விட்டுப் பெயர்ந்த வாசு மெல்லாராலும் அவமான மடைகின்றன. மேலுந் தன்னிடத்திலிருந்தா லொருவனே நூறுபெயருடன் யுத்தம் பண்ணுகின்றான். ஆதலாற் றுர்க்கத்தையும் மதிலையு மேற் படுத்திக்கொண்டு அவற்றின் சார்பார் பகைவருடனே யுத் தம்பண்ணவேண்டும். அதனால் வெற்றிபெற்றால் லட்சுமி யைப் பெறலாம்; செத்தாற் சொர்க்கம் பெறலாம். ஆகை யா லவ்விரண்டையுந் துறக்கலாகாது. நிலத்திற் சிக்கென ஊன்றிய வேரையுடைய மரம் காற்றினால் விழாது; அந்த மாமே தன்னிடத்திலிராவிட்டால் வாயு அதைத் தள்ளு கிறது; ஆகையால் எதொன்று செய்யத்தக்கதோ அதை இங்கே யிருந்துகொண்டே செய்யவேண்டும்' என, இப்படி அதன் கருத்தை அறிந்துகொண்டு ஐந்தாம் மந்திரியை 'உன்னபிப்பிராய மெப்படி?' என, அது 'சுவாமி! என் ஆலோசனையு மிப்படியே யிருக்கின்றது; சார்பை விட்டாற் சமர்த்தர்களும் பராக்கிரமக் குறைவடைகின்றார்கள்; ஆத லால் யாரையானாலும் உதவிக்குச் சேகரித்துக் கொள்ள வேண்டும். அதுவு மிருப்பிடத்தி லிருந்தே சம்பாதிக்க வேண்டும். உறைவிடம்விட்டுப் பிரிந்தவனுக்கு யாவரும் வாயப்பேச்சினாலானுலுஞ் சகாயம்பண்ணார்கள். எப்போது அக்கினிக்குப் புல் சருகு முதலியவற்றின் சேர்க்கையாற் காட்டைக் கொளுத்த வலியுண்டாகின்றதோ அப்போது வாயு மித்திரத்தனமா யுதவிபண்ணுகின்றது. அந்த நெருப்

பே விளக்குவடிவாய் அந்தரமாய் [illegible] காற்றே அதை யவிக்கிறது. மேலும் வலியவர் [illegible] தா லெல்லோர்க்கும் பெருமையுண்டாகின்ற [illegible] யிலையைச் சார்ந்த நீர்த்துளி முத்தினொளியை யடைகின்றது. சார்பில்லாமல் யாதொரு காரியமுமாகிறதில்லை. ஆகையால் மற்றொருவனை யனுசரிக்கவேண்டும். இதுவே என் கருத்து' என, பிறகு மேகவர்ண ராஜன் பிதாவின் மந்திரியாகிய சிரஞ்சீவியைப் பார்த்துக் கும்பிட்டு, 'உம்முடைய சந்நிதியி லெல்லோரையுங் கேட்டு அவர்கள் சொன்ன உத்தரங்களையு மும்மைக் கேட்பித்தேன், இவற்றிலெது தக்கதோ அதை நீர் சொல்லும்' என, இப்படி ராஜா சொன்னதைக் கேட்டுக் கிழமந்திரி, எல்லோரும் நூற்சார்பாலேயே சொன்னமையால் யோக்கியமாகவே யிருக்கின்றன. சத்துரு பலவானா யிருந்தாலு மவனுக்கு விசுவாசங் காண்பித் தவனைக் கெடுக்கவேண்டும். இல்லாவிட்டால் துர்க்கம் முதலியவற்றிலிருந்து தனக்கும் சத்துருவுக்குமிருக்கிற பலா பலன்களை யறிந் தெதுசெய்வதோ அது செய்யவேண்டும். இது விகிதமாம். மாதர்கள், முகநட்புள்ளவர்கள், பகைவர்கள், சூதாடுகின்றவர்கள் இவர்களிடங்களிலே மெய் முன்னுக்கு வராது. தெய்வம், குரு இவர்களிடத்தில் மெய்யாகவே நடக்கவேண்டும்' என இப்படிப் பெரிய மந்திரியின் வசனங்களைக் கேட்டு மேகவர்ணன் 'பிறனுடைய புரைசல்களை எப்படி யறியலாம்?' என, சிரஞ்சீவி 'மறைந்த பொருள்களைப் பிராமணர்கள் வேதத்தினாலேயும், பசு வாசனையினாலேயும், அரசன் வேவுகாரரை யனுப்பியும், மற்றவர்கள் தங்கள் கண்களாலும் இப்படிப் பலவிதமா யறிகின்றார்கள்' எனக் கேட்டு, மேகவர்ணன் 'நல்லது இந்தப் பிராணிகள் ஏன் பலபல விதமாய்ச் சொன்னார்கள்?' என, சிரஞ்சீவி 'நாரதர் தருமராஜனுக்குச் சொன்னதைக் கேள்: அரசன் தனக் குபயோகமானவற்றைக் குறித் தொருநாழிகை விசா

ரியாவிட்டாலும் உடனே கெடுதிவரும். உடையவன் கண்ணோடாப் பயிரழியாதா? ஆதலான் மந்திரி முத லானவர்களுடைய சமாசாரங்களைக் கணந்தோறுந் தெரிந்து கொண்டு எப்போதுந் தானெச்சரிக்கையா யிருக்கவேண்டும்' எனக் கேட்டு, மேகவர்ணன் 'காகங்களுக்குங் கோட்டான் களுக்கும் வைர மெப்படி வந்தது? சொல்லும்' என, காலங் கண்ட கிழமந்திரி சொல்லத் தொடங்கிற்று:—

'ஒருநாள் மயில் முதலாகிய பறவைகளெல்லாங் கூடி யிருந்து நமக்கெல்லாங் கருட னரசனாயிருந்தும் நம்மைக் கொல்லுகிற வேடர்களினின்று நம்மைக் காப்பாற்றாமல் இதாகிதமுந் தெரியாம லிருக்கின்றான். இத்தன்மையு டைய இறைவனிருந்து பயனென்ன? நமக் கரசனே வேண் டாமென்போமானால் மீகாமனில்லாமற் கப்பல் கரைகாணா ததுபோல், அரசன் இல்லாவிட்டால் நிலைகெட்டுப்போ வோம்; ஆகையால் எல்லாப் பறவைகட்கு மரசனாகக் கோட்டானை நியமிக்கவேண்டுமென நிச்சயித்து, இராச பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய பதார்த்தங்களைச் சேகரித் துப் பின்பு பல வாத்தியங்களை முழக்கிக் கோட்டானைச் சிங் காதனத்தின்மேல் உட்காருவிக்க வேண்டுமென் றிருக்கை யில், ஒரு காகம் வந்து அவற்றைப் பார்த்து, 'இஃதென்ன காரியம்? இஃதென்ன காரியம்?' என, அப்போ தெல்லாப் பறவைகளும், பறவைகளில் வஞ்சகமுள்ளது காகமும், மனி தரில் நாவிதனும், விலங்குகளில் நரியும், மாதர்களிற் பணிப்பெண்ணும் சதுரர்களாயிருக்கின்றார்கள். ஆதலா லிச்செய்தியை இதற்குச் சொல்லி இதனுடன்பாடும் பெற வேண்டுமென்று தீர்மானித்து அதைப் பார்த்து 'எங்களுக் கரச னில்லாமையா லிக்கூகையை அரசனாக்கிக்கொள்ளு கின்றோம்; இதற்கு நீயு முடன்படு' என, இதைக்கேட் டக்காகங் குலுக்கென்று நகைத்துச் சிரக்கம்பம்பண்ணி 'ஓ! ஓ! இது முழுதுங் கெட்ட காரியம்; அழகும் வல்ல

மையுமுண்டாகிய மயில் முதலாகிய அநேகம் பறவைக ளிருக்கையில் இந்தப் பகற்குருடாகிய குரூபி அரசுக்குத் தக்கவனு? குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளலா மா? தோலோதோல்! இதற்கு நான் உடன்படேன். கருட ராச னிருக்கையில் மிகவும் பயங்கர சுபாவமும் வலியின் மையுமுள்ள இக்கூகையை அரசனாக்கி உங்கட்குப் பல னென்ன? ஒருவன் சுவாமியாயிருக்க வேறொருவன் குண சாலியா யகப்பட்டாலும் அவனுபயோகி யாகான். பராக் கிரமமும் குணமுமுள்ள வரச னுலகத்தி லொருவனே போதும். பலபெய ரரசர்களானால் மனிதர்கள் துன்ப மடைகின்றார்கள். கருடன் பெயரினாலேயே எல்லா வரங் களும் பெற்று மனிதர்கள் நம்மிடத்தில் மதிப்புண்டாயிருக் கின்றார்கள். வலியவர்களுடைய பெயரினாலே எளியவர்க ளுக்குக் காரியமாகின்றது. முன் ஒரு முயல் சந்திரவிம்பத் தைக் காட்டிச் சுகமடைந்ததை அறியீர்களா?' என, அதைக்கேட்ட பறவைகள் 'முயல் எப்படிச் சுகமடைந் தது? அதனைச் சொல்லவேண்டும்' என, காகஞ் சொல்ல லுற்றது:—

'ஒரு காட்டில் சதுரதந்தன் என்னு மரசயானை பல யானைகளோடு கூடிக்கொண்டிருக்கும்போது அங்கே மழை பெய்யாமையால் ஆறு, ஏரி, குளம், குட்டை கசங்களெல் லாம் வற்றிப்போக, அப்போது யானைகளெல்லாந் தாகித் துச் சதுரதந்தனைப் பார்த்து, 'சுவாமி! நாங்களெல்லாந் தாகத்தின்பொருட்டுச் செத்தாற்போ லானோம். சிலர் தண்ணீர்க்காகச் செத்தார்க ளாகையால் மிகவுந் தண்ணீ ருள்ள விடந்தேடிப் போயிருப்போமானா லெல்லாருஞ் சுக மடைவோம்' என, இவற்றின் பேச்சைக் கேட்டுத் தன் மனத் தில் யோசித்து இதற் கைந்துநாளைப் பயண தூரத்தி லொரு பெரிய மடு பாதாள கங்கையினு னிறைந்திருக்கின்றது. அங்கே போனால் எல்லோர்க்கும் மிகவுந் தண்ணீர் கிடைக்

ருமென் றிப்படி யுறுதிசெய்துகொண் டப்படியே அங்கே போய்த் தெளிந்த நீரைக் கண்டு அந்திவரைக்குஞ் சலக் கிரீடை செய்துகொண்டிருந்து கரையில் வந்திருந்தன. அப் போதங்கே வாசம்பண்ணிக்கொண்டிருந்த வெகு முயல் களிற் சில, யானைகளின் காலின்கீ ழகப்பட்டிறந்தன; சிலச் சில முயல்களுக்குக் கால்கைக ளொடிந்தன; சிலவற்றிற்கு உடல்கள் நொறுங்கின; சிற்சிலவற்றிற்குக் குடல்கள் சரிந் தன; சிற்சில விரத்தத்தா லிறைந்தன. இப்படிப் பொல் லாங்கு நேரிட்டவுடனே சில முயல்களொன்றாய்க் கூடி இன்றைக் கியானைக்கூட்டம் வந்து நம்மை யழித்தது; இப்படியே தினமுமிருக்கும்; இங்கே வேறே தண்ணீரில்லை; இதனால் நமக்கு மிளாச்சங்கட நேரிட்டது. யானை தொட் டாலும், பாம்பு மோந்தாலும், அரசன் நகைத்தாலும், துர்ச்சனன் மரியாதை பண்ணினாலும் உயிர்ச்சேதம் வரும். ஆனதா லிதற்கேதாவது உபாயம் யோசிக்கவேண்டும்' என, அப்போது சில முயல்கள் 'உயிரைக் காப்பாற்றும் பொருட்டுப் பூமியை விட்டுவிடலாமென் றிருக்கின்றதினால் இவ்விடத்தை விட்டுவிடவேண்டும்' என, இதைக் கேட்டு வேறு சில முயல்கள் நம்முடைய பெரியோர்கள் வாழ்ந்த விடத்தைவிட்டு வேறிடத்திற் போகாமல் யானைக ளஞ்சத் தக்க தந்திர மெடுக்கவேண்டும். நஞ்சில்லாப் பாம்பும் பட மெடுத்தால் அதற்கு நஞ்சில்லாதிருந்தும் பயங்கரமா யிருக் கிற படத்தின் வடிவைப் பார்த்து மனிதர்கள் பயப்படுகின் றார்கள்' என, அதைக்கேட் டொருமுயல் 'யானைகள் பயப் படும்படி யோருபாயஞ் சொல்லுகின்றேன்; விஜயதந்தன் என்னும் நம்முடைய சுவாமி சந்திரமண்டலத்தி லிருக்கின் றான். அவன் தூதனுப்பினானென்று ஒரு நிமித்தம் வைத்து ஒரு பொய்த் தூதனை அவர்களிடத்துக் கனுப்பினால் நங்கா ரியமாகும்' என, இதைக் கேட்டவுடனே எல்லா மப் படியே நிச்சயித்து நெட்டைக்காதனைப் பார்த்து, 'நீ சாது

ரியவான்; எதிரிகளைச் சமாதானம் பண்ணுகின்றவன்; ஆதலாற் றூதகாரியத்தில் நிபுணனாயிருக்கின்றாய்; மௌட்டியமில்லாமையும், சோம்பாமையும், பொய்யாமையும், ஊகித்தறிதலுந் தூதலக்ஷணமென்று சொன்னவற்றிற்கு நீயே வாசஸ்தானமென்று நினைக்கின்றோம். ஆகையால் நீ போனால் நம்முடைய காரியங் கைகூடும். மூடத் தூதனை யனுப்பினாற் காரியங் கெட்டுப்போம்' என்று சொல்லி அதை யனுப்ப, அதுபோய் யானைகள் வரும் வழியில் ஒருயர்ந்த மேட்டி லுட்கார்ந்திருந்து யூதபதியைப் பார்த்துச் சொல்லுகின்றது:—'அடா துஷ்ட யானையே! வெட்கத்தைவிட் டிந்த மடுவில்வந்து பலவகைப்பட்ட விளையாட்டு விளையாடுகின்றாய்; ஆதலான் நானெல்லாரையு மடித் தெறிந்துவிடுவேன்' என, இதைக் கேட்டு யானை 'உன் பேச்சைக் கேட்டு நான் மிகவு மாச்சரியப்படுகின்றேன், நீ யார்' என, முயல் 'விஜயதந்தராஜனுடைய தூதன்; அவன் கட்டளையை உனக்குச் சொன்னேன்; அவன் சந்திர மண்டலத்தி லிருக்கின்றபடியால் சந்திர னுன்னிடத்திற் கனுப்பினான்' என, இதைக்கேட் டிவன் வலியவனுடைய தூதனென் றெண்ணி அதைப்பார்த்து 'சந்திரனுடைய கட்டளையென்ன' என, அது 'நீ இங்கே வந்து நாணமில்லாமற் கிரீடைசெய்து வெகு முயல்களைக் கொன்றாய்; ஆகிலும் நானொருதரம் பொறுத்தேன்; இப்போதுனக் குயிர்மேலாசையிருந்தால் மீண்டுமிங்கே வரவேண்டாமென் றிப்படிச் சந்திரனுடைய கட்டளையாயிருக்கிறதை உனக்கு நான் சொன்னேன். இப்போ திதற்குப் பிரதி யுத்தரவு சொன்னாற் சுவாமி திருவடிகட் கறிவிப்பேன்' என, யானை 'அவனிடத்திற் கென்னை யழைத்துக்கொண்டுபோ; நான் உன்னெசமானனுக்கு நமஸ்காரம்பண்ணி வேறொரு குளத்திற்குப் போவேன்' என, இதைக் கேட்டு முயல் 'நீ தனியா யென்னோடுகூடவா; உனக்குச் சுவாமியைக் காண்பிக்கின்றேன்'

என, பிறகிரண்டும் போகையில் ஓரேரியி னருகேபோய் முயல் யானையைப் பார்த்து, அச்சந்திர னிந்தத் தண்ணீர்க் குள்ளே வந்திருக்கின்றான்; அவனை நமஸ்கரித்துவிட்டுக் கடுகெனப்போ; இல்லாவிட்டா லவனுடைய சமாதிக்குப் பங்கம்வந்தால் அவர்க்கு வெகு கோபம்வரும்' என, அப் போது யானை பயந்து சந்திரவிம்பத்துக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டுப் போயிற்று. அதுமுதற்கொண்டு முயல்க ளங்கே சுகமுற்றிருந்தன. அப்படிப் பெரியோர்களை யடுத் திருந்தால் மலைபோல் வந்தவினை சூரியன்முன் பனிபோ னீங்கும். கொல்லையிற் குற்றியை யடைந்தபுல் உழவ ருழுபடைக்குக் கெடுமோ? துஷ்டர்களுடைய கூட்டுறவு கனைப்போ திருந்தாலுங் கெடுதிவரும். முன்னொரு முயலு மாந்தையுஞ் சண்டையிட்டுக் கூர்ம்பல்லனருகே போன வுடனே இரண்டையு மதுகொன்ற தறியீரோ?' எனக் கேட்டுப் பறவைகள், காகத்தைப் பார்த்து 'அஃதெப்படி?' என, காகஞ் சொல்லத் தொடங்கிற்று:—

'முற்காலத்தில் நான் குடியிருந்த முதுமரப்பொந்தி லிருந்த கபிஞ்சலன் என்னுங் குருவியும் நானும் மாலைக் காலத்திற் பலபல பேச்சுக்கள் பேசிக்கொண்டு சுகித் திருக்கையில் ஒருநாள் அவன் வேறொரு பக்ஷியோடு கூடப்போய் மீண்டு வாராமையால் நான் ஐயோ அவன் வலையிற் பட்டானோ, யாராவது கொன்றார்களோ தெரிய வில்லையே; எப்போதும் வேறேரிடத்திற் றங்குகிறவனல் லவே; என்றிப்படி விசனப்பட்டு வழி பார்த்துக்கொண் டிருக்கும்போது மூன்றாம்நாள் அவன்பொந்தி லொருமுயல் வந்து நான் பலபலவிதமாய்த் தடுத்துச் சொல்லியுங் கேளா மல் முரட்டுத்தனமாய்க் குடிபுகுந்தது. எங்கேயோ சில நாட் கபிஞ்சலன் மனதின்படியே நெற்களைத் தின்றுகொண் டிருந்து, பிறகு தன்னிடத்துக்கு வந்து பார்க்கையில் தன் வீட்டில் முயலிருக்கக்கண்டு அதைப் பார்த்து, 'அடா

சசமே, உனக் கென்விட்டி லிருக்கை நன்றன்று, பொட் டெனப் புறப்பட்டுப் போ' என, இதைக் கேட்டு முயல் 'அடா பேதாய்! இஃது உன் வீடன்று என் வீடே; வீணுகப் பொய்சொல்லிப் பயனில்லாமல் நட்பை யேனிழக்கின்றாய்? வாவி, கிணறு, குளம், கோயில், சத்திர மிவற்றின் சொத்துவம் அவற்றைவிட்டு நீங்கினபிறகு அந்நீங்கினவ னிடத்திலிரா; மற்று மொருவன் வீட்டைப் பிறனொரு வன் பத்தாண்டளவு மியாவரு மறிய வநுபவித்தால் அவ்வீ டவனதே. இந்த விஷயத்திற் சாக்ஷியு மெழுத்தும் பிரமா ணமாகா. இந்நியாயம் மனிதர்களிடத்தி லிருக்கின்றது; பறவைகளிலெது வலிதோ அது கைக்கொள்ளுமென் றிப் படித் தர்மநியாய மிருக்கின்றதனால் வீடெனதே' என, ஆந்தை 'நீ தர்ம சாஸ்திரத்தைக் குறித்துப் பேசுகின்ற மையால் நீயு நானுஞ் சாஸ்திரிக ளிடத்திற்போய் இதைக் குறித்துக் கேட்டு அவர்க ளியாரை யிருக்கலாமென்கின்றார் களோ அவர்களிருக்க வுடன்படுவோம்' என்று சொல்லி நிச்சயித்து இருவரும் விவாதம்பண்ணிக்கொண்டு போகை யில், இவ்வழக் கெப்படியாகிறதோ பார்க்கலாமென்று நானு மவர்களைத் தொடர்ந்துபோனேன். அங்கே கூர்ம்பல்லன் என்னும் பூனை இவர்கள் பேச்சைக் கேட்டு இவர்கள் வழக் குத் தீர்ப்புக்குப் போகின்றார்கள், இவர்களை மோசம்பண்ண வேண்டுமென்று நிச்சயித்து அந்தவழியி லாற்றங்கரையிற் கண்ணை மூடிக்கொண்டு சூரியனைப் பார்க்கிறதுபோல் அபி நயித்துக்கொண்டு 'ஆ! ஆ! இந்த நிசாரமான சமுசாரத்தி லுண்டாகிற வின்பம் கணத்திலழிந்து கனுப்போற் பொய் யாகிறதினாற் றருமத்தைவிட வேறே கதியில்லை; அறத்தை விட் டெவன் நாட்களைக் கழிக்கின்றானோ அவன் மரப்பா வையை யொத்தவன். அவனை மூச்சுவிட்டுக்கொண் டிருக் கையிற்றானே பிணமென் றெண்ணவேண்டும். எப்படித் தயிரின் சாரம் நெய்யோ, எள்ளின் விசேஷ மெண்ணெ

யோ, அப்படியே பிழைக்கிருக்கிறதின் சாரம் கருமமாம். இதைத் துறந்து மிகவுஞ் சோற்றைத் தின்றுகொண்டே காலங் கழிக்கின்றவர்கள் நிலச்சுமையா யிருக்கின்றார்க ளென்று துக்கப்படுகின்றேன். ஓ சனங்களே! கருமம் பல பல விடையூறுகளோடுங் கூடிக்கொண் டிருக்கின்ற தாகை யாற் சுருக்கமாய்ச் சிறிது கருமஞ் சொல்லுகின்றேன். பிறர்க்குதவி செய்வதற் கொத்த புண்ணியமும், பிறரை வருத்துவதை யொத்த பாவமுமில்லை. மேலும் தனக்குத் துன்பந்தருவது பிறனுக்குந் தருமென் றிப்படித் தர்ம ரக சியங்களைக்கேட் டுள்ளத்தில் வைக்கவேண்டும்' என, இப் படி அதன் வாக்கியத்தைக் கேட்டு முயல் 'கபிஞ்சலா! தருமஞ் சொல்லுகின்றவன் ஆற்றங்கரையி லுட்கார்ந்திருக் கின்றான்; அவனைக் கேட்போம்' என, கபிஞ்சலன் இவன் நமக்கியல்பான பகையாளி யாதலால் தூரத்திலிருந்தே சொல்லவேண்டுமென்று நிருவாயித் தவனைப் பார்த்து 'ஓ தபோநிதியே! நீ அறமுணர்ந்தவ னாகையா லெங்க ளிருவருடைய வழக்கைக் கேட்டுத் தருமநூற்படி நியாயஞ் சொல்லிப் பொய் சொல்லுகிறவனைக் கொல்லவேண்டும்' என, இவ்வார்த்தையைக் கேட்டுப் பூனை காதின்மேற் கையை வைத்து 'இப்படிப்பட்ட பேச்சை மறுபடி சொல்லா தேயுங்கள்; நரகத்திற்குக் காரணமாகிய இதைவிட்டு நான் அறத்தை யநுசரித்துக்கொண்டிருக்கின்றேன். மேலும் கொலைசெய்கிற புலி முதலானவற்றைக் கொல்லுகிறவர் களும் நரகத்திற்குப் போகிறார்களென்று சாதுக்கள் சொல் லுகின்றார்கள். ஆனால் மற்றவர்களுக்குக் கொலையினால் நரகம் வருமென்பதில் ஆச்சரியமென்ன? யாககருமத் திற் பசுவைக் கொல்லுகிறவர்கள் வேதத்திலுள்ள பொருளை யறியாதவர்கள்; அந்த விஷயத்தில் ஏழுவருடத்தில் நெல் லைக் கொண்டுவந்து ஓமம் பண்ணவேண்டுமென்று சொல்லி யிருக்கின்றது. பசுக்களைக் கொன்றும் மரங்களை வெட்டி

யும் ஓமம்பண்ணிச் சுவர்க்கங் கிடைக்கிறதானால் நரகத்துக் கேன் போகின்றார்கள்? ஆதலால் இவையெல்லாம் வஞ்சகர் களுடைய காரியமென் றறிந்திருக்கின்றமையால் உங்களைச் சுத்தமாய்த் தின்னேன்; உங்களுக்கு வழக்குமாத்திரந் தீர்ப் பேன்; நான் கிழவனானபடியினால் எனக்குத் தூரத்துச் சொற் கேளாது; நீங்கள் கிட்டவந் தொருவர்க்கொருவர்க்கு இருக்கின்ற வழக்கென்னவோ அதைச் சொன்னாற் கேட்டு, இம்மைக்கு நலந்தருவதாகிய நடுவுநிலைமையாய்ச் சொல்லு வேன்; ஆசையினாலாயினுங் கோபத்தாலாயினும் அநியா யத் தீர்ப்புச்சொல்லுகிறவன் நரகத்திற் போவான்; ஆத லால் நீங்களென் காதினருகேவந் துங்கள் வழக்கைத் தெரி வியுங்கள்' என, அவை இப்பசப்பு வார்த்தையினால் அத விடத்தி னம்பிக்கைவைத்துக் கிட்டவர, அவற்றைக் கைக ளினா லொருமிக்கச் சேர்த்துப் பிடித்து வழக்கற விரண்டை யுந் தின்றது. ஆதலால் தீயோரைச் சேர்ந்தா லிப்படிக் கொத்த தீங்கு நேரிடுமென் றறிந்து செய்யத்தக்கதெதுவோ அதைச் செய்யவேண்டும்' என, அப்படிக் காகஞ் சொன்ன தைப் பறவைகளெல்லாங் கேட்டு, இவன் சொன்னது நன் றென்றெண்ணி இப்பொழுது சேகரித்த பொருட்களை யெல்லா மிப்படியே வைத்து மற்றொருவனை யரசனுக்குவ தைக்குறித்து, மீண்டு மெல்லாங் கூடுவோமென் றுறுதி செய்துகொண் டெல்லாருந் தம்மிடத்திற்குப் போனார்கள். அப்போது சிங்காதனத்தி னருகே மனையாளோடுகூட உட்கார்ந்திருந்த கோட்டான் தன் பெட்டையைப் பார்த்து, 'பெண்ணே! மங்களஸ்நானமாகியும் இப்போது இராச்சியா பிஷேகம் ஏன் பண்ணாமலிருக்கின்றார்கள்?' என, பேடு 'உன் இராச்சியாபிஷேகத்துக்காக இடையூறு செய்தபடி யாற் பறவைகளெல்லாந் தங்கள் வீட்டுக்குப் போயின, காகமாத்திர மிருக்கின்றது' என, இதன் வார்த்தையைக் கேட்டுக் கோட்டான் காகத்தை நோக்கி, 'அடா துஷ்டா!

நானுனக்கென்னசெய்தேனென்றென் காரியத்தைக் கெடுத்தாய்? இதனுலின்றுமுதல் உன் குலத்துக்கும் என் குலத்துக்கும் நிராப்பகையிருக்கட்டும்; வாளினல் வெட்டினுலும், பாணத்தினு லெய்தாலும் அக்காயமாறிக் குணப்படும்; சொல்லின் காய மப்படி மாருதென்று சொல்லிவிட்டுத் தன் பெட்டையோடுகூடத் தன்னிடத்துக்குப் போயிற்று. பின்னர் அக்காகம் மனதிற் றிகிற்பட்டு 'நுணலும் தன் வாயாற் கெடும்' என்பதுபோல் இந்தப் பேச்சைச் சொல்லி நான் வீண் பகை சம்பாதித்தேன். சமர்த்தனுயிருக்கின்றவன் சபையிற் பிறரை நிந்திக்கலாகாது. மேலும் யாதொன்று செய்யவேண்டுமோ அதை மனங்கலந்த நட்டோரை யுசாவிச் செய்யவேண்டும். அப்படிச் செய்யாமலிப்போது சங்கடத்தி லகப்பட்டேனென் றிப்படிப் பச்சாத்தாபப்பட்டு அதுவுந் தன் வீட்டிற்குப் போயிற்று. அதுமுதற்கொண்டு கோட்டானுக்கும் நமக்கும் பகை தலைமுறை தலைமுறையாக விடாமற் றொடர்ந்துவருகின்றது' என, இப்படிக் கிழமந்திரியின் மொழியைக் கேட்டு மேகவர்ணராசன் மறுபடியு மதைப்பார்த்து, 'ஐயோ! இப்போதென்ன செய்யலாம்?' என, அவன் 'பார்ப்பாளிடத்திலிருந்து ஆட்டைச் சில வஞ்சகர்க ளெப்படி வஞ்சித்துக் கொண்டுபோனுர்களோ அப்படி நான் கோட்டான்களிடத்திற்குப் போய் அவர்களை வஞ்சனைபண்ணிக் கொல்லுகின்றேன்' என, அதைக்கேட் டிராசன் 'அவர்கள் ஆட்டையெப்படிக் கொண்டுபோனுர்கள் சொல்லும்' என, மந்திரி சொல்லுகின்றுன்:—

'ஒரு தேசத்திலே மித்திரசர்மா என்னும் பிராமணன் மாகமாதத்தில் யாகஞ்செய்யவேண்டிப் பசு சம்பாதிப்பதற்காக வேறூருர்க்குப் போய் ஒருவனைப் பசுக்கேட்க, அவன் இவன் நற்காரியத்தைக்குறித்துக் கேட்கிறுன்னென் றதற்குடன்பட்டு நேர்த்தியான ஒரு பெரிய ஆடு கொடுக்க வாங்

கிக்கொண்டுவருகையில், அவ்வா டிங்குமங்கு மோடத் தொ டங்கினதினால் அதைத் தோளின்மேற் போட்டுக்கொண்டு நடக்கையில், அதைச் சில வஞ்சனைக்காரர்கள் தூரத்தி லிருந்து பார்த்துப் பார்ப்பானை வஞ்சித்து அந்தப் பசுவை வாங்கிக்கொண்டோமானால் நாமெல்லோரும் பசி தீர்த்துக் கொள்ளலாமென் றுலோசித்து அவர்களி லொரு தூர்த் தன் வந்து, 'ஓய் நித்தியாக்கினி வளர்க்கின்ற பிராமணா! நீ சிலனாயிருந் திப்பழிப்பான காரியத்தை யேன் பண்ணு கின்றாய்? மிகவும் ஈனமுள்ள நாயைத் தோண்மே லெப் படிக் கொண்டுவருகின்றாய்? நாய், கோழி, சண்டாளன், கழுதை ஆகிய இவைகளைத் தொடலாகாதென்று சாஸ்திர மிருக்கின்றதே' என்று சொல்லக்கேட்டுப் பிராமணன் கோபித்துக்கொண்டு 'நீ யாகப்பசுவை நாயென் றெப்படிச் சொல்லுகின்றாய்? நீ கண்கெட்டையா என்ன?' என, தூர்த்தன் 'பிராமணா! கோபித்துக்கொள்ளாதே, சுகமாய்ப் போ' என, பிறகு பிராமணன் சிலதூரம் நடந்துபோனான். மறுபடி இரண்டாந் தூர்த்தன் வந்து, 'ஓ அந்தணா! இக் கன்றின்மே லுனக்கென்ன பக்ஷமிருந்தாலும் செத்தபிற கதைத் தோண்மே லெடுத்துக்கொண்டு போதல் சரியன்று. செத்த மிருகங்களைத் தொட்டால் சாந்திராயணத்தையும் பஞ்சகவ்வியத்தையுமல்லாமல் அந்தத் தீட்டுப் போகாது. இப்படிப்பட்ட நிஷித்தத்தைத் தோண்மே லேன் சுமந்து போகவேண்டும்?' என, அப்போ தப்பிராமணன் அப்ப டியே சொல்லிவிட்டுப் போகத் தொடங்கினான். உடனே மூன்றாங் கபடி யெதிரிட்டு, 'ஓ! ஐயனே! கழுதையைத் தீண்டுகிறவனுக்குச் சசேல ஸ்நானஞ் சொல்லியிருக்க நீ அதை எப்படிக் கொண்டுபோகத் துணிந்தாய்?' என, அந்தணன் இந்த ஆட்டைக்குறித்து மனிதர்கள் பலவித மாகத் தர்க்கிக்கிறபடியால் இது யாதோ ஒரு ராட்சசனு யிருக்கவேண்டுமென் றெண்ணி, அதைப் பூமியில் விட்டுத்

தன் வீட்டுக்குப் போனான். அதன்பின் அவ்வஞ்சகர்க ளைக் கொன்று தின்றார்கள். ஆகையால் நான் சத்து ருவை வஞ்சித்து உன் கருமத்தை முடிப்பேன். நானென்ன உபாயஞ் சொல்லுகின்றேனோ அப்படியே செய்; நீ சத்துரு பக்ஷத்தி லிருக்கிறாயென் றென்னை நிந்தித்து வேறொன்ற ளியக்தத்தை யென்மேலெல்லாம் பூசி ஆலமரத்தின்கீழே யெறிந்துவிட்டு, நீ கூட்டங்களோடுகூட மலையின்மேற் போயிருந்தால் கோட்டான்கள் தங்கள் பகைவர்களுக் கிவன் விரோதியாயிருக்கின்றானென் றெண்ணிக்கொள்ளு வார்கள். பிறகு நானவர்கட்கு நம்பிக்கை வருவித்துத் தூர்க்கம் முதலானவற்றி னுளவறிந்து சத்துருநாசம் பண்ணு வேன். அதுவரைக்கும் நீ யங்கேயிரு. இவ்வாலோசனை நான் முன்னமே செய்து இப்போதுனக்குச் சொன்னேன்' என, இப்படி அதனுள்ளுரையைக் கேட்டு மேகவர்ணன் 'அத்தியந்தம் பிரியமான பிராணனை நீ துரும்புபோ னினைத் தாய்' என, பிரதானி 'இராசகாரியத்துக்காகச் சேவகர்க ளிப்படியே செய்யவேண்டும். இடர்வருங்காலத்திற் சேவ கர்க ளுதவுவார்களென் றரசர்கள் தாமபிமானத்தினால் அவர்களைப் பரிபாலிக்கின்றார்கள். அப்படி உதவாவிட் டாற் பரிபாலனத்துக்குப் பயனென்னை?' என்று இப்படிச் சொல்லிப்போய்க் கலகத்துக் காரம்பித்தது. இந்த இரக சிய மிரண்டாம்பேருக்குத் தெரியாது. அதனால் மற்றைப் பறவைக ளதைக் கொல்லத் தீர்மானிக்க, அப்போது மேக வர்ணன் 'நீங்கள் அவனைத் தண்டிக்கவேண்டாம், இவன் பகையாளிக்கு நன்மைபண்ணுகிற துஷ்டனாகையால் இவனை நானே சிக்ஷித்துக் கோபமாறுவேன்' என்று சொல்லி யெ ழும்பி எழும்பி மூக்குமுனையால் அதைப் பொய்யாகக் குத்திச் சங்கேதப்படி யாலமரத்தின்கீழெறிந்து, கூட்டத்தோடுகூட வேறிடத்திற்குச் சென்றது. பிறகு பொழுதுபோனவுடனே இராசஜகோட்டா னவ்விடத்திற்கு வந்து மரத்தைச் சுற்றி

முற்றுகை போட்டுக்கொண்டு காகங்களைப் பார்க்கும்போது யாதொன்று மங்கே யில்லாமையால் தன் கூட்டத்தைப் பார்த்துக் 'காகங்க ளெவ்வழியாய்ப் போயின? அவ்வழி யுங்களுக்குத் தெரிந்திருந்தால் இப்போதே யவர்களைக் கொல்லுவோம். பகைவர்கள் துர்க்கமுதலியவற்றைச் சேர் வதற்கு முன்னேயானால் அவர்களை வெல்லலாம்; பின்பு வெல் லக்கூடாது' என்றிப்படிச் சொல்லிக்கொண்டிருக்கையில் சிரஞ்சீவி மெல்லெனக் கத்தினான். அதைக் கேட்டமாத் திரத்தில் வெகு கோட்டான்கள் போய் அதைக் கொல்லத் தொடங்கும்போது, சிரஞ்சீவி 'நான் மேகவர்ணன் மந்திரி, என் பெயர் சிரஞ்சீவி; அக்கொடியவ னெனக் கிப்படிப் பட்ட அவஸ்தையை வரப்பண்ணினான். ஆகையால் நான் உங்களரசனைச் சரணமாக வடைகின்றேன்' என, இதைக் கேட்டுச் சேவர்கள் உருமர்த்தனனுக்குச் சொல்ல, அவ னதைக் கேட்டு ஆச்சரியமா யதனருகே போய், 'ஓ சிரஞ்சீவி உனக்கிந்த ஸ்திதி யேன் நேரிட்டது?' என, சிரஞ்சீவி கை கூப்பிக்கொண்டு 'முன்னாள் நீர் காகங்களை யடித்தீரென்று கோபமா யந்தக் கொடிய மேகவர்ணன் உம்முடனே போர் செய்ய ஆயத்தப்பட, அப்போது நான், இராசனே! இஃது உனக்குத் தக்கதன்று; வலியவனுடனே எளியவன் போர் செய்தால் விளக்கை யவிக்க விட்டில் போய் விழுகிறாப் போற் கெடுதி யுண்டாகும்; ஆதலா லவருடனே சமாதா னம் பேசி அவர்கள் கேட்பதைக் கொடுத்துப் புத்திமானை வன் உயிரைக் காப்பாற்றவேண்டும். பணம் எப்போது மீட்டுக்கொள்ளலாம்; உயிரிழந்தாற் பெறக்கூடாது, என் றிப்படிச் சொல்ல, என்னை! நீ பகைவர் பக்கமாய்ப் பேசு கின்றாயென்று வைது இந்த உபத்திரவம் பண்ணினான். இப்போ தெனக்கு உம்முடைய திருவடிகளே துணை; எனக் கிந்தக் காயங் குணப்பட்டாற் காகங்கள் முழுதையுங் கொன்று உமக்குக் கீழ்ப்பட்டிருப்பேன்' என் றிப்படி

அது சொல்லக் கேட்டு உலூகராசன், குருதிக்கண்ணன், கோடுங்கண்ணன், கொள்ளிக்கண்ணன், குரூரநாசன், பிரகாரநாசன் என்னுந் தன்னுடைய ஐந்து மந்திரிகளையும் பார்த்து 'சத்துரு மந்திரியாகிய இவன் நமக்குக் கைவசமானான்; இனியென்ன செய்யலாம்?' என, அப்போது, குருதிக்கண்ணன் இவனவனுக்கு முதன் மந்திரி; காலவிசேஷத்தாலவனுக்கிவன் பிரதிகூலமாய்த் தோற்றப்பட்டான். அவன் ஒருநாளு மிவன் வார்த்தைக்கு வேறாக நடக்கிறவனல்லன்; ஆகலா லிவனைத் தம்மிடத்தில் வைத்துக்கொண் டிவன் கையாலே சத்துருவோடு சந்தி செய்யவேண்டும்; இதுவே தக்கது, சாம முதலான நான் குபாயத்தில் தண்டங் கடைப்பட்டது. ஆகையாலே யந்தப் பிரயோகங் கடைசியிற் பண்ணவேண்டும். சாமத்தினாற் செய்கிற காரிய மெப்போதுங் கெடுகிறதில்லை. ஆகையா லவர்களிடத்திற் றண்டத்தை யாலோசிக்கலாகாது; சருக்கரையைத் தின்று பித்தம்போமானாற் கைப்பான மருந்தை யேன் தின்னவேண்டும்? ஆதலாற் சாமோபாயமே யென் சம்மதம்; இதுவே நல்லது' என, இதைக்கேட்ட உருமர்த்தனன் இரண்டா மமைச்சனைப் பார்த்து, 'உன்னுள்ளுரை யாது? அதைச் சொல்' என, கோடுங்கண்ணன், 'வேந்தனே! இக்காகங்கள் நமக் கியல்பான வைரிகள்; ஆகையால் இவர்கள் சமாதானந் தக்கதன்று, தண்டமே தகுந்தது. வெல்லக்கூடாத பகைவர்களிருந்தால் அவர்கட்கு விரோதமாகிய தாயாதிகளை வருவிக்கவேண்டும். இல்லாவிட்டாற் பணங் கொடுத்தாவது, பொய்ப்பத்திரம் பிறப்பித்தாவது அவர்களுள் ஒருவர்க்கொருவர் பகை யெழுப்பவேண்டும். நடுவிற் புரைச லுண்டானால் முத்தும் பங்கப்படுகின்றது; ஆதலால் இதைக் குறித்து உன் சொல்லைக் கேட்டுச் சுவய பக்ஷத்தை இரக்ஷித்துக்கொண்டு பரபக்ஷத்தைப் பேதிக்கவேண்டும்; இக்காகம் வைரியாயினுங் கொல்வது நன்றன்று; ஒருவேளை

பகைவனும் நன்மை சொல்லுகின்றான். ஒரு திருட னொரு வனைப் பிழைப்பித்ததும், ஓர் ராட்சதன் இரண்டு பசுக் களைப் பிழைப்பித்தது மறியீரோ?' என, அரச னதைக் கேட்டு 'அஃதெப்படி?' என, கோடுங்கண்ணன் சொல்லத் தொடங்கிற்று:—

'ஒரு நகரத்திலிருக்கிற ஏழைப் பார்ப்பான் தனக் கொருவன் கொடுத்த பசுவின்கன் றிரண்டையும் புன் முதலானவைகள் போட்டு மிகவும் பெருத்துக் கொழுக்க வளர்த்தான். அக்கடாரிகளைப் பார்த் தவற்றைக் கொண்டு போக ஒரு திருடன் தும்பெடுத்துக்கொண்டு புறப்பட்டு வரும்வழியில், கோரப்பல்லும் நீண்ட மூக்குஞ் செம்பட்ட மயிருஞ் சிவந்த கண்ணுங் கறுத்த உடம்புமாக விருந்த ஓர் ராக்ஷதனைக் கண்டு பயந்து அவனைப் பார்த்து 'நீ யார்?' என, அவன் 'நான் சத்யவசனன் என்னும் ராக்ஷதன், நீ யார் சொல்' என, இவன் 'நான் திருடன், ஒரு வறிய பிரா மணன் வைத்துக்கொண்டிருக்கின்ற பசுக்களைத் திருடப் போகின்றேன்' என, இராக்ஷதன் 'மித்திரா! அவ்வந்த ணன் பரிசுத்த னாகையால் நானு மவனைத் தின்பேன்; பின் பிருவர் காரியமுமாகும்' என, இப்படிப் பேசிக்கொண்டு இருவரு மங்கே போகும்போது, அந்தணன் தூங்கிக்கொண் டிருந்தமையா லவனைத் தின்ன விராக்கதன் போக, அவனைப் பார்த்துச் சோரன், 'மித்திரா! நான் பசு விரண்டையுங் களவுசெய்தபிறகு நீ அவனைத் தின்' என, இராக்ஷதன், 'சிநேகிதனே! பசுக்கூச்சலாற் பார்ப்பான் விழித்துக்கொண் டால் நம்முடைய காரியமெல்லாங் கெட்டுப்போம், ஆத லால் நான் முன்னே அவனைப் புசிக்கின்றேன், பின்னர் நீ அச்சமில்லாமற் கோக்களைக் கொண்டுபோ' என, கள்ளன் நீ அவனைத் தின்னத் தொடங்கு மரவத்தால் வேறொரு வன் வந்தால் அவ னென்னைக் கொண்டுபோகவொட்டான்; ஆதலால் பசுக்க ளிரண்டையுங் கொண்டுபோனபின்பு நீ

அவனைத் தின்' என் றிப்படி யிருவர்க்கும் வாதம் நடக்கையி லவ்வேதியன் விழித்துக்கொண்டான். அப்போது கள்ளன், 'ஓ பிராமணா! இவ்வரக்கன் உன்னைத் தின்பேனென்கின்றான்' என, அதைக்கேட் டிராக்கதன் 'இக்கள்வனுன் மாடுகளைக் களவாட வந்தான்' என, இப்படி யிருவர் பேச்சையுங் கேட்டுப் பார்ப்பான் மெனுக்குலைப்பட்டு இஷ்ட தேவதைத் தியானத்தா லிராக்ஷதனினின்றுந் தன்னைக் காப்பாற்றிக்கொண்டு கையிற் றடியெடுத்து வந்து கள்வனை யடித்துத் துரத்தினான். ஆகலான் மாற்றானும் ஒருநா ளிதஞ் சொல்லுகின்றானென்கின்றேன்' என, இப்படி யவனுள்ளத்தை யறிந்து உருமர்த்தனன் கொள்ளிக்கண்ணனைப் பார்த்து 'உன் மனதைச் சொல்வாய்' என, அவன் 'மகாராஜனே! சாமமும் பேதமு மெனக் குடம்பாடல்ல; சமாதானத்தாற் பகைவனுக்குச் செருக்குண்டாகும்; மற்றுமுமது பேதத்தை யவ னறிந்தால் ஒருவேளை மோசமுஞ் செய்வான். ஆகலால் விவேகி கொடையாற் பகைவனை வசம்பண்ணி அதைமேன்மேலும் பெருகச் செய்தாற், பின்பவன் தனக்குத் தானே கைவசமாவான். மேலும் இவர்களோடு வருத்தமாய் நம்மிடத்தில் வந்தமையால் விரோதிகளிடத்தி லிருக்கின்ற குறைவுகளை யறிவித்து நமக்குச் சந்தோஷம் வருவிப்பான்; அதுபற்றி இவனைப் பாதுகாக்கவேண்டும். இங்ஙனஞ் செய்தால் ஒருவர்க்கொருவர் இன்சொற்களாற் காலப்போக்குஞ் சம்பவிக்கும். மேலும் நம்முடைய மர்மங்களையும் வெளிவிடான். இங்ஙனமன்றி ஒருவர்க் கொருவ ரிரகசியங்களை வெளிவிட்டால் அவர்கள் வயிற்றிலிருந்த பாம்பும், புற்றிலிருந்த பாம்பும் நாசமடைந்தாற்போற் கெடுவார்கள்' என, உலூகராஜன் 'அஃதெப்படி?' என, கொள்ளிக்கண்ணன் சொல்லுகின்றது:—

'விஷ்ணுவர்மன் என்னும் ஒரு மன்னனுக்கு வயிற்றில் ஒரு நோயுண்டாகி நாளுக்குநாள் உடம்பு மெலிந்துபோகிற

திருல் அவன் தேசாந்தரங்கட்குப் போய் ஒரு கோயிலில் இருக்கையில் அவ்வூரிலிருந் தரசு செய்துகொண் டிருக்கிற பலி என்பவனுடைய குமாரிக ளிருவரும் பலியினிடத்திற்கு வந்தபோது அவர்களில் ஒருத்தி அரசனை நோக்கி, 'இராசனே! வெற்றிபடைவாய்' என்ருள்; மற்றொருத்தி 'நல்ல போசனம் பண்ணுவாய்' என, அதைக் கேட்டவுடனே அரசனுக்குக் கண்கள் சிவந்து அமைச்சர்களைப் பார்த்து 'இந்தக் கெட்ட பேச்சுக்காரியை நோயாளிக்குக் கொடுத்தால் இவள் நல்ல போஜனங்களை அநுபவிப்பாள்' என, அமைச்சர்க ளிராசன் கட்டளையிட்டபடியே கோயிலிலிருந்த இராசகுமாரனுகிய பிணியாளிக்கு அவளைக் கொடுத்தார்கள், பின்பு அவள் கணவனை ஈச்சுரன்போல எண்ணிப் பணிவிடைகள் செய்து அவனை யிட்டுக்கொண்டு மற்றொரு தேசத்துக்குப் போகும்போது வழியில் ஓரிடத்தில் இறங்கி வேலைக்காரனைக் கூட அழைத்துக்கொண்டு சமையலுக்கான கடைச் சரக்குகள் வாங்கப் போனபோது வியாதியஸ்தனுகிய இராசகுமாரன் நித்திரைபோனுன். அவ்வேளையி லங்கொரு புற்றிலிருந்த பாம்பு இராஜன் கிட்ட வந்து பேச, அவ்வொலியைக் கேட்டவன் வயிற்றிலிருந்த பாப்புஞ் சத்தித்தது. அப்போழ் திரண்டுக்கும் வாக்கு வாதமுண்டாக, இதற்குள்ளே அவன் பெண்டாட்டி வந்து மரத்தின் மறைவினின் றவற்றின் பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டிருந்தாள். புற்றுப்பாம்பு வயிற்றுப்பாம்பைப் பார்த்து, 'அடா துராத்மாவே! இந்த அழகுள்ள இராசபுத்திரனை ஏன் வருத்துகின்ருய்?' என, வயிற்றரவு, 'ஆகார நிறைந்த குடத்திலிருக்கின்ற வென்னை நீயேன் நிந்திக்கின்ருய்?' என, புற்றரவு, 'துஷ்டா! கடுகு தின்றுனுல் நீ இறப்பாய், அவன் சுகமடைவான்; ஆனுல் இஃது ஒருவர்க்குந் தெரியாது' என, பின் னவ்வயிற்றரவு, 'வெந்நீரால் உனக்கும் இலயம் வரும்' என, இப்படி அவ்விரண்டு

இரகசியங்களையுங் கேட்டு அவள் அவ்வண்ணமே செய்து அப்பாம்பைக் கொன்றாள். அதனால் மன்னவனைப் பிரிந்து தன்னகரத்திற்கு மனைவியோடுகூட வரும்போது அந்நெறியில் அவடந்தையுஞ் சுற்றமும் பார்த்து இருவர்க்குஞ் சற்காரம்பண்ணி அவர்களை வழியனுப்ப, பின்னிருவருந் தங்கள் தேசத்துக்குப்போ யரசாண்டுகொண்டிருந்தார்கள். ஆகையால் பரஸ்பரம் இரகசியங்களைக் காப்பாற்றாவிடில் இப்படி நஷ்டம் நேரிடும்' என, இதைக்கேட் டிறைவன் குரூரநாசனைப் பார்த்து 'உன்னிஷ்டம் எது?' என, அது 'இம்மூவர் சொன்னது முத்தமமாக விருக்கவில்லை; சாம தான பேதமென்னு முபாயங்கள் வலியில்லாதவர்களைக் குறித்திருக்கின்றன. வலியுள்ளவர்கள் சத்துருக்களிடத்திற் றண்டமே செய்யவேண்டும். அதைத் துறந்து சாமமுதலாகிய தந்திரத்தை யோசிக்கின்றவனைப் பகைவர் பயந்தவனென்றெண்ணி அவன்மேல் வருவார்கள். ஆகையால் வேந்தன் தண்டத்தினாலேயே பாக்கியஞ் சேகரிக்கவேண்டும். பராக்கிரம மில்லாவிடி லெது தெய்வத்தால் நேரிடுகிறதோ அதை நுகரவேண்டும். மேலு முலகத்தி லெல்லோரும் இலட்சுமியை விரும்புகின்றார்கள். அப்படி விரும்பினாலும் மனவூக்கத்தோடு தண்டத்தால் எதிரிகளை அவமானம் பண்ணுகின்றவர்களுக்கே இலட்சுமி கைவசமாகின்றாள். சோம்பலானவர்கள் அருமையான பொருளைக்குறித் திலக்குமியைப் பிரார்த்திக்கின்றார்கள். பராக்கிரமமுள்ளவனே தன் சௌரியத்தினால் இலக்குமியைப் பலவிதமாக அனுபவிக்கின்றான். ஆதலாற் பலவான் பகைவனைக் கொல்லவேண்டும்' என, இதைக் கேட்டு அரசன் பிரகாரநாசனை நோக்கி, 'உன் மனதி லென்ன விருக்கின்றது?' என, அவன் 'இராசாவே! இவன் தங்களை அடைக்கலமாக வடைந்தபடியினால் இவனைத் தவ்வனுக்கி முற்காலத்தில் இராமச்சந்திரன் விபீஷணனைத் தலைவனாக்கி இராவணாதிகளை எப்படி அழித்தானோ

அப்படியே சத்துருக்களைத் தாமழிக்கவேண்டும். மேலுஞ் சரணமடைந்தவனைக் கொல்லுகின்றவன் ரௌரவ நரகத்தை அடைவானென்று சிபிச்சக்கரவர்த்தி தன் மாமிசத்தை வேடனுக்குக் கொடுத்துப் புறாவை விடுவித்தானென்று பாரதத்திற் சொல்லியிருக்கின்றது. அப்படியே ஒருவனிடத்திலவன் பகைவன் வந்து நடுக்குறும்போது அவனுக்காதித்தியஞ் செய்வதைக்குறித்து அவ னெருப்பிற் குதித்தான்' என, இதைக் கேட்டு உருமர்த்தனன் 'அஃதெப்படிச் சொல்' என, பிரகாரநாசன் சொல்லுகின்றது :—

'ஒரு வனத்தில் ஒரு வேடன் கையில் குருவிக்கூடுங் கண்ணியுந் தடி முதலான வேட்டைக் கருவிகளு மெடுத்துக்கொண்டு திரியாநிற்கையில், அசதியிற் பெருமழைவந் திருட்டிக்கொண்டு பிரளயகாலம்போலக் காற்றெழும்ப அப்போதவ் வனசரன் நடுக்கலெடுத்து மரத்தின் சார்பினின்று, 'பகவானே! இந்த வேளையில் உன்னைவிட வேறொருவருங் காப்பாற்றுவாரில்லை' என, அவ்வேளையில் அம்மரத்தின்மேலிருக்கும் புறா தன் பெட்டை வரவில்லையென்று விசனமாய் 'இன்றைக்கென் னுயகி வரவில்லை. அவளை யாராயினும் பிடித்தார்களோ என்னவோ; அவளில்லாமல் இங்கெங்கும் பாழாகத் தோற்றுகின்றது. மனையாளில்லாத வீடு சுடுகாட்டைப்போ லிருக்கின்றது. கற்பும் கணவ னின்புறும் வகைச் செயலுமுள்ள இல்லாளையுடையா னெவனோ அவனே பாக்கியவான்' என்றிப்படி அவன் புலம்புகிறதைக் கேட்டு அவ்வேடன் கைக்கூட்டி லகப்பட்டிருக்கின்ற பெண்புறா துக்கித்து 'முன்பிறப்பில் தீவினை செய்தவர்களுக்குப் பலவகைப்பட்ட தளையுஞ் சிறையும் நோயும் வறுமையுஞ் சம்பவிக்கின்றன. அஃதிருக்கட்டும்; எச்சமயத்தில் எது நேரிடுமோ அஃதெப்போதும் பிசகுகிறதில்லை' என்று சொல்லிப் பிறகு தன் பதியைக்குறித்து, 'ஓ ஓ! என் பிராணநாதா! நமது வீட்டுக்கு வந்த இவ்வேடனுக்

குக் குளிர் முதலாகிய துன்பத்தை நீக்கி உதவிசெய்யவேண்டும்; வந்த விருந்தை ஓம்பாவிட்டால் அவன் தன் பாதகத்தை இல்வாழ்வானுக்குக் கொடுத்து இல்வாழ்பவன் புண்ணியத்தைக் கொண்டுபோகின்றான். ஆதலால் இவன் நம்முடைய பெண்டிரைப் பிடித்தானென்னுந் துக்கத்தை மனதில் வையாமல் இவனுக் கியன்றமாத்திரம் பூசிக்க வேண்டும்' என, இப்படிப் பெண்புறுவின் வாக்கியத்தைக் கேட்டு, 'வேடா! உன் வரவு நல்ல வரவாகுக; நீ மனதிற் சிறிதும் ஐயமில்லாமலுன் வீடாக நினைத்து வேண்டுவதைக் கேள்' என, வில்லி 'கபோதமே! என் குளிரைப் போக்கடி' என, கபோதம் காட்டிலிருந்து ஒரு கொள்ளி எடுத்துக்கொண்டு வந்து சருகுகளின்மேல் வைத்து மூட்டி, வேடனைப் பார்த்து 'நெருப்பு மூண்டெரிகின்ற இதில் நீ குளிர்காய்; முன் தீவினையால் நான் பறவையா யிருக்கின்றமையா லென்னண்டை உன் பசிக்கேற்ற பதார்த்தமில்லை. இப்போது அநேக துன்பங்கட் கிடமாயும் பரோபகாரமாகாமலு மிருக்கின்ற இச்சரீரத்தை வைத்துக்கொண்டிருந்து பலனென்னே? இதனால் நீ உன் னாத்துமாவைச் சந்துஷ்டி செய்' என்றிப்படிச் சொல்லிக்கொண்டே பிறருதவியின் பொருட்டு எரிகிற வயலில் ஆனந்தத்தோடு விழ, அப்போது வேடன் 'ஆ ஆ! என்பொருட்டு இஃது உடலைத் துறந்தது. மேலும் நான் தீயொழுக்கமுள்ளவன்; வேறொன்றின் தசையினாற் சீவனம்பண்ணுகின்றேன. பரோபகாரமுஞ் சிறிதாயினுந் தயையுங் கனவினு மறியேன். ஆதலா லனேத்தின் றானைப் பெருக்கின பாவி; கோரநரகத்திற்குப் போவேன். இதை எனக்குத் திருஷ்டாந்தமாய் இந்தப் புறு காண்பித்ததனால் இதுமுதலாகப் பசி தாகங் குளிர் வெயில் பொறுத்தல் இவற்றா லுடம்பை யுலர்த்தி நான் பாவமில்லாதவனாகக் கடவேன்' என்று சொல்லி, பச்சாத்தாபத்துடனே தன் கூடு தடி கண்ணி முதலான

ஆயுதங்களை முறித்தெறிந்துவிட்டு, அந்தப் பெண்புறுவை விட்டுவிட, அது உயிரினுஞ் சிறந்த தன் னாயகன் தருமத் தின்பொருட் டுடலைக் கொடுத்தானென் றெண்ணி அதுவு மந்த நெருப்பிற் குதித்து இறந்தவுடனே அஃது ஒரு திவ்விய ஸ்திரீயாகிக் கணவனோடுகூடச் சொர்க்கத்துக்குப் போயிற்று. வேடனு மிரக்கத்தினாற் பரிசுத்தனாய் நெருப் பில் தேகத்தைப் போட்டுவிட்டு நற்கதியை யடைந்தான். ஆதலால் அபயமென் றடைந்தவர்களைக் காக்கவேண்டும்' என, இதைக் கேட்டு உருமர்த்தனன் 'எனக்கும் இப்படியே அபிப்பிராயமிருக்கின்றது. இவன் சத்தியவானும் பத்தி மானுமாயிருக்கின்றான்; கபடியல்லன்; இவற்றை யறியா மல் மேகவர்ணன் இவனை மானபங்கஞ் செய்தான். இவனைக் கொன்றால் நான் விசுவாச காதகனாவேன். பிரமகத்தி, கள் ளுண்டல், களவாடல் இவற்றிற்குப் பிராயச்சித்தமுண்டு; விசுவாச காதகத்துக்கு அஃதில்லை யன்றோ? ஆகையால் இவனுக்குச் சம்மானம்பண்ணி நமது துர்க்கத்தி லிட்டுக் கொண்டு போகவேண்டுமென்று உறுதிசெய்து, இராசன், சிரஞ்சீவியைப் பார்த்துச் சொல்லுகின்றது :— 'நீ யென் கோட்டையில் வந்து சுகமாயிரு, நானுன்னைப் பாதுகாப் பேன்' என, இதைக் கேட்டுச் சிரஞ்சீவி களிப்புற்று 'மகா ராஜாவே! நான் விஸ்தரித்துச் சொல்வதென்ன? என் குடிப்பிறப்புப் பிரபுவுக்குச் சகவாசத்தால் வரவரத் தெரி யும்' என, அப்போது குரூரநாசன், 'இப்போது கோட் டான் குலமெல்லாம் இராசன் குற்றத்தாற் பாழாகும். பிறர் குற்றங்களை அரசனுக் கறிவிக்கவேண்டும்; அரசன் இதத்தைக் கேளாவிடில் அதற்கென்ன உபாய மிருக்கின் றது?' என் றிங்ஙனஞ் சொல்ல, அரசன் அதைக் கேளா மற் சிரஞ்சீவியைத் தன்னரணிற் கொண்டுபோய் வைக்க, பின்னர்ச் சிரஞ்சீவி, 'நம்மைக் கொல்லவேண்டு மென்றவன் எல்லாரினுங் கெட்டிக்காரன்; மேலும் எசமானனுக்கு நன்

மையே செய்பவன்; மற்றவர்கள் எசமானனைப்போல மூடர் களாகையால் அவனொருவ னில்லாவிடில் இவர்களை வெல்வ தருமையன்று' என்றிப்படி மனதுக்குக் குதூகலிப்புடனே ஆலோசித்துக்கொண்டிருக்கையில், உருமர்த்தனன் காரிய காரர்களைப் பார்த்து இச்சிரஞ்சீவிக்குத் துர்க்கமெல்லாங் காட்டுங்கள்' என, இராச கட்டளையின்படி யெல்லாம் பார்த்து நாம் அதற்குளிருந்தால் நமது எண்ணமுடியாது; பின்னும் நம்முடைய வஞ்சனைகளையுந் தெரிந்துகொள்வார் கள்; ஆகலால் கோட்டைத் தலைவாசலிலிருந்து மனோ பீஷ்டத்தை முடிக்கவேண்டுமென்று தனக்குள்ளே தீர்மா னித்து அரசனை நோக்கிச் சொல்லுகின்றது :—'மகா ராஜனே! நான் வாயசம்; ஆதலா லுள்ளே யிருக்கத்தக்கவ னல்லன். உமது கடைவாசலிற் காத்திருந்து கபடமில்லா மற் சேவித்துக் காலந் தள்ளுவேன். அன்புள்ளவனும் மனதழுக் கில்லாதவனுமாகிய சேவக னெங்கிருந்தாலுஞ் சிந் தையில்லை' என்றிவ்வண்ணஞ் சொல்லிக் காக மங்கேயே யிருந்தது. அப்போது குரூரநாசன் 'இராஜா அமைச்சர் முதலிய நீவி ரெல்லீரும் மூர்க்கர்களா யிருக்கின்றீர்களென் றெண்ணுகின்றேன்; முற்காலத்தில் நடந்த ஒரு கதையு மிருக்கின்றது; முதன் மூடன் நான், இரண்டாவது வேடன், மூன்றாவது அரசன், நான்காவது அமைச்சன் என்று சொல் லிவிட்டு ஒரு பறவை பறந்துபோயிற்று' என, அப்போது அவர்கள் 'அஃதெப்படி?' எனக் குரூரநாசன் சொல்லு கின்றது :—

'பொன்னாக எச்சமிடுகிற ஒரு பறவை மலையின்மேல் நெடுநாளா யிருக்கையில், அங்கே யொருநாட்போன வேடன் அது பொன்னாக மலவிசர்ச்சனம் பண்ணப் பார்த்து மிகவும் ஆச்சரியமாய், நான் பாலியமுதலாகத் திரிந்து வருகிற வெகு காடுகளில் பார்த்த பலசாதிப் பறவைகளிலும் இப்படி யொன்றைப் பார்த்ததில்லை; ஆதலால் இதை உயி

ருடனே பிடித்துக் கொண்டுபோவோமென்று எண்ணி மரத்தில் வலைக்கட்ட, அப்போ தப்பறவை வழக்கப்படி வந்து சடுதியில் அவ்வலையிற் சிக்கிற்று. வேடன் அதைக் கூட்டிலடைத்துத் தன் குடிசைக்குக் கொண்டுவந்து இது நம்மிடத்திருப்பதை அரசன் அறிந்தால் இப்பறவையைக் கொண்டுபோவதுமன்றி நம்முயிரையும் வாங்குவான். ஆதலால் இக்குணநிதியை அரசனுக்குக் கொடுப்போமென்று நிச்சயித்துப் பறவையைத் தந்து அரசனுடனே நடந்த செய்தியை விண்ணப்பம்பண்ண, அப்போது அவன் இரத்தினமிழைத்த ஒரு கூட்டில் அதனை வைக்க, அதைப் பார்த்து மந்திரி 'அசம்பாவிதமான இவ்வேடன் பேச்சைக் கேட்டு இதை யேன் வாங்கினீர்? விட்டுவிடும்' என, இதைக் கேட்டுப் பறவையை மன்னவன் விட்டவுடனே அது இராச னரண்மனைச் சிகரத்தி லுட்கார்ந்துகொண்டு முன்னே நான் மூடன், இரண்டாவது வலைகாரன், மூன்றுவது இராசன், நான்காவது மந்திரி மூடர்களென் றிப்படிச் சொல்லிப் பறந்துபோய்விட்டது' என் றிச்சங்கதியைச் சொல்லிப் பின் னிஷ்ட மித்திரர்களைப் பார்த்து 'இன்றைய வரைக்கும் இவ்விராசாவின் சார்பிலிருந்தேன்; இனி வேறொரு மலையைச் சார்ந்திருக்கவேண்டும். நரியானது குகையைப் பார்த்துக் கூப்பிட்டுச் சுகமடைந்தாற்போல வருவதற்குமுன் னாலோசிக்கிறவன் இன்பமடைவான்' என, அப்போது அவைகள் 'அஃதெப்படி?' என, குரூரநாசன், 'ஒரு வனத்தில் வசித்திருந்த கிரகிரன் என்னுஞ் சிங்கம் ஓர்நாள் இரைக்கு நெடுநேரந் திரிந்தும் யாதொரு பக்ஷணமுங் கிடையாமையினாற் போதுபோனவுடனே ஒரு பெருங்குகையைப் பார்த்து இதிலடைகிறதற்கு யாதேனுமொரு பிராணிவரும்; அதைத் தின்று பசியாறலா மென்று தனக்குட் டீர்மானித்து, அதில் ஒளித்துக்கொண்டிருக்கையில், அக்குகையில் வசிக்கின்ற அவிபுச்சன் என்னும் ந

வந்து அங்கே சிங்கத்தின் காற்சுவடுகளைக் கண்டு சந்தேகித்துச் சிங்க மிறு கிருக்கிறதையு மில்லாததையும் யோசித்துப் பின்புள்ளே புகவேண்டுமென் றெண்ணித் தூரத்தில் நின்றுகொண்டு, ஓ குகையே! குகையே! என்று இரண்டு தரங் கூவி யழைத்துக் 'குகாய்' நீ என்னோடு பேசாமலிருக்கிறதென்ன? உனக்கு மெனக்கும் பிரதிதினம் சம்பாஷணை நடந்துகொண்டிருந்ததே, இன்றைக்கேன் நீ பேசவில்லை? விரைவாய்ச் சொல், இல்லாவிட்டால் நான் மற்றோரிடத்திற்குப் போய்விடுவேன்' என்று சொல்லி மீண்டுங் கூப்பிட்டது. அப்போது சிங்கம் நினைக்கிறது: இக் குகை நாடோறும் பேசிக்கொண் டிருக்கும்; இன்றைக்கு நமது பயத்தினால் அதனோடு பேசவில்லை; ஆனால் இதற்குப்பதிலாக நாம் உத்தரங் கொடுப்போமென் றாலோசித்துப் பிரதித்தொனியினால் அருகேயிருந்த பிராணிகளெல்லாந் திடுக்கிடும்படி அந்நரியைக் கூவ, நரி அப்பா, நான் பிழைத்தேனென்று வேறோரிடத்திற்கு ஓடிப்போய்விட்டது. ஆதலால் யாதொன்றையும் முன்னே ஆலோசித்துச் செய்யவேண்டும்' என்று தன் மித்திரர்கட்குச் சொல்லி அவர்களோடு குரூரநாச மந்திரி தேசாந்தரம் போயிற்று. பின்னர்க் காகமந்திரி இப்பொழுது கோட்டான் கூட்டத்தைக் கொல்வதற்கு வருத்தமில்லை. விவேகமில்லாத மந்திரியையுடைய அரசன் சீக்கிரத்திற் கெடுவான். விவேக மந்திரி வஞ்சனையான மித்திரர்களைப் பகைவரென் றறிந்துகொள்வான். இப்படி அறிகிறவன் இவனிடத்தி லிப்போ ஒருவனுமில்லை. ஆதலால் நங் குலத்தின் மங்களத்தைக் குறித்து எதாயினும் பிரயத்தனஞ் செய்யவேண்டுமென்று மனதில் நிச்சயித்து, அன்றுமுதற் றினந்தினம் ஒவ்வொரு விறகு கொண்டுவந்து வழியண்டை போட்டுக்கொண்டே வந்து போராகக் குவிந்த மாத்திரத்தில் அதைப் பார்த்துச் சூரியன் உதித்தவுடனே கோட்டான்களெல்லாங் குருடு

கொண்டிருக்கையில் விறகுகளையுஞ் சுள்ளிகளையுங் குகையின் வழியில் கும்பலாகச் சேர்த்துத் தான் மெள்ள மேகவர்ணனிடத்திற்கு வந்தது. அப்பொழுது மேகவர்ண ராசன் 'என்ன செய்தி?' என, சிரஞ்சீவி 'நான் பகைவர் குல வேரைப் பிடுங்கத்தக்க உபாயஞ் செய்திருக்கின்றேன். நீங்களெவ்வொருத்தரெவ்வோ ரெரிகொள்ளி விழுக்காடு கொண்டுவந் தென்சாகையின்மேற் போட்டால் கோட்டான்களெல்லா மிறக்கும்' என, இதைக் கேட்டுக் காக ராசன் 'என்ன வுபாயஞ் செய்தாய் சொல்?' என, மந்திரி மகாராஜாவே! இது சொல்லத்தக்க சமயமன்று; நான் சொல்லுகிற செய்தியைப் பகைவர் அறிந்து வேறோரிடத்திலோடிப்போனால் நம்முடைய இத்தனை முயற்சியும் வீணாய்ப் போம்; மேலுங் கடிதிற் செய்யத்தக்க காரியத்திற் றாமசஞ் செய்யலாகாது' எனக் கேட்டுக் காகராசன் தன் பரிவாரத்தோடுகூட எரிகொள்ளிகளைக் கொண்டுவந்து உலூகங்களிருக்குங் குகைவழியிற் போட, அந்தப் புகையினாற் கோட்டான்கள் பயந்து கலக்கமுற் றிரைச்சலிட்டுக்கொண்டு வெளியே வருகையில் போக வழியில்லாமையால் அப்போது குரூரநாசன் சொன்னதை நினைத்துக்கொண்டு அவன் வார்த்தையைக் கேளாமைக்குப் பலன் இதுதானென் றழுகுரலோடு சொல்லிக்கொண்டிருக்கையில், நெருப்புச் சுவாலை அதிகரித்துக் கோட்டான்களிறந்தன. பின்பு மேகவர்ண ராசன் முன் விட்ட தன் மரத்திற் குடிபோய்ச் சுகமாக இராச்சியத்தை அனுபவித்துக்கொண்டிருக்கையில் சிரஞ்சீவியைப் பார்த்து, 'நீ பகையாளி வீட்டிலிருந் தெவ்வாறு காரியத்தை முடித்தாய்?' என, சிரஞ்சீவி 'குரூரநாசன் தவிர மற்றவர்களெல்லாரும் மூடராகையால் அவர்கள் அவன் புத்தியைக் கேளாமல் அவனை அவமானம்பண்ணி யென்னைத் தங்கள் துர்க்கத்திலிட்டுக்கொண்டு போனார்கள். அதனால் அவன் தன் சிநேக பந்துக்களோடுகூட மறுதேயத்

திற்குப் போனான். மற்றைக் கோட்டான்கள் மூடராகையா லெரிந் திறந்தார்கள். இவ்வாறே முன்னோர் காலத்திற் சத்துரு நாசத்தின்பொருட் டொரு கிருஷ்ணசர்ப்பந் தவளை களைத் தோளிற் சுமந்து கெடுத்தது' என, அதைக் கேட்டுக் காகராசன் நகைத்து 'பாம்பு தவளைகளைத் தோளிற் சுமந்து கொன்றவிதமென்ன? சொல்லுமையா' என, சிரஞ்சிவி சொல்லலுற்றது:—

'ஒரு தேயத்தில் மந்தவிஷன் என்னும் பாம்பு இரை கிடையாமல் மிகவும் பசித் தோரேரிக்கரை யண்டை வரும்போது அதிலே தவளைக ளிரம்பியிருப்பதைக் கண்டு இங்கே யாதொரு கபடம் பண்ணினாலல்லாமல் நமக் கிரை யகப்படாதென நிச்சயித்துக் கண்ணை விழித்துக்கொண்டு உட்கார்ந்திருக்க, அப்போது ஒரு தவளை 'பாம்பே! நீ இரைதேடு முயற்சியை விட்டுச் சும்மா ஏன் உட்கார்ந் திருக்கின்றாய்?' என, அதைக் கேட்டுச் சர்ப்பம் 'அபாக் கியனாகிய வெனக் காகார மெங்கிருந்து கிடைக்கும்? இன் றைக்குப் பிரதோஷ காலத்தி லிரைக்காய்த் திரிந்துகொண் டிருக்கையில் ஒரு தவளையைப் பார்த்து, அதைப் பிடிக்கப் போகையில் அஃது அங்கிருந்த மிகவுஞ் சற்பாத்திரனாகிய ஒரு பிராமணனண்டை ஓடிப்போயிற்று. அது தெரியா மல் நான் இங்குமங்கும் பார்த்துக்கொண்டிருக்கையில் அங்கே நீராடிக்கொண்டிருந்த ஒரு பிராமணப்பிள்ளையின் காலை, இதுதான் தவளையென்று நினைத்துக் கடித்தேன். அவ னக்கணமே இறந்தான். அப்பிள்ளையின் பிதா மிக வுந் துக்கத்தாலே என்னைப் பார்த்து, 'துஷ்டப் பாம்பே யாதொரு குற்றமுஞ் செய்யாத என் பிள்ளையைக் கடித்த படியினால் நீ மண்டூகங்களுக்கு வாகனமாகக் கடவாய்; மற் றும் அவைகளுடைய சேர்க்கையாற் சீவனமும் பண்ணக் கடவாய்' என்றிப்படிச் சபித்ததினால் நான் உங்கட் கூழியஞ் செய்ய வந்தேன்' என, இங்ஙனம் அப்பாம்பின் பேச்சைக்

கேட்டு அஃது எல்லாத் தவளைகளுக்குஞ் சொல்லத் தவளைகளெல்லாம் தங்களரசனுடனேகூட வெளியேவந்து மிகவுங் களிப்புடனே அந்த விஷசர்ப்பத்தின்மேலுட்கார்ந்தன. அது அவற்றிற்குப் பலவித கதிகளைக் காண்பிக்கும்போது, தவளைகள் யானை குதிரை தேர்களினு மிவ்வாகனம் நன்றாயிருக்கின்றதென்று மெச்சிச் சந்தோஷிக்க, பின்பு அந்தப் பாம்பு இரண்டு மூன்று நாள்வரைக்கும் அப்படியே நடந்து பிறகு மந்தகதியாய்ப் போகத் தொடங்கிற்று. அப்போது அவைகள் 'இன்றைக்கு மெல்லென வேன் நடக்கின்றாய்?' என, புசங்கம் 'நான் இப்போது பசித்திருக்கின்றதினால் நடக்கக்கூடவில்லை' என, மண்டூக ராசன் 'நீ சிறு தவளையாகப் பார்த்துத் தின்றுகொண்டிரு' என, இதைக் கேட்டுச் சர்ப்பம் 'எனக்கிவ்வண்ணமே அந்தணன் சாபமிருக்கின்றது; அப்படியே தாமும் கட்டளையிட்டீர்' என்று சொல்லி நாடோறுந் தவளைகளைத் தின்றுகொண்டிருக்கும்போது, அங்கே வேறோ ரரவுவந் திதனடத்தையைப் பார்த்து, 'நம்முடைய பக்ஷணங்களை நீயேன் சுமக்கின்றாய்? இது மிகவும் வருத்தம்; உனக்கிது யோக்கியமன்று' என, அதற்கு மந்தவிஷன் 'நானிவையெல்லா மறிவேன்; சில நாளிலென்கருத்து நிறைவேறும்; அக்காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றேன்' என்றிவ்வாறு சொல்லிப் புன்சிரிப்புடனே பழையபடி நடந்துகொண்டிருந்தது. இப்படி யெல்லா மண்டூகங்களையுந் தின்று கடைசியி லவற்றின் அரசனையும் பக்ஷித்தது. எந்தச் சமயத்தில் எது செய்ய வேண்டுமோ அப்படிச் செய்து சத்துருக்களை வேரோடு கூட நாசம்பண்ணவேண்டும். நெருப்புத் தன் பராக்கிரமத்தாற் காடு முழுவதையுந் தகிக்கின்றது. மரவேர்கள் பூமியிலிருக்கின்றன. மிருதுத் தன்மையினால் தண்ணீருங் காற்றுஞ் செடி மரங்களை வேரோடு பிடுங்குகின்றன' என, இங்ஙன மதன் வாக்கியங்களைக் கேட்டு மேகவர்ணன் 'கடை

யானவர் இடையூறு வருமென்று பயந்தசிறேற் காரியங்க ளைத் தொடங்குகிறதில்லை; இடையானவர் காரியங்களைத் தொடங்கி விக்கினம் வந்தால் விட்டுவிடுகின்றூர்கள்; ஆயிர மிடையூறுகள் வந்தாலு மெடுத்த கருமத்தை முடிக்கிறவர் கள் தலையாயாரானவர். ஆதலால் நீ அநேகவித கஷ்டப்பட் டுப் புத்தியினுலே வெகு பகைவர்களைக் கொன்றுய். இது யோக்கியமாகவே யிருக்கின்றது. சத்துரு, அக்கினி, இரு ணம் இவற்றின் சேஷம் வைத்தால் மீண்டும் வளருமென் றறிந்து நீ வைரியைக் களைந்தாய். ஆயுதத்தா லொருவன் சாகின்றுன். புத்தியினு லநேகம்பேய ரொருமிக்கச் சாகின் றூர்கள்' என்று ராஜன் சொன்ன மொழியைக் கேட்டு, சிரஞ் சீவி 'எல்லா முன் பிரதாபத்தாலாயிற்று. உன்னைப்போ லிருக்கிற சத்துருக்களுக்கு ஈசுரனும் விதியும் நல்ல புத் தியைக் கொடுக்கும் அசத்துக்களுக்குத் துர்ப்புத்தியைக் கொடா நிற்கும். இஃதல்லாமல் தடியெடுத்துக்கொண் டடிக்கிறதில்லை. கர்மத்தை அநுசரித்துக்கொண் டிருக்கிற புத்தியினுற் பயன்களை யடைகின்றூர்கள்' என்றிப்படிச் சொல்லி மேகவர்ணன் அம்மரத்தின்மேல் சுகமா யரசு செய்துகொண்டிருந்தது.

இங்ஙனஞ் சோமசன்மா இராசகுமாரர்கட்குக் காக கூகையின் கதையாகச் சந்திவிக்கிரகமென மூன்றுந் தந்தி ரம் சொல்லினுன்.




நான்காவது

# லப்தஹானி அல்லது பேறழிவு

சோமசன்மா வரச குமாரரை நோக்கி 'இடருற்ற காலையி லறிவு குன்றாதவன் குரங்கு முதலையினின்று விடு பட்டாற்போற் பெருந் துன்பத்தினின்று மீளுவான்' என, சிறுவர்கள் 'அஃதெவ்வண்ணஞ் சொல்வாய்' என, ஆசிரியன் சொல்லலுற்றனன் :—

'கங்கைக் கரையி னுவன் மரத்தின்மேற் சுமுகன் என்னு மொரு வானரஞ் சிலகாலம் வாசம்பண்ணிக்கொண்டிருக்கையில், அங்கேவந்த ஓரிளைத்த முதலையைப் பார்த்து, 'நீ யென் கிருகத்துக்கு விருந்தாக வந்தமையா லுனக்கு நாவற் பழந் தருகின்றேன்' என்று சில பழங்கொடுக்கத் தின் றத்தி யந்த சந்தோஷத்துடனே தன்னிடத்திற்குப்போ யன்று தொடங்கித் தினந்தினம் வந்து நானு வார்த்தைகள் பேசிக் கொண் டிரண்டு மந்நியோன்னியமாயிருக்கையில், ஒருநாண் முதலை சில கனிகள் கொண்டுவந்து தன் னில்லாட்குக் கொடுக்க, அது தின் றக்கனி யமிர்தம்போ லிருக்கக்கண்டு தன் நாயகனைப் பார்த்து, 'பிராணநாதா! இந்தத் தித்திப் பான கனிக ளெங்கிருந்து கொண்டுவந்தாய்?' என, ஆண் முதலை, 'சுமுகவானரனென்னு மென்னண்பன் எனக்கு நாடோறுங் கொடுக்க நானங்கேதானே அவற்றைப் புசித் துக்கொண்டு வந்தேன்; இன்றைக்குத் தின்று மிகுந்ததை யுனக்குக் கொணர்ந்தேன்' என, இம்மொழிகளைக் கேட்டுப் பெண்முதலை, 'இத்தீங்கனி தின்பவனீர லமிர்தத்திற் கொப் பாயிருக்கும்; அதைக் கொணர்ந்தெனக்குக் கொடு, அதனல்

நான் மூப்புச் சாக்கா டில்லாம லுன்னோடு நெடுங்காலஞ் சுகித்திருப்பேன்' என, இதைக் கேட்டு முசலி 'எனக்குயிர்க் குயிரா யிருக்கின்ற நட்டோனாகிய வானரத்துக்கு நீயே விரோதந் நினைக்கின்றாய்?' என, அது 'நானுனக் ககத்தியமாயிருந்தா லதனிதயத்தைக் கொணர்ந்து கொடு; இல்லாவிட்டா லுனுயிர் வைத்துக்கொண்டிரேன்' என, ஆண் முதலை, காதலியே! சகோதரனினும் மித்திர னதிகமாதலா லவனைக்குறித்து நீ அடம்பண்ணவேண்டாம்' என்று மோவாய்க்கட்டையைப் பிடித்து வேண்டிக்கொள்ள, பெண் முதலை, 'நீ யென்றைக்கு மென் பேச்சுக்குக் குறுக்குச் சொன்னதில்லை; இன்றைக்குமாத்திர மெனக்குக் குறைச்சல் பண்ணுகின்றாய்; ஆதலா லிதோ நான் சீவனை விடுகின்றேன்' எனப் பிடிவாதஞ்செய்ய, கராபெண்ணி விச்சயத்தை யறிந்து, 'அச்சுமுக னெனக்குக் கொல்லக் கூடாதவனாயிருக்கின்றான்; நீயா பிடித்ததை விடாமலிருக்கின்றாய்; ஆதலால் நானிருதலைக்கொள்ளி யெறும்புபோலாயினேன்' என்று இங்ஙனஞ்சொல்லிச் சுமுகனிடத்திற்குப் போயிற்று. அப்போது சுமுகன், 'நண்பனே! இன்றைக்கேன் விசனமாயிருக்கின்றாய்?' என, முதலை 'மற்றொன்றுமில்லை, உன் மச்சினிச்சி யென்னைப்பார்த்து, 'துஷ்டா! நன்றிகெட்டவனே! நீ யாராலே சீவனம் பண்ணுகின்றனையோ அவனை யொருநாளைக்காயினும் நமது வீட்டிற் கழைத்துவந்து விருந்திடவேண்டாமா? அவன் வீட்டுக்குமாத்திரம் வெட்கமில்லாமற் போய்ப்போய் நல்ல பழங்களைத் தின்னுகின்றாயே' என்றிப்படித் திட்டிக் கோபித்தாள். ஆதலால் நீ என் வீட்டுக்கு வா, உன்னைக்குறித்துப் பலபல பதார்த்தங்கடேடி வைத்துக்கொண்டு வழிபார்த் திருக்கின்றாள்' என, வானரம், 'நண்பனே! எனக்குத் தண்ணீரில் வரக்கூடாது. நீ என் பிரியமுள்ள மச்சினியை இங்கே கூட்டிக்கொண்டுவா' என, மகரம், 'சுமு

கனே! நான் கங்கைக்கரையி லிருக்கின்றேன்; நீ என் முது கின்மே லுட்கார்ந்துகொண்டுவா; நோவாமற் கொண்டு போவேன்' என, அதிநம்பிக்கை வைத்துக் குரங்கப்படியே யுட்கார்ந்துகொண்ட மாத்திரத்தில் முதலை தண்ணீரிற் குதித் துப்போகையில், வானரம் 'எனக் கச்சமாயிருக்கின்றது மெள்ளமெள்ள நட' என்றது. அதைக் கேட்டு முதலை, இப்போது சுமுக னம்முடைய சுவாதீனத்திலிருக்கின்றான்; இனி இவனுக்கு நங்கருத்தை வெளியிடுவதற்குக் குறை யென்ன விருக்கின்றது? உரலிலகப்பட்ட துலக்கைக்குத் தப்புமா? என விங்ஙனந் தனக்குட் டீர்மானித்துக்கொண்டு, 'மித்திரா! உன்னிஷ்ட தேவதையை நினை; பெண்சாதி யின் பிடிவாதத்தா லுன்னைக் கொல்லக் கொண்டுபோகின் றேன்' என, குரங்கு 'நானென்ன பிழைசெய்தேன்?' என, முதலை 'நீ நேற்றுக்கொடுத்த நறுங்கனியை யென் மனைவி தின்றதன்மே லித்தன்மையான தீங்கனியைத் தினந் தின்னு கின்ற பாக்கியவானீரல் கேவல மமிழ்தத்தை யொத்திருக் கும்; ஆதலால் நீ யவனீரலை யெனக்குக் கொணர்ந்து கொடாவிடில் நான் பிராணனை வைத்திரே னென்றாள்; அதைக்குறித்துத்தா னுன்னைக் கொண்டுபோகின்றேன்' என, அதைக் கேட்டு வானரம் 'ஓகோ! இப்படி யென் றெனக்கு முன்னமே தெரிந்திருந்தா லந்த மரத்தின்மே லொளித்து வைத்திருக்கின்ற அந்த ஈரலை யுனக் கங்கேயே கொடுத்திருப்பேன்; வெறுமிருதயத்தோடு இருக்கையில் என்னை வீணாகக் கொண்டுவந்தாய்'' எனக் கிலேசப்பட, அப் போது மகரம், 'என் பிராணமித்திரா! அதைக் கொடுத்தா லவள் சந்தோஷமாவாள்' என்று சொல்லி வானரத்தை யதி சீக்கிரத்தில் முன்னிடத்திற் கொண்டுவந்து விட்ட வுடனே, வானரங் குதித்து மரத்தின்மேலேறிக்கொண்டின் றைக்குக் காலன் கையிலிருந்து விடுபட்டேனென் றெண் ணிக்கொண்டிருக்கையில், முதலை 'மித்திரா! ஈரலைச் சுறுக்

காய்க் கொடு; உன்னண்ணியாருக்குக் கொடுத்துவிட்டு வருகின்றேன்' எனக் கேட்டு, வானரம் நகைத்து, 'மூடா! துஷ்டா! ஈரலுடம்பை விட்டிருக்குமா? அஃதிருக்கட்டும்; நீ விசுவாச காதகனுதலா லிங்கிருக்கவேண்டாம்; சீக்கிரத்திற் புறப்பட்டுப்போ; உன்னைப் பார்க்க வென் கண் நாணுகின்றது' என்றிங்ஙனஞ் சுமுகன் சொன்னவுடனே முதலை பச்சாத்தாபப்பட்டு நானிவனுக்கு வழியிலுண்மை சொல்லியிழந்தேன். இப்போது மறுபடி விசுவாசம்வரப் பேசி இவனைக் கொண்டுபோகவேண்டுமென் றுலோசித்து, 'மித்திரா! நானுன்னைப் பரீக்ஷிக்கலாமென் றிவ்வாறு சொன்னேன்; மேலுமுலகத்தி னடவாத உன் பேச்சை நிஜமென்றெண்ணித் திருப்பிக்கொண்டு வரவில்லை. ஈரல் சரீரத்தை விட்டு வேறிடத்தி லிராதென்பது சிறுபிள்ளைக்குந் தெரிந்திராதா? நானிது விளையாட்டுக்குச் செய்தேன். ஆதலால் நீ யென் வீட்டுக்குக் கிலேசமும் பயமுமில்லாமல் வா. உன் பொருட் டென் பெண்டாட்டி வழிநோக்கிக் கண் பூத்துப்போகக் காத்துக்கொண்டிருக்கின்றுள்' என, சுமுகன் 'பசித்தவனுா விசுவாசத்தில் நம்பிக்கை வைக்காலாகதென்று பிரியதரிசனனைக் கங்காதத்தன் அஞ்சி மீண்டுங் காணவில்லை' என, அப்போது முதலை 'பிரியதரிசனனுக் கவனெனாஞ்சினுன்?' என, வானரஞ் சொல்லலுற்றது:—

'ஒரு கிணற்றிலிருந்த கங்காதத்தன் என்னு மொரு பெருந்தவளையை மற்றைத் தவளைகள் மிகவும் வருத்தப்படுத்திக்கொண்டிருக்கிறதினுல் அது இராட்டினத் தோண்டி நெறியே வெளியில் வந்திந்தத் தாயாதிகள் வலியவரும் பலருமா யிருக்கின்றுர்கள்; இதற்கென்ன செய்வோமென்றெண்ணமிட்டுக்கொண் டிருக்கையில், ஒரு பாம்பின் புற்றைப் பார்த்து, வழிப்போக்கர் காலிற் றைத்தமுள்ளை முள்ளாலேயே வாங்குகிறதுபோ லிந்தப் பாம்பை நமது வீட்டுக்குக் கொண்டுபோய்ப் பங்காளிகளைக் கொல்லவேண்டு

மென நிச்சயித்து, வளையின் கிட்டவிருந்து மாம்பைக் கூவ, பாம்பு இவன் மாந்திரிகனோ, நம்மைக் கொல்ல வந்தவனோ, கூப்பிடுகிறவ னின்னவனென்று தெரியவில்லை. ஆதலால் இவனை யிங்கிருந்தே கேட்கவேண்டுமென்று தீர்மானித்து, 'நீ யார்?' என, மண்டூகம் 'நான் கங்காதத்தன் என்னும் மண்டூக ராஜன்; உன்னைச் சரணமாக வடைந்தேன்' எனக் கேட்டுப் பிரியதரிசனன் 'நெருப்புத் துரும்புகளின் சேர்க்கை நில்லாததுபோல நானும் பரம சத்துருவாயிருக்கையில் நீ இங்கேவந் திந்த விபரீத பாஷணமேன் பண்ணுகின்றாய்?' என, கங்காதத்தன் 'என்னை மாற்றார் வருத்துகின்றார்க ளென் றுன்னிடத்திற்கு வந்தேன்; நீ எங்கள் ஜன்ம சத் துருவென்பது மெய்யேயானாலும் வலிய பகைவர்களை வைரி களைக்கொண்டே யடிக்கவேண்டுமென நீதிநூ லிருக்கின் றது' எனக் கேட் டச்சர்ப்பம் 'என்வர வங்கெப்படிக் கிடைக்கும்?' என, மண்டூகம் உன்னை நானனுயாசமாகக் கொண்டுபோவேன்' என, அதைக் கேட்டுப் பிரியதரிசனன் 'நாம் நீனியைக்குறித் தென்றைக்கும் விசாரப்பட்டுக் கொண் டிருக்கின்றோம். அவ்வாகாரந் தானேவந் தின் றைக்கு நம்மை யழைத்துக்கொண்டுபோக விருக்கையில் ஆலசியமேன் பண்ணவேண்டும்? வலியவந்த ஸ்ரீதேவியை வேண்டாமென்று தள்ளலாமா வென்று தனக்குள் ளாலோ சித்துக்கொண்டு தவளையின் பின்னே வர தவளை யதை யிராட்டினத்தின் வழியாய்க் கொண்டுபோய்த் தன் வீட்டில் வைத்துக்கொண்டது. அந்தப் பாம்பு தவளைகளை யெல் லாந் தின்றது. பிறகு கங்காதத்தனைப் பார்த்து,' மித் திரா; உன் சத்துருக்களை யெல்லாங் கொன்றபடியினா லெனக் கேதாவ தாகாரங்கொடு' என, தவளை 'நீ யுன் சிநேகிதன் காரியத்தைச் செய்தாய்; இப்போது வந்த வழியே வீட்டுக்குப் போகலாம்' என, அதைக் கேட்டுப் பாம்பு 'கங்காதத்தா! அந்தப் பிலத்தில் வேறே யேதாவது

வந்து தங்கியிருக்கும்; யானங்கேபோ யென்ன செய்வேன்? நீயே உன் சமுதாயத்திலிருந்து நித்தியமெனக் கொவ்வொரு தவளை கொடுத்துக்கொண்டுவா; இல்லாவிட்டால் நானெல்லாரையு மொருங்கே கொல்லுவேன்' என, இவ் வுத்தரவைக் கேட்டுக் கங்காதத்தன் பயப்பட்டு நிதமொரு தவளை விழுக்காடு கொடுத்துக்கொண்டிருக்கத் தின்று கடைசியி லொருநாள் கங்காதத்தன் புத்திரனையுந் தின்றது. அதைக் கங்காதத்தன் மனைவி பார்த்து மிகவு மிடும்பையுற்று 'கங்காதத்தரே! நீர் இக்கொடியோனைக் கொண்டு வந்து குலத்தை நாசம்பண்ணினீர். இனி இவ்விடம்விட்டுப் புறப்படும். இல்லாவிடி லிவனைக் கொலைசெய்யச் சூழ்ச்சி செய்யும்' என, இதைக்கேட் டாராய்ச்சி செய்து கொண்டிருக்கையில் பாம்பு 'எனக் கேதாயினுந் தின்னக் கொடு' என, கங்காதத்தன் 'மித்திரா, நானிருக்கையி னீ நீனிக்கேன் விசாரப்படுகின்றாய்? இப்போதென் மனைவியை யனுப்பி வேறு கிணற்றிலிருந் தின்னம் மண்டூகங்களை யழைப்பிக்கின்றேன். அதுவரையும் நீ சும்மா இரு' எனக் கேட்டுப் பிரியதரிசனன் 'நீ யெனக் கன்னதாதா; ஆதலாற் பிதாவாக விருக்கின்றாய்; உடனே தவளைகளை யழைப்பி' என, பின்னர் மனைவியை மற்றொரு கூபத்திற் போக்கி 'போனவ ளின்னும் வரவில்லை, நானேபோ யநேகந் தவளைகளைக் கொண்டுவருகின்றேன்; நீ யிங்கே சுகமாக விரு' என்று சொல்லித் தானு மிராட்டினவழியே புறப்பட்டுப் போயிற்று. பின்பு பிரியதரிசனன் தவளைகளைக் குறித்து வழிபார்த்துக்கொண் டங்கேயிருந் தப்படி வெகுநாட் கழிகையில், மற்றொரு வளையிலிருந்த பல்லியைப் பார்த்துப் பிரார்த்தித்து, 'ஓ பல்லியே! உனக்குங் கங்காதத்தனுக்கும் மிகவுஞ் சிநேகமாகையா லவனிருக்கின்ற விடத்திற்குப் போய் உன்னைப் பிரியதரிசனன் அழைக்கின்றானென்று மினி யுனக்குத் துரோகம் பண்ணினு லெனக்' காணையிருக்கின்

றது, நீ மனதிற் சிறிது மையப்படாதேயென்று மிவ்வாறு சொல்' என, அதனுத்தாவைப் பெற்றுக்கொண் டக் கவுளி கங்காதத்தன் பாற்போய் எல்லாச் செய்தியையுஞ் சொல்லக் கங்காதத்தன் 'பசித்தவன் விசுவாசத்தை நம்ப லாது; நீ போய்ப் பிரியதரிசனனுடனே, துஷ்டா! இனிக் கங்காதத்தன் வரானென்று சொல்' என, கவுளிபோய்ப் பாம்புக் கிவற்றையெல்லாஞ் சொல்லிற்று. அப்படிப் போல, நான் மீண்டு முன் வீட்டுக்கு வரேன்' என, இதைக் கேட்டு முதலை 'நீ வராவிடி லெனக்கு நன்றிமறந் தமை சம்பவிக்கும்; ஆதலா னுன் பட்டினியிருந் துன்னைக் குறித் திங்கேயே பிராணனை விடுவேன்' என, அப்போது வானரமானது 'நரி நீள்செவியனுக்கு நம்பிக்கை வருவித்து அதை யெப்படிக் கொன்றதோ வப்படி நீயு மென்னைக் கொலைசெய்ய விரும்புகின்றாய்! என, முதலை யதைக் கேட்டு, 'அஃதெப்படி?' என, குரங்கு சொல்லுகின்றது:—

'ஓரடவியி லிருக்கின்ற கராளகேசரி யென்னுஞ் சிங் கத்துக்குத் தேகமேதோ குணமில்லாதிருந்தமையால் தூச ரன் என்னும் நரியைப் பார்த்து, 'பிரதானியே! இன்றைக் கெனக் கெங்கும் போகக்கூடாது; நீயேபோ யாதாயினு மிரை கொண்டுவா' என, நரி நாலண்டையு மோடித் திரி கையி லொரு கழுதையைப் பார்த்து, 'மாமா! கும்பிடுகி றேன்; நீ இப்போது மிகவு மிளைத்துப்போனாய்' என, அப்போது கழுதை, 'மருமகனே! என்ன சொல்வேன்; எனக்குத் தலைவன் வண்ணான்; அவனத்தியந்தங் கண்டகன்; என்மேற் பெருஞ் சுமைகளைப்போட்டுக் கொல்லுகிறதே யன்றி வயிற்றுக்குப் புல்லுச்செத்தைப் போடுகிறதில்லை. புழுதியிலிருக்கு மறுகங்கட்டையைத் தின்றுகொண் டிருக் கின்றேன். அஃதுடம்புக் கெங்ஙனம் புஷ்டி கொடுக்கும்? என் பிழைப்பொரு பிழைப்பா' என, நரி 'இப்படியிருந் தால் நீ என்னோடுகூட வா, ஆற்றங்கரையில் பச்சைப்புல்

ளிரம்ப விருக்குமிட முனக்குக் காண்பிக்கின்றேன்' என, அதைக் கேட்டுக் கழுதை 'அவ்விடம் நன்றாயிருக்கும்; அங்கே நானொன்றியா யெப்படி யிருப்பேன்' என, தூசரன் 'மாமா! அங்கே புருஷனில்லாமல் விஸ்தாரமாயிருக்கின்ற பெட்டைக்கழுதைக ளெங்களுக்குத் தக்க புருஷ னகப்பட்டாற் கொண்டுவரவேண்டுமென் றெனக்குச் சொல்லியிருக்கின்றமையா லுனக்குரைத்தேன்' என, அதைக்கேட் டாசையினாற் கர்த்தபம் பின்னே போக, அதைக் கண்டு சிங்கம் பாய்ந்தவுடனே நீள்செவிய னோட்டம்பிடித்தது. பின்னர் நரி கோபித்துக் கண்டீரவத்தைப் பார்த்து 'இன்றைக்குன் வீரத்தை நான் பார்த்தேன்; உன்மு னெதிர்ப்பட்ட கழுதையு மோடிப்போயிற்று; இனி நீ யானையை யெவ்வா றடிப்பாய்?' என, அதைக் கேட்டுக் கராளகேசரி தலையிறக்கமாயிருக்க, மீட்டும் நரி 'மற்று மோர்தரம் நானவனை யுன்னண்டை கொண்டுவருகின்றேன்; அப்போதாயினு மேமாறாம லவனை யடிக்கவேண்டும்' என்று சொல்லி, நீள்செவியனருகேபோய் 'நீயே னோடிப்போகின்றாய்?' என, கழுதை 'மருமகனே, என்னை இந்நேர மெமன்கையிற் கொடுத்திருப்பாய்; அதிர்ஷ்டத்தினாற் பிழைத்தேன்; வச்சிரம்போல் நகத்தையுடைய அப்பிராணி யார்?' என, அப்போது நரி நகைத்து 'அம்மான்! அந்தப் பெண்கழுதை உன்னைப் பார்த்து மிதமற்ற களிப்போடே யுன்னண்டை வருகையில் நீ வீணாய்ப் பயந்தோடினாய்; அவளிப்போது நீள்செவியனென்னைக் கலியாணம் பண்ணிக்கொள்ளாவிட்டால் நானுயிர் வைத்திரேனென்று நிச்சயித்திருக்கிறபடியால் நீ விரைவாய் வரவேண்டும்; வராவிடிற் பெண்கொலை நேரிடுவதன்றிக் காமதேவனாலுஞ் சபிக்கப்படுவாய்; அவன் முத்திரை சர்வார்த்த சாதனமான ஸ்திரீவடிவா யிருக்கின்றதை அவமானம் பண்ணுகின்றவர்களைச் சடைச்சாம்ப லாண்டியாக்கிக் காமதேவன் காட்டி லனுப்புவான்' என்றிப்படி நரி

யுரைக்கக் கேட்டுக் குண்டுக்கழுதை யதன் பின்னேபோகச் சிங்கந் தட்சணமே யடித்து 'நண்டைச் சுட்டு நரியைக் காவல் வைத்தாற்போல' அதற்கு நரியைக் காவல்வைத்து நீராடப்போக, இதற்குள்ளே நரி யதன் ஈரலையுங் காதையுந் தின்றது. பின் சிங்கம் வந்து பார்க்கையி லீரலுங் காதுமில்லாமையாற் சம்புகத்தைப் பார்த்து, 'இதை யார் தின்றது?' என, நரி 'இக்கழுதைக் கீரலுங் காதுமில்லை; இருந்தா லது மறுபடியு முன்னண்டைவருமா?' என, அது இதை உண்மையென்று நம்பி நரிக்குள்ள மாம்சபாகங் கொடுத்து மற்றதைத் தின்றது. அப்படி 'நீ யென்னைக் கொல்ல விரும்புகின்றாய்' என, முதலை 'எவன் தன் பிரயோஜனத்தைவிட் டுள்ளதைச் சொல்லுகின்றானோ அவன் உதிஷ்டிரன் என்னுங் குசவனைப்போற் றுன்பமடைவான்' என, வானரம் 'அஃதெப்படி?' என்று கேட்க மகரஞ் சொல்லுகின்றது :—

'ஒரு குப்பத்தில் உதிஷ்டிரன் என்னுங் குயவன் பானைகளை யெடுக்கையில் ஓட்டாங்குச்சொன்று கபாலத்திற் றுக்கிக் கத்திவெட்டுப்போற் காயம்பட்டது. பிறகு சில நாள்கழித் தத்தேயத்திற் கருப்புவந்தமையா லவன் மறுதேசத்திற்குப்போ யிராஜனிடத்திற் சேவகத்தி லமர, அவ்வரச னவ்வடுவைக்கண் டிவன் போர்க்களத்தின்முன் காயம் வாங்கின சூரனென்றெண்ணி அவனை மிகவு முபசரித் தவனிடத்திற் றயையாயிருந்தான். அதுமுதற்கொண்டு மற்றைச் சேவகர்க ளவன்மேற் பொறாமையாயிருக்கத் தலைப்பட் டிராசன் றயையிருக்கையா லொன்றும் பேசாமலிருந்தார்கள். அப்படியிருக்கையி லொருநாள் இராசன் ஏகாந்தமா யுதிஷ்டிரனைப் பார்த்து, 'உனக்குக் கத்திவெட்டு யாருடைய சண்டையிற்பட்டது?' என, குசச்சேவகன், 'இராசனே! நான் சூளை போட்டுக்கொண்டிருக்கையில், விழுந் தோடுபட் டிக்காயம்பட்டது' என, இதைக் கேட்ட

மாத்திரத்தி லிராசன் காணிக் குலாலனைப் பார்த்து, 'நான் மோசம்போனேன்; இவ்விரண்டாம் பெயர்க்குத் தெரிவதற் குள்ளே நீ யோடிப்போ; சூரர்கள் கண்டால் நீ யுன்னுயிர் காணமாட்டாய்' என, குயவன் 'சுவாமி! என் கைகால் களைக் கட்டி ரணாங்கத்திற்போட்டு என் அஸ்தலாகவத் தைப் பார்த்தருளும்; வாய் புளித்ததோ மாங்காய் புளித் ததோ என்று சொல்லலாமோ?' என, ராஜன் 'நீ பிறந்த குலம் போர்க்களத்தில் வருவதன்று; அங்ஙனமாக நீ நரிக் குட்டிபோ லேன் சும்மா துள்ளுகின்றாய்? குலைக்கிற நாய் வேட்டை பிடிக்குமோ?' என, குலாலன் 'இந்த நரிக் குட்டி யாரிடத்திற் றன்னைப் புகழ்ந்துகொண்டது? சொல் லுமையா' என, அரசன் சொல்லுகின்றான்:—

'ஒரு வனத்திற் பெட்டைச் சிங்கத்தோடு கூடியிருந்த சிங்கத்துக் கிரண்டு குட்டிக ளுண்டானவுடனே பல விலங்கு களைக் கொன்று தன் பெண்சிங்கத்தின் கையிற் கொடுத்த தைப் பார்த்து, 'இப்பிள்ளைகளுக்கு வினைத்தெரிகிறவரைக்கு மிவர்களை நம்பித் தனியே விட்டிராதே' என்று பத்திரஞ் சொல்லி, நித்தியந் தான்மாத்திரம் போய் மிருகங்களைக் கொன்று கொண்டுவந்து கொடுத்துக்கொண் டிருக்கையில், ஒருநா ளதற்கொன்றுங் கிடையாமற் றிரும்பி வீட்டுக்கு வரும்போது, வழியில் கையி லகப்பட்ட ஒரு நரிக்குட் டியை யடியாமற் பிடித்துப் பெட்டையண்டை கொண்டு வந்து, 'இன்றைக் கிதைவிட வேறொன்றுங் கிடைக்க வில்லை' என, அப்பெட்டை அக்குட்டி மிகவுஞ் சிறியதா யிருக்கிறதைப் பார்த்துத் தன் குழந்தைகளி லொன்றாய்க் காப்பாற்றிக்கொண்டு வருகையில், அம்மூன்றும் பெரிய னவா யொருநாள் காட்டுக்குப் போனபோ தங்கொரு யானை யைக்கண் டதன் கிட்டப் போகலாகாதென்று சொல்லி விட்டு நரிக்குட்டி வீட்டுக் கோடிப்போயிற்று; மற்றிரண்டு மதைப்பார்த் ததன்பின்னே வீட்டுக்கு வந்து தன் தாயு

டனே அந்த நரியின் காரியத்தைச் சொல்ல, நரிக்குட்டி யதைக் கேட்டு மிகவுங் கோபித்து, 'நான் இவர்களினும் சௌரியத்திற் குறைந்தவனா? இவர்களென்னைப் பழித்து நகைப்பானேன்? கூழுக்கு மாங்காய் தோற்குமா? நா னிவர் களைத் தண்டித்து என் பராக்கிரமத்தைக் காட்டுவேன்; கொட்டினாற் றேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சியா?' என, அதைக் கேட்டுப் பெண்சிங்கம் நரியை யேகாந்தமா யோரிடத்திற் கொண்டுபோய், 'நீ நரிக்குட்டி, உன் குலத் தில் யானையைக் கொல்லுகிற சக்தியில்லை; உன்னை நானென் பால் கொடுத்து வளர்த்தமையா லிந்தப் பராக்கிரமஞ் சொல்லிக்கொள்ளுகின்றாய்; இவர்கள் இனி யுன்னை யின்னா னென் றறிகிறதற்கு முன்னே நீ புறப்பட் டோடிப் போ; இல்லாவிட்டால் அவர்கள் கையி லடியுண் டிறந்து போவாய்' என, அதைக் கேள்விப்பட்டவுடனே சம்புக மோடிப்போயிற்று. ஆதலால் நீ குசவனென்று வெளிப் படுவதற்கு முன்னே விரைவா யிதை விட்டுப்போ' என, அவ னந்த ராஜாவி னுத்தாரப்படி யோடிப்போனான்' என, இப்படி முதலையின் பேச்சைக் கேட்டுச் சுமுகன் 'ஸ்திரீ களின் கிருத்திரம மொருவருக்குந் தெரியாதாகையா லவர் கள் விசுவாசத்தை நம்பலாகாது' என, முதலை 'இது எதினாற் சொல்லுகின்றாய்?' என, வானரஞ் சொல்லத் தொடங்கிற்று:—

'தாரா நகரத்திற் குடும்பத்தோடு கூடியிருந்த சத்திய விரதன் என்னும் வேதியன் றன் மனையாட்டி யெல்லாரோ டுங் கலகம்பண்ணிக்கொண்டிருக்கையா லவன் அவண்மே லிருக்கின்ற மோகத்தினாற் றன் றேயத்தைத் துறந்தவளை யழைத்துக்கொண்டு தேசாந்தரம் போகையி லவ்வழியில் பார்ப்பினி, 'நாயகா! எனக்கு மிகவுந் தாகமெடுக்கின் றது, எங்கிருந்தாயினுந் தண்ணீர் கொண்டுவா' என, அவ னவளை யங்கேயே வைத்துவிட்டுத் தண்ணீர்க்குப் போய்

வந்து அவளிறந்து பிணமாய்க் கிடக்கிறதைப் பார்த்து மிக வும் புலம்பி வருத்தப்படுகையில் 'உன் வயதிற் பாதி யிவட் குக் கொடுத்தாயானுன் மீண்டெழுந்திருப்பாள்' என்றாகாச வாணி யுண்டாக, அதைக் கேட்டுப் பார்ப்பான் பவித்திரத் தோடே பாதிவயதை மூன்றுதரம் முச்சரித்துக் கொடுக்க, அதனு லவள் ஜீவித்தெழுந்து ஜலபானம் பண்ணினாள். பின் பொரு பட்டணத்திற்போ யிறங்கி அந்தணன் செலவு வாங்கக் கடைக்குப் போனபோ தங்கே யொரு முடவன் நேர்த்தியாய்ச் சங்கீதம்பாட, அதைக்கேட் டவள்மோகித் தவனருகிற்போய், 'சிநேகா! என்னை யங்கீகாரஞ்செய்; இல்லாவிட்டா லுனக்குப் பெண்கொலை வரும்' என, அதைக்கேட் டவனிதோ 'முடவனுக்குக் கொம்புத்தேன் கிடைத்ததே' என்று பொங்கி யவள் கையைப் பிடித்துக் கொள்ள, அப்போதவள் 'இவ்வுடம்பை யுனக்கர்ப்பணம் பண்ணினேன், இனி நீ ஐயமில்லாமல் என்னுடனே கூடவா' என, அப்படியே யம்முடவ னவளண்டை யுட் கார்ந்திருந்தான். இதற்குள்ளே கடைச்சரக்குகள் வாங் கிக்கொண்டுவந்த அப்பிராமணனுக்குச் சமையல்பண்ணி இலைபோட்டு 'இம்முடவனுக்குங் கொஞ்ச மன்னங் கொடுக்க வேண்டும்' எனச் சொல்லி, அவனுடன்பாட்டினு லம்முடத் துக் கன்னங்கொடுத் திருவருஞ் சாப்பிட்டபிறகு பார்ப்ப னத்தி, 'நாயகனே! நீ ரென்னைத் தனியாக விட்டுப்போம் போ தெனக்குத் துணையில்லாமையா லிம்முடவ னெனக்குத் துணையிருக்கட்டும்' என, அதைக்கேட் டந்தணன் 'இம் முடவனை யெப்படிக் கொண்டுபோகலாம்?' என, அவள் 'நான் முதுகிற் கட்டிக்கொண்டு வருவேன்' என, 'நல்லது' என்றவள் கபடத்தை நிஜமென்றெண்ணி அதற்குட்பட் டான். பின் பவனைப் புடைவையிற் சுற்றி முதுகிற் கட்டிக் கொண்டு நடக்கையி லவ்வழியிற் பிராமண னிளைப்பாய்க் கிணற்றங்கரையிற் படுத்துக் கண்ணயர்ந்ததைப் பார்த்து

அம்முடவனிடத்து ஆசக்தியினுற் புருஷனைத் தூரலி னுருட்டிவிட்டுச் சனி தொலைந்ததென் றம்முடவனை யொரு பெட்டியில் வைத்து நோவாம லெடுத்துக்கொண்டு தேசாந்தரம் போகையி லங்கே சேவகர்கள் அவள் தலைமேற் பெட்டியிருக்கிறதைக்கண் டவளைப் பெட்டித்தலையுடனே அரசன் சமுகத்திற் பிடித்துக் கொண்டுபோய் விட்டார்கள். அப்போ தரசன் பெட்டியைத் திறப்பித்துப் பார்த்து, அதில் முடவனைக் கண்டு, 'இவன் யார்? என்ன செய்தி?' எனப் பார்ப்பினியைக் கேட்க, அவள் 'இவர் என் பர்த்தா; இவர் நோயாளியா யிருக்கின்றதினு லிப்படித் தலையிற் சுமந்துகொண்டு போகின்றேன்' என, அரசனதைக்கேட் டவள் கற்புடைமைக்கு மகிழ்ந்து இவள் நமக் குடன் பிறப்பென் றெண்ணி அவளைத் தன்னிடத்தில் நிறுத்திக்கொண்டான். இங்கே இப்படி யிருக்கையில், அங்கே யவ்வழியிற்போன வழிப்போக்க னொருவன் தாகத்துக்குக் கிணற்றினுள்ளே யிறங்கினபோது விழுந்து கிடக்கிறவனைப் பார்த் திறங்கி யெடுத்து வெளியே விட்டுப்போக, அவனங்கே பங்குவையும் மனைவியையுங் காணும லங்கங்கே திரிந்து தேடிக்கொண் டந்நகரத்திற்குள்ளே போனுன். இவன் வருவதை யவ்விபசாரி பார்த்து வேந்தனுடனே 'இதோ வருகின்ற விச்சண்டாள னென்பதிக்கு விரோதி' என்று முறையிட, அவ்வேந்தன் 'இவனைப் பிடித்துக் காவலில் வையுங்கள்' எனச் சேவகர்கட் குத்தரவு செய்ய, அவர்க ளப்படியே செய்யத் தொடங்குகையில், அவ னிறைவனைப் பார்த்து, 'ஓ வரச சிகாமணியே! நீர் தருமகுணமுள்ளவரா யிருக்கின்றீர். ஆதலாற் றேறவிசாரியும்' என்று தன் குறைகளையெல்லாஞ் சொன்னுன். அரச னதைக் கேட் டொரு பஞ்சாயத்து நியமித்து அவர்களாற் பார்ப்பான் குற்றவாளியல்ல அவளே துஷ்டை யென்றறிந்து, அதற்குத் தக்க தண்டனைசெய்து வேதியனைச் சமாதானம

பண்ணினான். ஆதலால் மாதர்கள் அநர்த்தங்கட்கு மூல மாயிருக்கின்றார்கள். விவேகிக ளவர்கள் பேச்சுக்குக் காது கொடுக்கலாகாது. அப்பேச்சுக்குக் காதுகொடுத்து முற் காலத்திலே நந்தனராஜன் என்பவனும் வரவிசி யென்னும் பிரதானியும் சபைநடுவிலே ஏளனமடைந்தார்கள்' என, முதலை 'அஃதெப்படி?' என, வானரஞ் சொல்லலுற்றது:—

'பராக்கிரமசாலியான நந்தனராஜன் என்பவன் துரைத் தனம் பண்ணிக்கொண் டிருக்கையி லவன் மனையாட்டி யேதோ வொரு காரணத்தாற் பிணங்கிக்கொண்டதைக் குறித் தரச னெவ்வித சமாதானஞ் செய்துங் கேளாமல் 'நீ வாயிற் கடிவாளம் போட்டுக்கொண் டுன்முதுகின்மே லென்னை யெடுத்துக்கொண்டு குதிரைபோலக் கனைத்தால் நானுன் பேச்சிற்குச் செவிகொடுப்பேன்' என், அப்போது நிருப னவள் பிரீதிக்காகச் சொன்னவண்ணஞ் செய்ய அதைப் பிரதானியின் மனைக்கிழத்தி கேள்விப்பட்டவளுங் கோபமாய்த் தன் பதியுடனே பேசாமன் முறுக்காயிருக்க, அவ்வேளையில் முழுது மறிந்தவனாகிய வரருசி யென்னும் மந்திரி, தன் மனைவிக் கெவ்வித வாறுதல் சொல்லியு மவளு டன்படாமல் 'நீ தலைமொட்டை யிட்டுக்கொண் டென்னை வலசாரி யிடசாரியாகச் சூழவந்து சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணுவாயானா லுனக்கு நானுட்படுவேன்' என, மந்திரி அவள் பிடிவாதத்துக்காக வங்ஙனஞ்செய்து, மறுநாளுத யத்திற் சபையில் வந்திருந்த வரசனிடத்திற்குப் போக, அரசன் பிரதானியைப் பார்த்து, 'நீ எதற்காக முண்டனம் பண்ணிக்கொண்டாய்?' என, மந்திரி 'மகாராஜா அவர் கள் குதிரையைப்போலக் கனைத்தபடியாலடியேன் மழுங்க மொட்டையிட்டுக்கொண்டேன்' என, இப்படி யிருவர் பேச்சையுங் கேட்டு ஜனங்கள் நடந்த செய்தியெல்லா மறிந்துகொண்டார்கள். ஆதலால் மாதர்களுடைய அநுசித வார்த்தைகளைக் கேட்டு மௌனமாயிருக்கவேண்டும். அங்

னஞ் செய்யாதவரோடு மறுமொழி சொல்லுகின்றவன் புலித்தோலைப் போர்த்துக்கொண்டிருந்த கழுதையைப் போற் கிலேசமடைவான்' என, 'அஃதெப்படி?' என்று முதலை வினவ, குரங்கு விடை விடுக்கின்றது :—

'நருமதை யாற்றங்கரையில் பவானி யென்னுமோர் ஏழை வண்ணான் தன் கழுதை தீனியில்லாமனுக்குநாளிளைத்துப்போகிறதைக் குறித்து விசனப்பட்டுக்கொண்டிருக்கையி லொருநாள் நினையாமற் கிடைத்த புலித்தோலைக் கொண்டுவந்து களிப்புடனே யிரவி லக்கழுதைமேற் போர்த் தூரார் பயிர்களின் மேய்வித்துக்கொண்டிருக்கும் போது, குடிக ளிது புலியென்று நினைத்தோடிப்போவார்கள். இப்படியிருக்கையி லிப்பெருவாயன் மிகவும் பெருத்தொருநாட் பயிரிற் றானியத்தைத் தின்றுகொண்டிருக்கும்போ தொரு பெண்கழுதையின் கூச்சலைக் கேட்டு மிகவும் பெருங்கூச்சலிடத் தொடங்கிற்று. அப்போ தக்கொல்லைக்கார னிது புலியன்றென்று நிச்சயித் ததைப்பிடித் திடுப்பொடிய அடித்தான். ஆகலான் மாதர்களுடனே வீணாகப் பேசலாகாது. இப்படியிருக்கையில் நீ அவளைக் குறித்தென்னைக் கொல்லவிருந்தாய், இஃதுன் குற்றமன்று; விசுவாச காதகம் பண்ணுத லுன் ஜாதிக்கே இயல்பாயிருக்கின்றது. அது சாதுக்களின் சேர்க்கையாலுங் குணமாகாது; மேலும் துஷ்டர்கட் குபதேசித்துப் பயனில்லை' என் றிப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், சலத்திலிருந் தொரு சலசரம் வந்து, 'உன் மனையா ளெதிர்பார்த்துக் கொண்டிருந்து பட்டினியா லிறந்தாள்' என, அந்த நாராசஞ் செவியி லேறினவுடனே முதலை 'நான் கொடியோனுதலா லித்தன்மைய விடரி லகப்பட்டேன்; முதல் நண்பனுக்குப் பொல்லாதவனானேன். இரண்டாவது மனைக்கிழத்தியு மிறந்தாள்; வீடுங் காடாயிற்று. இல்லக்கிழத்தியில்லாத வில்லஞ் சுடலையன்றோ? ஆகலால் மித்திரா!

என் பிழையை மன்னி ; நானுனக்குத் துரோகம் நினைத்தத னைத் தீர்குறிக்கின்றேன்' என, இதைக் கேட்டு வானரம் 'எவள் பேச்சினுல் நீ கொலைத்தொழிற் கேற்பட்டாயோ அவள் சாவைக்குறித் திப்போது கிலேசித் துயிர்விட நினைக் கின்றாய்; அப்படிப்பட்ட துர்க்குணியின் சாவுக்குக் களிக்க வேண்டும்; பதியைவிட்டுப் பிறனுக் குடன்பட் டிருந்தத னுன் முன்னொருத்தியை நரியுஞ் சிரித்தது' என, அப் போது மகரம் 'நரி யாரைப் பார்த்து நகைத்தது?' என, சுமுகன் சொல்லுகின்றது :—

'சம்பகாவதி நகரத்திற் கிழவனுயிருந்த தேவதத்தன் என்னுமொரு சாவாரியின் பெண்சாதி அந்நிய புருஷர்க ளிடத்தி லாசைகொண்டிருக்கையி லவ்வவாவை கண்ட வொரு விடனவளைக் கண்டு 'பெண்ணே! என் பெண்சாதி யிறந்தபடியினு ளுன் மிகவுந் துக்கித்துக்கொண்டிருக்கின் றேன் : நீ யென் றுக்கத்தைப் பரிகரித்தா லுனக்குப் புண் ணியமுண்டு ; உன்னைப் பார்த்து மிகவு மானந்தமாயினேன்' என, அதைக்கேட் டவள் 'உன் மனதி லிங்ஙன மிருந்தா லென் கிழக்கணவன் பணத்தை யெடுத்துக்கொண்டு நீயும் நானும் பரதேசத்திற் போய் வாழ்ந்திருப்போம்' என, அவன் 'நீ மிகவும் நல்ல காரியஞ் சொன்னுப்; நீ கணப் போதானுமு மட்டியில்லாம லிக்காரியத்தில் முயற்சி செய் யலாம்' என, அப்படியே மறுநாள் வெளிச்சேரும் வேளை யில் வெகு திரவியங்களை யெடுத்துக்கொண்டு சங்கேதப் படி யிருவருந் தேசாந்தரம் போகையைக்குறித் திருகாத வழி போகையி லங்கே யொரு பேராற்றைப் பார்த்தவள வில் அவன், பின்னே யிவளை யாராயினுந் தேடிக்கொண் டோடிவந்தாற் பணத்தையு மவளையுங் கொண்டுபோகிறது மன்றி, நம்முடைய ஜீவனையும் வாங்குவார்கள். ஆதலா லிவளைவிட்டுப் பொருளைமாத்திர மேமாற்றிக்கொண்டு போகவேண்டுமென்று மனதிலேயே யாராய்ந்து நிச்சயித்து,

பின் பவளை நோக்கி, 'இந்நதி மிகவுங் கடினமானது; தண்ணீரும் நிரம்ப வருகின்றது. ஆதலான் முன்னே யெல்லா வற்றையு மக்கரையில் வைத்துவிட்டு பின்புன்னை நோவாமற் கொண்டுபோ யக்கரை சேர்க்கின்றேன்' என, அவள் 'உன் மனதின்படி செய்' என, பின் பவளிடத்திருந்த பணம் முழுவதும் வாங்கிக்கொண்டு, 'என் பிரிய நாயகியே! உன் புடவையையு மவிழ்த்துக் கொடுத்தாயானு னுன்னை மறுபடியுங் கொண்டுபோதல் வருத்தமாயிராது' எனச் சொல்ல, அவ ளப்படியே யவிழ்த்துக் கொடுக்க அதையுங் கைக்கொண் டிவள் வெட்கத்தினு லங்கிங்கோடி யாரோடுஞ் சொல்லமாட்டாளென் றெண்ணிக்கொண் டபகரித்த பொருட்களோடு கூடப் போய்விட்டான். பிறகவளதைப் பார்த்துத் தன் மனதில் வியாகுலித்து நான் செய்த வேலைக்குப் பல னுடனேதானே கிடைத்தது. இதை அக்கிழப்பினை மறிந்தா லென்ன செய்யுமோவென் றெண்ணிக்கொண்டு நாணத்தினுல் தண்ணீரி லிறங்கி யுட்கார்ந்து கொண் டிருக்கையி லோரிறைச்சித் துணிக்கையை வாயிற் கௌவிக்கொண் டோடிவந்த நரி தண்ணீரினின்று துள்ளிக் கரையில் விழுந்த மீனைப் பிடிக்க நினைத்து வாயிறைச்சியைப் பூமியிற்போட்டுக் கௌவப்போகையி லம்மீன் றண்ணீரிற் குதித்தது. நரி திரும்பி யத்தசையண்டை வருவதற்குள்ளே யதை யொரு பருந் தறைந்துபோக, இதைப் பார்த்திருந்த வம்மாது சிரித்து, 'மாம்சமும் மச்சமும் போன பிறகு வானத்தைப் பார்த்தாவதென்ன?' என, அதைக் கேட்டுச் சம்புகம் 'குரோதத்தோடே எனக்கு நேரிட்டது போலவே நீயுமுன் பதியையுஞ் சாரனையுமிழந் திப்போது நிர்வாணத்தோ டென்ன வெண்ணமிடுகின்றாய்?' என, இப்படி யிருவர்க்கும் வாக்குவாதம் நடந்துகொண் டிருக்கையி லிஃதவள் கணவனுக்குத் தெரிந்து, அவ னவளை மிகவுந் தண்டித் தோட்டிவிட்டான். ஆதலா லந்தத் துஷ்டையைக்

குறித்துச் சோகமுறாமல், முதலாய்! நீ யுன்சாகைக்குப் போ' என, மகரந் தன் வீட்டுக்குப் போனவிடத்தி லங்கே வேறொரு முதலை யிருக்கக்கண்டு, தம்மிடத்தையு மொரு வன் கைக்கொண்டான். இதற்குச் சாம பேத தான தண் டங்களி லோருபாயஞ் செய்வதைக்குறித்து நம்முடைய சிநேகிதனை விடச்சொல்லுகிறவர்க ளில்லை; அவனையே விருவவேண்டுமென் றுறுதிசெய்து, மீண்டும் நாவன் மாத்தண்டைவந்து சுமுகனைப் பார்த்து, 'மித்திரா! "பட்ட காலிலே படுங் கெட்ட குடியே கெடும்" என்றாற்போல என் னபாக்கியத்தினா லென் வீட்டையு மொருவன் பிடுங்கிக் கொண்டான், இனி நானென்ன செய்வேன்?' என்று முறை யிட, வானரம 'நன்றிகெட்டவனே! எனக்கும் பொல் லாங்கு தேடின நீ மறித்தும் முட்டாட்டனமாய் என் னிடத்துக் கேன்வந்தாய்? மூடனுக் குபதேசித்தா லவன் விடுவையவனை வீடிமுக்கப்பண்ணுவான்' என, முதலை 'இஃ தெங்ஙனம்?' என, குரங்கு சொல்லத் தொடங்கிற்று:—

'ஒரு மாத்தின்மேல் கூடுகட்டி யதில் வாழ்ந்துகொண் டிருக்கின்ற இரண்டு தூக்கணாங்குருவி யாலங்கட்டியுடனே கூடப் பெருமழை பெய்கையிற் குளிரினாலே நளிர் பிடித் துப் பல்லுக்கிட்ட நடுங்கிக்கொண் டொரு மாத்தடியி லொதுங்கியிருந்து வருந்துகிற வானரத்தைக் கண்டு, உனக் குக் கால் கைகளிருந்துங் குளிர்காற்று முதலிய துக்கத்தை யையையோ நீயே யனுபவிக்கின்றாய், நீயேன் வீடு கட்டிக் கொள்ளவில்லை?' என்றிரக்கத்தாற் சொல்ல, இதைக் கேட் டத்துஷ்டக் குரங்கு 'ஷசிமூஞ்சிமூடா! நீ வல்ல வனுக்குப் புத்தி சொல்லுகிறாயா? எனக்கு வீடுகட்டுகிற சக்தியில்லை, அதைப் பிரித்தெறிகிற சாமர்த்தியமுண்டு, இதோ பார்' என்று அதன் கூட்டைப் பிரித்தெறிந்தது. ஆதலால் கிழானோர்க்கட் குபதேசிக்கலாகாது' என, முதலை 'அன்பனே! நான் குற்றவாளியென்பது மெய்யே; ஆயினும்

பழைய சிநேகிதனுதலா லுன்னைக் கேட்கின்றேன்' என, வானரம் 'நீ யங்கேபோய் பகையாளியோடு போர்செய், மடிந்தாற் சொர்க்கமடைவாய், வென்றால் வீடடைந்து சுகமுறுவாய்; முன்னொரு புத்திசாலி யுத்தமனுக்குக் கும்பிடும், சூரனுக்குப் பேதமும், காரியகாரனுக்குந் தானமும், ஈடானவனுக்குத் தண்டமுஞ் செய்தாற்போலச் செய்ய வேண்டும்' என, முதலை 'அஃதெங்ஙனம்?' என, சுமுகன் சொல்லலுற்றது :—

'இம்மலையின்மேற் சதுரன் என்னுமொரு நரி பசியுடனே யங்கங்கே திரியுங்கா லொரு செத்த யானையைக் கண்டதன் றோலைக்கிழித் திறைச்சியைத் தின்னும் வல்லமை யதற்கின்மையா லஃதங் குட்கார்ந்திருக்கையி லங்கேவந்த சிங்கத்தைக் கண்டு தண்டனிட, அது 'நீ யார்?' என, நரி 'நான் றங்களடியேன், தாங்களடித்த யானையைக்காத் துட்கார்ந்திருக்கின்றேன்' என, சிங்கம் 'இது நான் கொன்றதன்று; வேறொருவன் கொன்றெறிந்தானோ, அன்றித் தானாய் மடிந்ததோ, எப்படியிருந்தாலு மதை நான் புசியேன், இதுனக்கு வேண்டுமானா லெடுத்துக்கொள்' என, நரி 'சுவாமீ! இது யோக்கியந்தான், பெரியோர்க டம்மாண்மையாலே சம்பாதிக்கின்றார்கள்' என, சிங்க மதைக் கேட்டு வேறொரு வனத்திற்குப்போக, பின்னு மங்கே வந்த ஒரு புலியைப் பார்த்து, 'அம்மான், நீ யிக்காலன் முகத்திலேனெதிர்ப்பட்டாய்? இவ்யானையைக் கொன்ற மிருகேந்திரனிங்கே யாதொரு புலிவந்தா லதற்குத் தெரியாம லெனக்கு வந்து சொல்லுவாயானா லுனைக் கொன்றெறிவேன். நான் முன்னே யொரு யானையை யடித்து மூழ்கப்போன விடத்தி லொரு புலி யதை யெச்சில்பண்ணிற்று. அது முதலாகப் புலியைத் தேடிப்பார்த்து மகப்படவில்லையென் றென்னுடன் சொல்லியிருக்கின்றான்' என, புலி யச்சிங்கத்தி னுத்தரவைக் கேட்டு மிகவும் பயந்து, 'மருமகனே! எனக்

குப் பிராணதானங் கொடு' எனச் சொல்லிக்கொண்டே யோடிப்போயிற்று. மறுபடி யொரு வானரத்தைக் கண்டு, முன்னே வந்த துஷ்டனைக் கும்பிட்டு போக்கினேம், இரண்டாமவனைப் பேதித்தோம், இப்போ திதன் கையா லிதைக் கிழிப்பிக்க வேண்டுமென் றிப்படித் தன்னுள்ளே நிச்சயித்துப் பின்பு 'வானரா! நீ நெடுநாளைக்குப் பின்பு வந்தாய், மற்றும் பசித்திருக்கின்றாய், எனக்குச் சிங்கங்கொடுத்த விவ்வானை யிறைச்சியை நீ கொஞ்சந் தின்று, சிங்கம் வருவதற்குமுன்னே சீக்கிரமா யோடிப்போ' என, குரங் கதைக் கேட்டு யானையைக் கிழிக்க, அதைப் பார்த்து நரி, 'வானரா! சிங்கஞ் சமீபத்தில் வந்தது, இனி நீ விரைவி லோடிப்போ' என, அதைக் கேட்டுக் குரங்கு பறந்தது. பின் பது பிளந்தவிடத்திலிருந்த மாம்சத்தை நரி தின்னு கையி லங்கேவந்த வேறொரு நரியைச் சண்டையிட்டுத் துரத் தித் தான் வேண்டுமட்டு மிறைச்சிகளைத் தின்றது. ஆதலானீ யம்மகரத்தைக் கொன் றுன்வீட்டிற் சுகமாயிரு. வேறொரு தேயத்திற் சௌக்கியமெல்லாங் கிடைக்குமாயினுந் தனக் குச் சிநேக னங்கொருவனு மில்லாவிட்டால் சித்திராங்கன் போற் றீங்குக ளனுபவிக்க வரும்' என, முதலை 'சித்தி ராங்கனுக் கெப்படி யவஸ்தை நேரிட்டது?' என, வானரஞ் சொல்லத் தொடங்கிற்று:—

'அயோத்தியா நகரத்திலிருந்த சித்திராங்கன் என்னு மொரு நாய் பஞ்சத்தினாற் சோறு கிட்டாமன் மறுதேயத் திற் சென்றொரு கிருகஸ்தன் வீட்டுக்குப்போ யவ்வீட்டுக் காரி சோறுபோட் டாதரிக்கதனா லன்றுமுதல் வெகுநாள் வரைக்கு மங்கேயிருந் தொருநாட் சகஜமாய் வீட்டுக்கு வெளியே வந்தது. வந்தவுடனே யவ்வூர் மற்றை நாய்க ளிதன்மேலே விழுந் தநேகவிடத்திற் கடித் தத னுதிரமாம் சங்களை வெளிப்படுத்தினதினாற் சித்திராங்கன் மிகவுந் துக்க மடைந் தென்ன பஞ்சம் வந்தாலுஞ் சுவயதேசத்தைவிட்டு

வரலாகாதெனத் தனக்குட் டேறி மீண்டு மயோத்திக் கோடிவந்த மாத்திரத்தி லதற் குறவாகிய நாய்கள் சித்தி ராங்கா! அத்தேய மெப்படி யிருக்கிறது?' என, 'சித்தி ராங்கன் ' அத்தேயஞ் செழிப்பாயிருக்கின்றது. மாதர்களும் தயாசாலிகளா யிருக்கின்றார்கள், சுசாதிமித்திரத்துவமில்லை, ஆதலா லிவ்வவஸ்தை நேரிட்டது' என்றது. ஆனது கொண்டு தன்னிடத்தி லிருப்பதுபோலச் சுகம் வேறில்லை யென்கின்றேன்' என, முதலை யவ்வார்த்தைகளைக் கேட் டுப்போ யவ்வன்னமே யெதிரியுடனே பொருது தன் வீட் டை மீட்டுக்கொண் டங்கேயே வாழ்ந்திருந்தது. ஆதலாற் பராக்கிரமத்தினாற் பாக்கியம் வழிதேடி வந்தடைகின்றது.

பதினாலாவது

## அசம்பிரேக்ஷிய காரித்துவம்

அல்லது

## ஆராயாது செயல்

சோமசருமனென்னும் ஆசிரியன் மக்களை நோக்கி 'யாவனொருவனுடைய தீச்செயல்களைக் கண்ணுற்றாயினுஞ் செவியுற்றாயினு மறிவுடையோ னதைப் புரியலாகாது. அங்ஙனமாகையில் வேள்ளறிவன் என்னும் பெயரிய வொரு மயிர்வினைஞன் மணிபத்திரன் என்போனது கருமங்கண்டுழித் தீகருமமங்ஙனம் புரிந்திடருற்றனன்' என, அதைக் கேள்வியுற்ற விளங்குமரர் 'அஃதெவ்வா றியம்புதி' என வினவ, ஆசிரிய னுரைக்கலாயினன் :—

'அவாசிக் கன்னதாய பைடணபுரி வாசியாகிய மணிபத்திரன் என்போ னன்னெறிபற்றி யொழுகலா னுளதாய நல்குரவாற் பரிபவமுற் றிவ்வறுமை கெட்டது, சீச்சீ! தயை சாந்தி முதலாகிய குணங்கள் பொருளில்லாதா ரிடத்தில் விபரீதமாகத் தோன்றுகின்றனவென்று கணந்தோறு மாகுலித்துக் குடும்பப் பாதுகாப்பி னேக்கத்தினு லறிவு மழுக்கமடைகின்றது ; தானிய முதலிய பொருளிலான்வீடிடுகா டொக்கும்; அவன் கல்வி முதலிய குணச்சிறப் புற்றோனாயினு மனித ரெண்ணிக்கையிலுளான் ; இங்ஙனம் பல வகைத்தாய கவற்சி மிடிமையினு லெய்துகின்றது; ஆகலான் பட்டினியிருந் துயிர் துறப்பலெனத் துணிந்து மணிபத்திரன் கண் வளர்கையில், பதுமநிதி நீத்தோன் படிவமாயவன் கனவிலடைந்து, யானுன் றெழுக்கத்தாற் கட்புல

னாக நாளை யிவ்வுருவத்தோடு வருவேன்; அப்போழ் தென் சென்னிமேற் றண்டத்தாற் புடைப்பையாயின் யான் குன் ருப் பொற்குவை யாவேன்' எனக் கேட்டவன் றுயிலொ ழிந் திக்கனவு உண்மையோ வன்றே லிஃதெப்போழ்து மெனக் குளதாய பொருட்சிந்தையின் றேற்றமோ வென் றிங்ஙன மறுநாட் கருதிக்கொண் டிருக்குங்கா லிரவிற்கண் டாங்குவந்த வந்தேத்தோனைக் கண்டு நிகழ்ந்த கனவு மெய் யெனத் துணிவுற் றவன் சிரமேலோர் தண்டங்கொடு தாக்க, அவன் பொன்மயமா யொளிவிட்டு நின்றமையா லொன்றிற் பொதிந்து வீட்டில் வையாநிற்புழி, அவனில்லாட்கு நகங் களைந்துகொண்டிருந்த மயிர்வினைஞனை நோக்கி, 'உனக்குச் சிறிதருத்தந் தருவேன், இவ்வற்புதத்தை யெங்கணுஞ் சிறி தும் புலப்படுத்தற்க' என வற்புறுத்தி விடுக்க, அவன் 'அந்நெறி நிற்பல்' என மேற்கொண்டு வீட்டிற் சென் றறிவின் சிறுமையாற் றன்னு ளாராய்வானுயினன். வைக றையி லொருதுறவியை யழைத்துவந் தன்னேன் மன்டை யிற் கோல்கொண்ட டறையின் அவன் சுடர்விரி பசும்பொன் னுவனெனத் தேறி, மற்றைநாட் டுறவிகள் குழுவிற் சென்று மிக வணங்கி, 'நீவி ரெத்திறத்தோர்க்கு மறிவுணர்த்திக் கரையேற்று நிற்கின்றனீர்; மற்று மெவ்வவ ரில்லத்தும் பிச் சைக் கேகா நிற்கின்றீராதலால், இத்தினம் நாயினேன் சிறுகுடிலுக்குத் தேவரீர் திருக்கூட்டத்தோ டெழுந்தருள் வீராக' என, அவர்களிற் றலைவ னம்மாசு தீர்ப்போனை நோக்கி, 'நாடோறு மந்தண ருன் மனைக்கு வராநிற்க, நீ யிற்றைக் கெமக்கே னியம்புகின்றனை? அவ்வேதியரை யழையாய்' என, அக்காலை நாவிதன் றும்மாட்டுப் பேரறச் செயல்க ளிருக்கின்றமை யானறிகின்றேன். ஆதலா னீவி ரென்வேண்டுகையை யெட்டுணையு மருமற் றிருவுளம் வைத் தருள்வீர்' எனப் பணிவாக மொழிந்து, அவர் கரத்தைப் பற்றி யில்லிற் கொடுவந் தம்முனியின் கபாலத்தி னுலக்கை

யாற் சாத்தினவனவி லவன் களைத்து நிலத்தி லடியற்ற பனை போல் வீழ்ந்தனன்; இதற்குட் டபசிக்குமாம்வந்து மெய்ம் மறந்து கிடக்கின்றவனைப் பார்த்தவனவிற் பேரிரைச்ச லிட இக்கலிபலியை யவ்வூராள்வோன் காலாட்கள் கண் டாண்டெய்தி யந்நாவிதனைப் பிணித்துத் தந்தலைவன்பாற் கொடுபோய்விட, அவ்வூராளி மஞ்சிகனை நோக்கி 'இஃ தேன்செய்தனை?' என உறுக்கி வினவ, அம்மங்கலன் 'மணிபத்திர னகத்துக் கண்டாங்கு யான்செய்தனன்' என, அத்தலைவ னவ்வணிகனை விளித்து, 'உன்பானிகழ்ந்த தென்னையோ?' என, அவ னொன்று முரையாதிருந்தனன். அதன்மே லதிகாரத்தலைவ னம்பட்டனை பார்த்து 'இவ னூராயாம விக்கருமம் புரிந்தனனாதலா லிவனைக் கழுவேற் றுக. இங்ஙனம் முன்னொரு பார்ப்பினி பராமரிசியாம லியற்றின கருமத்தான் மூங்காவைக்குறித் தாகுலித்தாள்' என, மணிபத்திரன் 'இஃ தெங்ஙன மருள்வாய்' என, அவ் வூராளி சொல்வானுயினன்:—

உச்சயினிபுரத்தில் வதிந்த தேவசும வேதிய னென் போன் மனையோ டில்லற நடாத்து நாளிற் குழவியில்லாக் குறையா லிருவரு மொரு கீரிப்பிள்ளையை மைந்தனைப்போற் கருதி வளர்ப்புழி யொருமக வுண்டாயிற்று. அம்மதலையை யோர்நாட் டுஞ்குவித்துக் கணவனைப் பார்த்து, 'யா னுதகத் தின்பொருட்டுச் செல்லாநின்றேன்; நீர் நங் கான்முளை யைப் பார்த்திரும்; ஓர்வேளை கீரி கடிக்கும்' என்றிங்ஙனம் வெருத்துத் தண்ணீருக்குச் செல்ல, பின்ன ரக்குழந்தை தொட்டிலிற் கண்வளர்ந்தது. அவ்வந்தணனு மோர் தடாக கரும வயத்தனுய்ப் புறஞ்செல்ல அத்தருணத்தி லொரு கிருஷ்ணசர்ப்பம் பிலத்தினின்றும் புறம்போந்து தொட்டி லின்மேற் செல்லாநிற்கக் கண்ணுற்ற நகுல மதை யக்கணமே விரைந்துபற்றி யுதறிக் கொன்று பல கண்டங்கண்டு குரு தியாற் பூசுற்ற முகத்துடனே தனதாற்றலைக் காட்ட விரும்பி

விரைந்து துவாரமுகமாக வருகையில், வந்த பார்ப்பினி செந்நோ விறைந்த வதன் வதனத்தைப் பார்த்தளவி லது தன் பிள்ளையைக் கடித்து மடித்ததென்று துள்ளித் துள்ளித் துனுக்குற்று நீர்க்குடஞ் சிதைவுறும்படி யதன் றலைமேற் போட்டுக்கொன் றுடனே யுட்புகா நிற்கையில், மகனுறங் குதலையு மருகே கரும்பாம்பின் றுணிக்கைக் குவையையுங் கண்டு அந்தோ! கெட்டேன், யானென் னருங்குழவியை நன்காராய்வின்றிக் கொலைசெய்தே னெனச் சோகமுற்றுப் புலம்பாநிற்புழி, அவட்லைவனுண்டெய்தி 'குழந்தை யிதோ விருக்கையி னீ வெறுமையாய் மகவிழந்தேனென் றேன் கதறிக் கலுழ்கின்றனை? என்னடி பேதாய்!' என, மனைவி 'நீர் யாதோ பேரவாவா லென்மொழி தள்ளிப் போன மையா லதன்பய னிதோ வாய்த்தது; இது மிக்க வவாவி னன் முடிமேற் சக்கரஞ் சுழன்றதை யொத்தது' என, அவன் அஃ தெவ்வண்ண முரைத்தி' என, உரைப்பா ளாயினுள் :—

அமராவதி நகரத் தின்புற்றிருந்த வேதியர் நால்வர் மிடியாற் றுன்புற் றிப்போழ் தியாமடைந்த பொருளின் மையை யின்மையாக்கு மிடநாடிச் செல்வேமாக; பொரு ளில்லார்க்கு வனநடு வதிதலினு மின்பிலையென் றிங்ஙனங் கடைப்பிடித்து நால்வரு மறுதேயம் போகா நிற்கையில், க்ஷிப்பிரா நதிக்கரை யணித்தாகப் பைரவாநந்தி என்னும் யோகியொருவ னெல்லாம் வல்லோனுய் வீற்றிருக்கின்றன னெனவறிந் தம்மடத்தி லவனுழைச்சென் றியன்றமட்டும் பூசிக்க, அத்துறவி யவர்கள் வழிபாட்டிற் கிரங்கி 'உம் வரவின காரண மேது?' என, அவர்கள் 'அடிகளே! எம் மை நலிகின்ற நல்குரவைத் தொலைப்பான் மிக்க பொருள் விழைவா லெந்நாடு துறந்து புறம் போந்தனம். பொருட் குவை துணிவின் செய்கையாலன்றி யெய்துவதன்று; ஆதலி னிதனிமித்தஞ் சாந்துணையு முயலவேண்டுமென்று துணிந்

றின்றி நுஞ்சரணமடைந்தேம்; இனித்தேவரீ ரெம்வறுமையை முடிப்பீர், மறுப்பீரே லெம்முயிரை நும்பால் விடுக்குதும்' என, யோகி இவர்கள் பரபரப்பையுங் கடைப்பிடியையு முணர்ந்து, நான்கு சித்தியைச் சிந்தித் தன்னோரை நோக்கி 'நீவி ரிமயகிரி நெறிபற்றிப் பிசகாது போமின்; போவுழி யெவன்வர்த்தி யாண்டு விழுமோ வவற் காண்டு சித்தியாம்' என்றுரைத் தவர்கலைமீது நான்கு திரிச்சீலைகளை வைத் தனி னப்பொன்விருப்போ ரங்ஙன மவராணையைச் சிரமேற் றாங்கி இமயமலை யிடத்திற்போகச் சிறிதாறு கடக்கையி லொருவன் வர்த்தி வீழ்ந்தது. அக்காலை யன்னவ னங்குத் தொட்டுப் பார்ப்புழித் தாமிரக்கனியாயிருக்க வவன்றனை விட்டுநடந்த வேனையோரை, 'மித்திரரே! நும்மவாக் கெ டத் தாமிரங்கொண்மின்' எனக் கேட்டு, மூவரும் 'பேதாய்! இஃதா லென்ன பயன்! இஃ தெத்துணைப்பெறினு நம்மி டிமை யெட்டுணையு மகலாது; ஆதலான் யா முன்செல்லு தும்' என, வுரையாடி யவர் முற்செல்லாநிற்க, அவன்றன் றாற்ற லளவு செம்பு வாரிக்கொடு வந்தநெறி சென்றனன். பின்னர் முன்னர்க்கூறிய வம்மூவரு மோர்கூப்பாடு செய்மை போவுழி யங்கொருத்தன் றலைத்திரி வீழ, அவனங்ஙனந் தொட்டு மற்றோரை நோக்கி, 'இவ்வெள்ளிகளைக் கைக் கொடு மீள்வேம்' என, அவ்விருவரும் 'முற்படப் பொற் குவை யிருக்கும், ஆதலால் யாம் போகுதும்' என, அவர் போயபின் அவனும் வெண்பொன் னிராசியிற் றன்வலிக் கியன்றன சுமந்துசென்றனன். பின் பவ்வெஞ்சிய விரு வரு நடக்கையி லொருவன் சிரத்திரி நிலத்தில் வீழ்வுற, அவன் றோண்டிக் காண்புழிப் பொற்றிர ளிருந்தமையா லவன் களிப்பின் பெருக்கி லமிழ்ந்தினவனாய், நண்பனே! நம் மிச்சைமட்டுஞ் சொன்னத் திரட்கொடு செல்லுதும், வருதி' என, அப்பேராசைப்பேதை 'அறிவிலாய்! முன்னே மணித்திர ளிருப்பனவாம், ஆதலா னுன்செல்வல்' என,

பின்பவன் 'யா னிச்செம்பொன் னேற்றுக்கொண் டுன்வர ேைநாக்கிக்கொண்டிருப்பல், நீ விரைவில் வருதி' என, அவன் 'அங்ஙனம் ஆக' என் றவன்விட் டகல்வுழி வெயிலின் வருந்திப் பசி நீர் வேட்கையாற் சித்திநெறி தப்பியிவ னவ ணுழல்கையில் அங்கொரு மனிதன் றலையிலொரு சக்கரஞ் சுழலவு மவனுடலெங்குஞ் செந்நீரான் முழ்கியிருக்கவுங் கண் டவனை நோக்குற்று, 'நீ யாவன்? உன் றலைமேலிந்நேமி சுழல்வதென்னை?' என் றிம்மாற்றம் வினுபவளவி லவ்வாழி யிவனுச்சிமீது வந்திருக்க, அவ்வேதியன் றுனுக்குற்று, இஃதென்னை? 'கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டாற்போ லாயிற்று' எனக் கவலையுற்று இந்நேமி யென் மத்த கத்தின்மீ துறுவதென்னை?' என, முன்சக்கிரி மொழிய லுற்றனன். 'இதுகாறு மெனக் கநுபவ மிருந்தது; இக்கா லையின் மற்றொருவன் சித்தித்திரியோடெய்தி யுசாவுவன்; அப்போழ் திவ்வாழி யவன் றலையைப் பற்றிக்கொளுமென் றெனக்குக் குபேரன் வரமிருக்கின்றது' என, இச்சக்கரத் தலைப் புதியோன், 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந் ததுபோல் எனக்காயிற்று' என்று தன்னிற் கவன்று நெட் டுயிர்ப்பெறிந்து பண்டைய நேமித்தலையனை நோக்கி 'நீ யிங்கெய்தி யெத்துணை நாளாயின? விளம்புதி' என, அவன் 'எனக்கு காலவரையறை தெரியாது; இராம னரசியற் றுங் காலையி னுன் மிடிபட் டிங்குச் சக்கிரத்தாற் பிடிபட் டனன்' என, அதைக்கேட்ட வேதியன், 'ஈங்கு வல்சி நீர் தருபவ ரெவர்?' என, பூர்வசக்கிரி 'பசிதாக மிவ்வுழி வருத்துதலில்லை; முழுது மித்துன்பே நுகரவேண்டும்; இஃது நிதிக்கோ னிதியைக் கவர்வான் வருபவர்க் கச்சுறுத் தும்பொருட்டு வைத்திருக்கின்றது. இவ்வச்சத்தால் யாவ ருமிங்கு வாராரென் றிங்ஙன நிகழ்வன யாவுஞ் சொல்லி, இப்போழ் தென்மெய்க் காற்றப்பெரு வேதனை யுளதா யிற்று; ஆதலா னுன் செல்வல்' எனச் செல்வுழிச் சென்ற

ளன். பின்னர் முற்கூறிய சுவர்ணசித்தி சொல்லியாங்கு நெடுநேர மிவன் வருநெறி நோக்குற்றிருந்துங் காணாமையாற் றேடிவந் தவன் சென்னியிற் சக்கரஞ் சுற்றுகின்றமை கண் டையுற் றருகெய்தி, நண்பனே! இஃதென்னை யென்னை?' என, அவன் 'இஃது பேராசையின் பயன்' என சுவர்ணசித்தி 'ஓகோ! இது "பிள்ளை வரத்துக்குப் போன விடத்தில்புருடனைப் பறிகொடுத்தாற்போலாயிற்றே" எனச் சற்றுக் கலங்கிப் பின் வெள்ளறிவோர்க்குக் கல்விப் பயிற்சி சிறிதுளதாயின் பிறனறிவைக் கேளாது செத்த சிங்கத்தை யுயிர்ப்பிக்கின்றவர்போற் கேடுறுவார்கள்' என, அதைக் கேட்டுச் சக்கரதரன் 'அஃதெங்ஙனம்?' என வினவ, பொன்வாய்ப்பினன் இறுக்கின்றனன் :—

துளசாபுரம் என்னு மூதூரி னால்வ ரொருசாலை மாணாக்கராய்க் கல்விபயில்கையில், அவர்களின் மூவர்க்கு மந்திர வித்தை கைவர, அப்போ தவர்கள் 'அரசனையடுத்துப் பெரும்பொரு ளீட்டுத லன்றோ வித்தை யுணர்ச்சிக்குப் பயன்?' என, அதுகேட் டவரு ளொருவன் 'வாருங்கள், நம்மு ளிவ்வொருவன் கல்வி யறிவிலன்; ஆதலா லிவற் கீட்டு நம்பொருளிற் கூறுகொடேம். ஆதலா லிவ னிங்கொடியிற் றானே தன்னில்லத்திற் கேகற்பாலன்' என, அதைக் கேட்டு மற்றொருவன், 'இவன் கல்வி கல்லானாயினு மிளமை தொட்டு நம்மோடு விளையாட் டயர்ந்தோ னாயினான்; அன்றியு நம்மினு முலகநடையிற் றேர்ந்தவன்; அரசன்மாட் டுலக நடை யறிந்தவனினும் கல்விமாத்திரம் பயின்றோன் புகழெய்தான், ஆதலா லிவற்கு நாலிலோர் கூறு கொடுக்குதும்' என, அதை யெவரு மொப்பிப் பின்பு நால்வரும் வேற்றுத் தேய நோக்கிப் போவுழி, அங்கே யோரடவியி லோருயிர் நீத்த வரிமா கிடந்தமை கண்டு, ஒருவன் 'நாம் பிழைப்பிக்கக் கற்ற வித்தையை யிவ்விறந்ததன்பா லியற்றித் தெளிவோம்' என, அதை யுலகநடை வல்லோன் கேள்வியுற்று,

'இவ்வரிமாலைச் சிவிப்பிப்பி னிஃ தெல்லோரையுந் தின்ளுது விடாது; இதன்பாற் பரீக்கைசெய லொழியற்பாலது' எனப் பலவகையான் மறுத்தனன். அம்மூவரு மந்நன் மொழியை யெறிந்து செருக்கிஞ லச்சிங்கத்தை யுயிர்ப்பிக்கத் தொடங்க, மற்றவன் 'இத்தகுதியில் செயற்குச் சதுரஞவான் சேய்மை யாகற்பாலன்' என்றுரைத்து, அவனீளப்போ யோர் நெடுமரத்தின் மிசையிருக்க, பின்னரிவர்க ளம்மறவிலங்குக் குயிர்தந்தமாத்திரத்தில் அது மூவராவியையும் வாங்கிற்று. ஆதலாற் கல்வியினு மறிவு பெருமையது' என, அப்போது சக்கிரி 'இஃது காரணமன்று; அறிவுடையோன் வீட்டிற் பலகாப் பமைத்திருப்பினு நாசமுறுகின்ருன்; பேதையாயினுன் காட்டகத்திற் றனித்திருந்து முய்கின்றனன்; முன் ஞயிரம்புத்தி மல்லாந்ததையும், நூறுபுத்தி தொங்கினதையும், ஒருபுத்தி நீரில் விளையாட்டயர்ந்ததையும் கேட்டிலேயோ?' என, பொன்வாய்ப்பினன் 'அஃதெவ்வாறறைதி' என, நேமிதிரிதலையன் விடை விடுக்கலாயினுன் :—

மகததேயத்தி லோர் மலர்ப்பொய்கையில் அறிவாயிரத்தன், நூறறிவன் என்னு மிரண்டு மீனங்கட்கும் ஓரறிவன் என்னுந் தவளைக்கு நட்புளதா யிருக்குங்காலையில், ஓர் திவசமாண்டோர் வலையன் வந்து 'பிற்றைஞான் றீண்டுள கொழுமீன்களை வலையெறிந்து கவர்வேனுக' என் றுரைகூறி யிறந்தமையை யறிவுற்ற வம்மண்டூகந் தன்னுற்றூர்க் கறிவுறுத்துழி, அறிவாயிரத்தன் 'நா னீர்நடை பலவுங் கற்று வல்லேன்' என, நூறறிவன் 'யா னிலை பெயரலாகாது, யாதாகற்பாலதோ வஃதீண்டே யாகுக' என, அதைக்கேட்ட தவளை 'வாரீர் நட்டோரே! நானிதோ போகின்றேன், நீவிரும் நடமின்' என, அவ்விரண்டும் 'நீ யோரறிவ ஞகின்றனை, ஆதலாற் போவையாஞற் போ, யாம் வருவே மல்லேம்' என, பின் னத்தவளை தன் குழுவோடு வேறிடம்

போயிற்று. மறுநாட் செம்படவன் வீசிய வலையிற் சிக்கிய பற்பல மச்சியங்களோ டகப்பட்ட அறிவாயிரத்தனைத் தலை மேற் சுமந்தும், நூறறிவனை வாலைப்பற்றியு நடக்கையில், இதை ஓரறிவன் கண்டு தன் பெண்டிரை நோக்கி 'அறிவா யிரத்தனுக்கும் நூறறிவனுக்கு மிங்ஙனங் கேடெய்திற்று; நானோரறிவ னீரில் விளையாடுகின்றேன்' எனக் குதுகலித் துச் சொல்லிற்று. ஆதலான் மிக்கறிவோனுக்கு மூழினு மிவ்வணந் துன்புளதாம்' என, பொன்வாய்ப்பின னீள்செ வியலை நன்மதி தடா நிற்கையி லிசைபாடிக் கட்டுண்டாற் போ லுனக் கிப்பேரிட ருளதாயிற்று' என, சக்கரதரன் 'அஃதெங்ஙன நிகழ்ந்ததுரை' என, சுவர்ணசித்தி சொல்ல லாயினன் :—

நெடுஞ்செவியல், சுமதி என்னுங் கழுதை நரிக ளிர ண்டு மிடைவிடாம லூரினர் பைங்கூழை மேய்ந்து வனத் திற் றங்குழி, ஓர்நாள் விலாப்புடைக்கத்தின் றிரண்டுந் தேக் கெறிந்து குந்கியிருக்கையில், நெடுஞ்செவியல் 'இந்நிலவெ றிக்கு மிரவி லெனக்குப் பொழுதுகழிவின் றாதலால் யான் கானஞ்செய்வன்' என, சுமதி 'நீள்செவிய! நீ பாடற்க, உழவ ருன்குரலைக் கேட்டுத் துயிலொழிந் துன்னைப் புடைப் பார்கள், மௌனமாயிரு' என, நீள்செவியல் 'உனக் கிவ் விசையைக்குறித் துணர்வின்மையா லென்னைத் தடுக்கின் றாய்' என் றந்நரியை வைது, கழுதை தன் பெருங்குரன் முழுதுந் திறந்து பாடிற்று. அப்போழ் தவ்வுழுநர் விழிப் புற் றக்கழுதையைக் குண்டுருட்டாய்ப் பிணித்து நையப் புடைத்தனர். நரி யதைக் கண்டு 'மாமா! என் மொழி தள்ளி யிசைபாடினமையா லிப்பயனடைந்தனை' என்றிகழ்ந் துரைத்தது' என, சக்கரதரன் 'நன்மொழி வினவியு மந்த ரன் என்னுந் தந்துவாயன் மரணமுற்றனன்' என, பொன் வாய்ப்பினன் 'இஃதெவ்வண முளதாயிற் றியம்புதி' என, சக்கிரி சொல்வதாயினன் :—

நாராயண நகரத்தின் மந்தரன் என்னும் நெசவாளன் பலவகைப்பட்ட வத்திர நெய்துவரு பொருளால் மனைவி யோடுடன் டுடுத்துக் காலந்தள்ளி வருகையில், அவன் றறி முறிந்தமையான் மரம் வேண்டுற்றுக் காட்டிற் புக்கானுகத் திரியா நிற்கையில், ஓர் பெரிய வாகையைப் பார்த்து வெட் டத் தொடங்குழி, அதன்மேலிருந்த யட்சன் 'இவ்வென் னிடத்தை வருத்தாதே; நீ விருப்புற்றதை வெறுப்பின்றித் தராநிற்பேன்' என, சாலியன் 'நானென் னில்லம்புகுந் தெவரையுமுசாவி யவர் சொன்னவண்ணங் கேட்பேன்' என் றவ்வண்ணம் வீடுநோக்கி வருங்கால், நெறியி லெதிர்ந்த மித்திரனாய நாவிதனை 'என்செய்வ தியம்புதி' என, அன் னோன் 'நீ யிராச்சியங் கேள், நீ யரசு நானமைச்சு மாவேம்' என, அதைக்கேட்டபி னங்நடந்த செய்திபைத் தன் மனைவி யாகிய சாலிச்சிக்குத் தெரிவிக்க, அம்மடந்தை, 'இராச்சி யத்திற்கு வரம்பி லிடையூறுக ளிருக்கின்றன வாதலா லது கேட்கற்பாற்றன்று: வேறொரு வதனமு மிருகரமுங் கேட் பையாயின் றிவசத்திற் கிருசீலை நெய்தா னம்மில் வாழ்க் கை செவ்வன் நடக்கும்' என, அதை மேற்கொண்டு மீட்டு மவ்வனத்தரு வருகிற்சென் றவ்வியக்கனை நோக்கி, 'எனக்கு மற்றோர் சென்னியு மீரத்தமுந் தருதி' என, அவன் 'அங் ஙனமாக' எனச் சொல்லியவளவில், வினுபவாறடைந் துவப் பெய்தித் திரும்பிக் கிருகத்திற்கு வருகையில், மாக்க ளிவ் விபரீதத்தைக்கண் டிஃதோ ரிராக்கதனென் றெண்ணுற்றுத் தலையா லொருகல் லெறிந்து கொன்றனர். ஆதலால் வரற் பாலது பிழையாதென் றுணர்வுற்று வல்லோர் வினைசை கொள்ளார். அங்ஙனம் வீணெண்ணங்கொண்டு கிருபணன் என்போன் கேடுற்றனன்' என, சொன்னசித்தி 'அஃதெவ் வாறுய தியம்புதி' என, சக்கரதரன் சாற்றலுற்றனன் :—

'பண்டரபுரத்திற் கிருபணசருமன் என்னுமொரு வே திய னிரந்து வயிறுநிரப்பி யெஞ்சிய தவசங்களைப் பெய்து

நிரப்பிய பானையைச் சிக்கத்தின் மீதிருத்தி யதனடியிற் படுப்பன். இங்ஙன மொழுகுகையி லோர்நாட் கிடந்த வாறே சிறுவிலைக் காலமெய்தி னிப்பண்டம் விலைப்படுத்தி யப்பொருட்கோர் காராடுகொண் டதுபல்கியபின்ன ரவற் றை யாவிற்குமாறி யவ்வாட் பெருகியபின்ன ரவற்றிற்கீடாக வாம்பரி கொள்வேன். பின் பப்பரி குட்டிகளின்று விருத் தியாயபி னவற்றை விற்று யான் செல்வமுடையே னாவேன். பின் னோர் பார்ப்பனக் கன்னிகையை நாடி மணம்புரிவேன். அம்மாதகட்டோர் மகவுளதாம். அது தவழ்கையி லியான் பெண்டிரை நோக்கி, அடி பெண்ணே! குழவியை யெடு வென்பேன். அவள் பணி யூற்றத்தா லெடாள். அப் போழ் தியா னவட் கிங்ஙன மோருதை கொடுப்பல்' என இங்ஙன மெண்ணமிட் டோருதை யுதைக்க, அவ்வுதை யரிசிப்பானையிற் றாக்கி யஃதுடைபட் டிருந்த பண்டமுழுவ துங் கொட்டுண் டிறைந்து பயன்பெறாதாயிற்று. ஆக லால் வீண்கற்பனை கற்பித்தலாகாது' என, அதைக் கேள்வியுற்ற பொன்வாய்ப்பினன் 'உன்மீது குற்றம் யாது? இது பற்றுள்ளத்தின் பெருமை. கிருபணத்துவத்தினல் சந்திரசேனராசன் மிகத் துன்புற்றனன்' என, சக்கரதரன் 'அஃ தெங்ஙன மாயது?' என, சுவர்ணசித்தி சொல்லு கின்றனன்:—

அயோத்தியா நகரத்திற் சந்திரசேனன் என்னுமரை யன் றன் மகன் வலிமுகத்தோ டாடலயர்வதில் மிக்க வேட் கையைக் கண்டு பற்பல வலிமுகங்கொணர்ந்து சாலையில் வளர்ப்பிப்புழி, அங்கு மடையனுக்குங் குற்றேவல் செய் வோர்க்கும் பகை மூண்டமை யறிந்து, அவற்றுளோர் சது ரப்பாடுடைய முசு, 'இவண் கலாம் நிகழ்ந்திருக்கின்றமை யா லிவ்விடந் துறந்து காட்டகம் புகுவேம்' என, அதைக் கேட்ட வானரக்குழு 'நீ மூத்தமையா லறிவிழந்து பல பல படி பிதற்றுகின்றாய்; இங்கரையனையடுத்துப் பலவன்ன

வுண்டிகளுண்டு குழீஇ யிருந்தேம். இந்நலத்தை வலிய வீசி வனத்திற் றமைதின் றுழல்வது நன்றன்று. யா தொன் றெய்தற்பாலதோ வஃதிங்ஙனே யெய்துக' என, இம்மொழிகேட்டக்கிழக்குரங்கு தன் குடும்பத்தோடு வேற் றிடம் புக்கது. பின்ன ரோர்நாட் பணிசெய்வோன் மடை யனைக் கரத்தண்டத்தா லோச்சி யெறிந்தமையா லவன வனை யெறிகொள்ளிகொண் டெறிந்தனன்; அக்கனற்பொறி வைத் தூற்றிற்பற்றிக் குதிரைச்சாலை யாவற்றினுமூண் டக னகத்துள பரிகளிற் சில வெரிந்திறந்தன; சில வுடற் பாதி கரிந்து வீழ்ந்தன; சில கண்முதலிய வுறுப்புக்கள் வெந்தன. இச்செய்தி யரசனறிந் தக்கணத்திற் குதிரை மருத்துவ ரைக் கூய் 'அவ் வசுவவேக்கா டொழிதற் கேது செய்ய லாவது' என, அவ்வாமாத்தியர் 'குரக்கி னெய்யாலன் றிக் குணமுறாது' என, அண்ணலுடனே யேவல்புரிவோ ரானன மேறிட்டு 'இவ்வானரக் குழுவைக் கொலைசெய் திப்பண்டிதர் சொல்லியாங்கு புரிந்து குணமுறுவிமின் கள்' என்றேவ, அவரன்னவாறு செய்தனர். இதை யம் முதுகடுவ னறிந்து பெரிதும் வருந்தி 'இப்பழி வாங்கு வேன்' என் றுறுதிசெய்து காட்டகத்துத் திரிகருகையில், வழியில் மிகப் பொலிவுள்ள ஒரு பெருஞ் சரசைக்கண் டிக்குளத்தகத்து மக்க ணடப்பின்மையி னிவ ணோர் பெ ரும்பே யிருக்கவேண்டுமென் றுள்ளிச் சேய்மைக்கணின் றோர் தாமரைத்தாளைப் பிடுங்கி யத்துளத்தினு னீரை யுறிந்து குடித்தது. இதை யாண்டுவதிந்த கணங்கண் டதி னின்று மர்க்கடத்தி னருகுற்று, 'உன் சதுரப்பாட்டை மெச்சி நான் பிரசன்னமாயினேன், இவ்வென் மணிவடத் தை யேற்றுக்கொள்' என, தன் கழுத்தின் மாலையைக் கழற்றிக் கொடுத்தது; அப்போது குரங்கு பைசாசத்தை 'உதகத்தி லுனக்கு வலி யெவ்வளவிருக்கின்றது?' என, அப்பைசாசம் 'ஆயிரம்பெய ரொருங்கே நீரி லிறங்கினு

மலைப் புறம்போகவொட்டேன்' என, இதைக்கேட்ட வலிமுகம் 'உனக்கு நிரம்ப வுணவு கொடுவருவல்' என்றவ்விரத்தினமாலையைக் கழுத்தி லணிந்துகொண்டு சந்திர சேன னரையன் பதிபுக் கிறைவனைத் தரிசித்து, 'சுவாமி! உங்சோறு நெடுநா ளுண்டு வளர்ந்தேன், ஆதலா லும்மைக் காண வரலாயினேன்' எனப் பணிந்து சொல்ல, அரையன் 'இவ்வரதனவட முனக் கியாங்குக் கிடைத்தது?' என, வானரம் 'சுவாமி! காட்டி லோர்மலர்த்தட மிராநின்றது; அதில் வைகறையிற் குதிப்பவனுக் கின்னமணிக ளகப்படுகின்றன' என, அம்மொழி கேட்டுத் தோன்றல், 'யா னங்கெய்துவல்' என, வானரம் 'மிகவு நன்கு' எனத் தாழ, பின் மன்னன் சேனைக்குழாஞ் சூழ வானரத்தின் பின் சென் றச்சரசி னிலிருத்திருத்துப் பின்ன ரக்கங்குல் கழிந்து விடியற்காலையிற் சாகாமிருக மெழுந் தேந்தலை யெழுப்பி நோக்கி, 'நுமக் கரதன விருப்புளதே லிதேநற்பருவம்' எனக் கேட்டுக் காலாள்களோடு தடத்திற் செல்லாநிற்கையில், வானர மரையனைப் பார்த்து, 'எல்லோருந் தடத் தகம் புக்கு மணிகள் வாரிக்கொண்டெய்தியபிற்றை நாமிருவரும் புக் கம்மணிகள் கொள்ளுதும்' என, அவன் 'அங்ஙனமாக' எனப் போக்கிய பதாதிகள் வாவியி லிறங்கின மாத்திரையி லப்பாரிட மவர்களையங்கீரி லமிழ்த்திச் சேரக் கொன்றது. பின்பு சந்திரசேனன் 'சேவகர்கள் சென்று நெடுநேரஞ் சென்றது, இதுகாறு மெய்தவில்லை என்?' என்று பிலவங்கத்தைக் கேட்க, வானரம் வானுறவோங்கிய வோர் மரநெடுங்கிளையிற் பாய்ந்தேறி யரசை நோக்கி, 'நீ யென்குல முழுவதையுங் கொல்வித்தாய், ஆதலா லக்கடனை நா னிங்ஙனங் கைக்கொண்டேன்; நீ யெனக் கன்னந் தந்தமைபற்றி யுன்னை யுய்வித்தேன்' என, இப்பேச்சைக்கேட்டன்னலிரங்கி யத்தியாசைகொண்டு முயலுங் கருமஞ் சேட்டைத் தாரநிற்குமென் றுள்ளினவனாகக் கோயிற் புக்

கனன். அங்ஙனமாய் க்ருமம் நீ புரிந்தமையா ளஃது னக்
கித்துன்பம் பயந்தது. நல்ல தினியா னேகுவன்' என,
அப்போழ்து சக்கரதரன் 'குறைவுற்ற காலேயி னட்டோர்
பயன்படுகின்றார்கள். அங்ஙனமாக, நீ யெற்றுறந் தெவ்
வாறகனுதி?' என, சுவர்ணசித்தி 'கள்வ னிராக்கதனைப்
பிடிப்புழி வானரம் பேசினமையா லது பிடிபட்டது; ஆத
லா னுனிவ்வா ழியை யஞ்சுகின்றேன்' என, சக்கிரி 'இதெங்
ஙனம்?' என, பொன்வாய்ப்பினன் சொல்லுகின்றனன்:—

'மதுரைப்பதிக் காவலனுகிய பத்திரசேனக் கோமா
னுடைய இரத்தினவதி யென்னும் பெயரிய கட்டழகியா
கிய மகளைக் கவரக்கருத்துற் றோரிராக்கதன் போந் தற்ற
நோக்கிச் சின்னு டிரிவுற் றவ்வுபாய நடவாமைகண் டோர்
நாட் பதிவிருக்க, அக்கன்னிகை யதுகண் டடுத்துநின்ற
தோழிமுக நோக்கி, உயிர்ப்பாங்கி! இவ்வரக்க னென்னை
யெல்லுமெல்லியும் வருத்துகின்றனன். இதற்கேதேனு
மோர் சூழ்ச்சி செய்யவேண்டுவல்' என, அது செவிபுக்க
விராக்கத னிம்மாதைக் கவரும் பொருட்டியாம் வந்திருக்
கையி லிவ்வெண்ணங் கொண்டோ யெம்மினும் வலிய மற்
றொருவன் வந்திருந்தா லென்செய்வேமென் றச்சமுற்
றரையன் குதிரைச்சாலேயி லோர்கலிங்க வுருக்கொண் டிருந்
தனன். அங்ஙன மிருப்புழிப் பரிமாக் கொடுபோம்பொருட்
டவனுற்ற வோர்கள்வ னிஃதேனையவற்றின் மிக நன்று
யிருந்தமைகண் டதன்வாயிற் கலினம்பெய்து புறத்தீர்த்
துவந் ததன்மீ தூர்ந்து விட்டின்பா னடாத்தாநிற்கையி
லஃது திங்குமங்கு மோடத் தலேப்படுகையில், அவன் சம்
மட்டியா லறைந்து பார்த்துச் செவ்வனே செல்லாமையா
லக்கள்வ னிதுகாறும் யாங்கண்ட பற்பல மாக்களி லிஃ
தொத்ததைக் கண்டோமில்லே; ஆதலா னிஃதேதோ கிருத்
திரமமா யிருக்கின்றதென் றுள்ளங் கலங்குறுகையில்,
அக்குதிரை தொன்மரத்தின்கீ ழீர்த்தோட, அப்போது

மேலிருந்த கள்வன் விரைந் தாலின்விழைப்பற்றித் தொத்தியத்தருமீதேற, இராக்கதன் விளாசனுக் கஞ்சியோடினன், அதைக்கண் டம்மரமீதிருந்த வானரம், 'அடா! இவன் மனிதன், நீ யாக்கனுயிருந்து மேனிரிகின்றனை?' என, அதைக்கேட்ட சோரன் வெகுண்டு கீசகத்தின் வாலத்தைப் பற்றி வருத்த, அரக்கன் குரங்கு வஞ்சகமுள்ளதென் றெண்ணி மீண்டும் விரைந்தோடினன். ஆதலால் அக்கவிக் கெய்திய வின்னல்போ லெனக்கு முளதாமென் றிந்நேமியைக் குறித் தஞ்சுகின்றனன்' என, சக்கிரி 'தெய்வமெதிர்ப்பி னியாவரு மிங்ஙன மிடுக்க ணநுபவிப்பர்; கேண்மோ, இலங்கேசன் றிரிகூடாசல மொத்த மலையும், கடலொத்த வகழியும், தா னரக்கனும், பேராற்றலுடையானும், சுக்கிரன் குருவுமாக, இவ்வண்ண மொன்றுக்கொன்று குறைபாடின்றி யிருந்தும், அவனை யொருகுரங் கவமானத்தாற் றலை தாழ்ப் பித்தது. ஆதலால் விதிவலிமுன் யாவன் சூழ்ச்சி வலியா யினு மியாது பயன்படும்? அவ்வூ ழொன்றியிருப்பின் றீயவு நல்லவாய்விடும். இவ்வண்ணமே சிதடன் கூனன் முக்கட் பெண் இவர்கட்குமுன்ன நேரிட்டதொன்று கேட்டிலையோ?' என, பொன்வாய்ப்பினன் 'அஃதெங்ஙனமோ வியம்புதி' என, சக்கரதரன் சொல்வானுயினன் :—

மதுபுரக் காவலனுகிய மதுசூதன் என்பவற்கு முக்கட் பெண் டோற்றினமையாற் சோதிடம் வல்லோரைக் கூய், 'இதற்குச் செயற்பால தென்?' எனக் கேட்புழி, 'சார்வ பௌம! கேட்குதி, எவனுயினுஞ் சொல்வதை முன்னர் நன் காராய்ந்து சொல்லவேண்டும்; அங்ஙனமாராயாது சொல்லின் சண்டகருமனைப்போ லாகும்' என, அரையன் 'அவன் யாதுரைத்தனன்?' என, சோதிடம் வல்லோன் சொல்ல லுற்றனன் :—

தண்டகாரணியத்திற் சஞ்சரிப்போனுகிய சண்டகருமன் என்னுமோர் ரிராக்கதத்தலைவ னவனோரிட்ட வோரங்

தனான் றேன்மேலேறி நடத்திக்கொண்டு போவுழி, அவ் வேதிய னவ்வரக்க னடிகண் மிக மெல்லியவா யிருப்பன வற்றைப் பார்த்து, 'ஐய அரக்கத்தலைவ! உன் காலடிக ளெப்படி மெல்லியவாயின?' என, அரக்கன் 'நானீராடி யீரம்புலராளவு நிலன்மீது செல்லேன்' எனக் கேட்டுச் சிறி தாறு முன்னே தாங்கிப்போய்ப் பிற கிராக்கத ஞேர்குள னின் மூழ்கப்புக்குழிப் பார்ப்பானைப் பார்த்து, 'யா னித்த கருமஞ் செய்துவருகாறு நீ யடிபெயரற்க; இங்குத்தானே நிற்றி' எனச் சொல்லி, பின்னர் ஸ்நானஞ் செய்தனன். அந்தண னிதைப்பார்த் திதின் மூழ்கிப் புறம்போந்தானுயி னுமிவன் வயிற்றழலின் மூழ்காதிரேம். ஆதலா னோடி யுய்ய விதுவே நல்ல வமயம். நீராடிக் காற்புலருமுன் னிவ னடவா னல்லோவென்று றனக்குட் டெரிந்துகொண்டு விரைந்தோடினுன். அதுகண்ட வவுண னியான் வாய்பத றிக் கைக்கெட்டினது வாய்க்கெட்டாம விழப்புற்றேன்; கடி திற் பின்சென்று கவர்வெனெனினுங் கொண்ட நோன்பு குறையுறுகின்றதென்று மறுக்கமுற் றுங்கே நெட்டுயிர்த்து வாளாநின்றனன். ஆதலா னியாது மூய்த்துணரா தியற்ற லாகாதெனச் சொல்லிப் பின்னர்ப் பன்னூல்களையு நன் காய்ந்து கடைப்பிடித் திம்முக்கண் ணரிவையைப் பார்க்க வொண்ணு தென்னையோ வெனின், விரூப மகவுளதாயி னதைக் காணலாகாதென்பது நூற்றுணிபாம். மற்று மிஃ தான்றோ ரொழுக்கமுமாம்' என, ஏந்த லம்மொழி யுட் கொண் டக்கன்னிகையை வேற்றுழிவைத் தளித்தபின்னர், அவள் பூத்தமையா னிவண் மணத்திற் கியைபவனுக்குப் பெரும்பொருட்குவை தருவலெனத் தேயந்தோறு மண வோலை போக்கினமையைக் கேட்ட விரந்துண்ணு மன்டை யராகிய வோர்குருடனும் கூனனும் விவாகவிருப்பான் மன் னன்பாற் புக்கனர். அவருள், குருடனரையனை நோக்கி, 'நுங்கன்னிகையை யெமக்குத்தரின் கொடும்' என, இறைவ

விச்சுயம்வரற்கு நங்கன்னிகையைக் கடிபுரிவது தக்கதென் றுள்ளி, அவனுக்கு மகட்கொடை நேர்ந்து, அங்ஙனமே கடிமுடித் தளவில் பொருடந்து 'நீ கனமு நீட்டியாமற் பரதேயம் போதி' என்றனன். அவ்விடைகொண்டு மூவ ரும் பரதேயம் புக்கிருப்புழி, அவ ளக்கூனற்கு வயமா யவனை நோக்கி, 'இக்குருட்டுச் சவத்தை நஞ்சிட்டுக் கொல் லினு மிடையூறின்றி யின்பநுகர்வேம்' எனக் கேட்டு, அவன் செத்த பாம்பொன்றைத் தந்தனன். அவ்வளாங் கதையேற் றுக் கண்டித் தடுப்பின்மேல் வேவவைத்து பொறியிலியை நோக்கி 'இத்தசை நிற்குறித்துக் கொணர்ந்தேன்; இச் சுல்லி யெரித்துக்கொண்டிரு, நான் வேறு கருமத்திற் புகு கின்றேன்' என, அக்கன்னறை யவ்வாறே யிளந்தழலா யெரித்துக்கொண் டிருப்புழி யக் கிருட்டின சருப்பவாவி கண்ணிற்றுக்கி யவ்விடத்தினுற் கண்ணுரோகந் தீர்ந்து முன்போற் கண்டெரிந்தமையா லிவரிருவரு மிவன் குருட் டுதவியா னகைத்து விளையாட் டயர்வதைக் கண்டு காலா னெறிகாணும் பண்டைமாட்சிபோல் வந்து கூனனைப்பற்றி யீர்த்துச் சீற்றத்தாற் றூக்கி யவள் முகத்தி லெற்றினவளவி லவன் மூன்றும்விழி மறைந்திக்கூனன் கூனு நிமிர்ந்தது. ஆதலாற் றெய்வவொற்றுமை யிருந்தால் யாவு நல்லவாம்' என, சக்கரதரன் 'நல்லது, நீ யுன் கிருகத்துக் கேகுழி வழித்துணையோடேகு, ஊர்வழித் தனித்துச்சேறனு மெல் லோரு முறங்குகையில் விழித்திருக்கையுந் தலையாய பொ ருளு மின்பமுந் தனக்கே யுளவாகுக வென்னும் விருப்பமு மொழியற்பாலனவென நூல்களறைகின்றன. இங்ஙனநூ னெறிகடவாவொழுக்கினன் புயங்கத்தினின்று மோர் வேதிய னுய்ந்தவன்னா முய்வன்' என, சுவர்ணசித்தியப்ப னவனுயல் எவ்வாறு நிகழ்ந்தது?' என, சக்கிரி சொல்வானுயினன் :—

நாசிக தேயத்தனுகிய தத்தன் என்பவ னன்னையை நோ க்கி, 'யா னரியன் கருமத்தா லோரூர்க்குப்போகுவல் விடை

தருகுதி' என, 'அவ்வின்ருள், 'குழந்தாய்! ஒருவனு யே கற்க' எனக் கேட்டு, அவன் 'தாயே! நெறியூறின்றி யிருக் கின்றதே' என, அவண் மீண்டும் 'அப்பனே! எஃதுளதா யினு நீ நெறித்துணையின்றிச் சேறலாகாது' என்று கூபத்தி லோர் நண்டைப்பற்றி யோர்கலயத்திற்பெய்து கொடுத்து 'இதையேனுந் துணைக்கொடுபோ' என, அவ்வாறே யாய் மொழி மேற்கொண் டேகுழி, நெறியில் வேனிலால் வேசுற் ருேர் தருநீழலிற் கண்வளரா நிற்குமிடத்து, யாண்டிருந் தோ வவற்றீண்டவந்த வோரரா விம்மட்கலயத்திற் பெய் திருப்ப தென்னென் றதனுட் டலைநீட்டுகையில், அஞ் ஞென் டிஃதோர் காரராவென் றுணர்வுற்றுக் கொடுக்கா லிடுக்கிக் கொன்றது. பின்ன ரந்தனன் விழித் திப்பணியைப் பார்த் திஃதெங்ஙன மிறந்ததெனச் சூழ்வுழி, அதன் சென் னியை யவ்வலவன் கத்திரிக்கக்கண் டித்துணைச் செயலு மிதுவே புரிந்தது; மாதா தந்தவழித்துணையாற் பிழைத் தேன்; தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை' என்றது பொய் யாதென் றந்நண்டைக் கைக்கொடு வில்லம்புக் கன்னைக்கு வட்டாங்க நிலந்தோய வீழ்ந்து பணிவுதோன்றத் தழு தழுத்து வாழ்த்தி நிகழ்ந்த செய்திகளை விளம்பி யின்புற் றிருந்தனன்' என, பொன்வாய்ப்பினன் 'இது தக்கதேயாம். மந்திரம், தீர்த்தம், பெரியோர், சோதிடன், மருத்துவன், குரு வின்னோர்பா லெவனெவ்வணம் பாவனை புரிவானே வவ னவ்வணம் பேறுபெறுவன்' என் றிங்ஙன நேமியா னைத் தேற்றித் தன் மனைக்கேகினன்.

இங்ஙனம் சோமசன்மனென்போன் அரசன் மக்கட்குரைத்த பஞ்சதந்திரம் நிறைவேறிற்று.

# NOTES ON PANCHATANTRAM

# பஞ்சதந்திர அரும்பத விளக்கம்

பஞ்சதந்திரம் :—பஞ்ச = ஐந்து, five தந்திரம் = உபாயம், device. அதாவது ஐந்து தந்திரங்கள் அடங்கிய நூல் என்பது பொருள். A work treating of five devices to accomplish one's object or to overthrow one's enemies. From Sanskrit Panchatantra.

## வரலாறு

## I

வரலாறு, வரல் + ஆறு = வந்தவிதம். The manner in which the stories of the book came to be written. The following three pages explain it.

உறைவிடம் = வாசஸ்தலம். Residence or dwelling place. பாடலிபுரம் = ஓர் நகரத்தின் பெயர். பாடலி = பாதிரிமரம். பாதிரிப் புஷ்பம் மிகுந்துள்ள நகரம் என்பது பொருள். In English it is called Palibothra. சுகுணம்: சு = நல்ல, குணம் = சுபாவம். Good qualities.

சுதரிசனன்: சு = நல்ல, தரிசனன் = பார்வையுடையவன். One who has good sight.

விசனம் = துக்கம். Sadness or sorrow. கல்வி = படிப்பு. Education. தர்மகுணம் = தருமஞ்செய்யுங் குணம். Charitable disposition. (Sanskrit combination.) வேத சாஸ்திரம் = வேதமும் சாஸ்திரமும். Vedas and Shastras. (Sanskrit.)

கர்ப்பம் = கரு. Embroyo. ஜன்மாந்திர புண்ணியம் = விசேஷ பிறவியினாலாகிய புண்ணியம். The merit of a special birth in the course of transmigration. இம்மை = இந்தப் பிறப்பு. The present birth. மறுமை = மறுபிறப்பு. The next birth.

## II

பெருமூச்சு = பெரிய மூச்சு. Protracted breath; sigh. சபை = இராச சபை from Sanskrit Sabah, Royal Assembly. இளமை = இளம்பருவம். Young age. செல்வம் = ஐசுவரியம். Wealth. இராஜசம் = பெருமை; டம்பம். Pride; arrogance. ஏது = காரணம், Cause. எண்ணிக்கை = பெயர் for the sake of name. நீதிசாஸ்திரம் = சன்மார்க்கநெறியைக் கற்பிக்கும் சாஸ்திரம். Science of Ethics. மகா புருஷன் = மஹாத்புருஷன்; மேன்மையான புருஷன், Noble soul; noble man. மறு ஜனனம் = வேறு பிறப்பு, another birth. Dispelling their ignorance and imparting knowledge seemed to the king like giving them another birth.

சோமசன்மா = சோமன் + சர்மா, சோமன் = சிவனுக்குப் பெயர்; சர்மா = பிராமணனுக்குரிய பட்டப் பெயர். The name of the teacher who undertook to impart instruction.

சமானமான = சரியான. Equal. சபதம் = பிரதிக்கினை. Vow or promise. மாலுமி = கப்பலோட்டுகிறவன்; மீகாமன். Captain of a vessel.

துறை = துறைமுகம். Harbour.

மகிழ்ந்து = களிப்படைந்து. Felt happy; delighted.

உபசாரம் = வந்தனம்; மரியாதை. Compliments.

கருப்பஞ்சாறு = கரும்பு + சாறு = கரும்பின் சாறு. The juice of the sugarcane.

கட்டி = Lump.

நீதிசாஸ்திரம் = பலவகைப்பட்ட நீதிகளைக் கற்பிக்கும் சாஸ்திரங்கள். Moral Science; Ethical works.

பஞ்சதந்திரம் = ஐந்து தந்திரம். Five Tantrams or devices.

**They are:—**

1. மித்திர பேதம் = சிநேகத்தைப் பேதப்படுத்துதல் அல்லது கெடுத்தல். Sowing discord among friends. (Sanskrit.)

2. சுகிர்ல்லாபம் from சுகிர்த் = மித்திரனை, லாபம் = பெறுதல். Sanskrit. சிநேகிதனைப் பெறுதல். Associating with equals and living cordially with them.

## III

3. சந்திவிக்கிரகம். From Sanskrit சந்தி = சேருதல் and விக்கிரகா = சண்டையிடுதல். பகைவரை வெல்லும்பொருட்டுப் பகைவரோடு உறவு செய்தல். Forming friendship with enemies in order to ruin them.

4. லப்தஹானி அல்லது அர்த்தநாசம். From Sanskrit லப்தம் = கிடைத்த பொருள் and ஹானி = போக்கடித்தல். அர்த்தம் = பொருள். Losing one's acquired wealth.

5. அசம்பிரேக்ஷிய = நன்றாய் ஆராயாது, காரித்துவம் = செய்யும் தன்மை. That is, acting without deliberation.

சமானமானவர்கள் = சமமான அந்தஸ்துடையவர்கள். Equals.

மங்களம் = சுபம், நன்மை. Prosperity and good health.

ஆசீர்வதித்து = நற்பலனுண்டாவதாக எனக் கூறி. Blessed.

## Page I

ஒருமையாக = ஐக்கியமாக. Very much attached. கோட்சொல்லுதல் = கோள் + சொல்லுதல் = பிறர்மேல் குற்றம்சொல்லுதல். Carrying tales. உலோபகுணம் = மற்றவர்களுடைய பொருளைக் கவரவேண்டுமென்னும் ஆசை. Covetousness; intense desire to get the wealth of others. மகிழாருப்பியம் = மகிஷாருப்பியம். Sanskrit. எருமைகளால் ருபிக்கக்கூடியது. A town noted for buffaloes.

வர்த்தமானன் = விருத்தியடைகின்றவன். One who grows in prosperity. (Sanskrit.)

வர்த்தகன் = வியாபாரி. Merchant.

உத்தம பாத்திரம் = தகுதியான வழி. Best method.

நாசமாகும் = அழியும். Will perish.

## Page 2

இன்பம் = சந்தோஷம். Happiness.

புண்ணியம் = நற்செய்கை. Merit. கீர்த்தி = நற்பெயர். Fame. பெருமை = மதிப்பு. Respect ; honour.

நினைத்தது முடித்தல் = எண்ணியகாரியத்தை முடித்தல். Carrying out one's object. நடைப்பிணம் = நடக்கிற பிணம் = Dead bodies that walk about. A man without wealth is like a body without life.

சஞ்சீவகன் = நன்றாய்ச் சீவிக்கிறவன். One who lives well. (Sanskrit.)

நந்தகன் = சந்தோஷப்படுத்துகிறவன். One who pleases others well.

தேசாந்தரம் = புறதேசம். Foreign country.

நெருங்கிய = நெருக்கமான. Dense.

யதேச்சை = யதா + இச்சை = தன் இஷ்டப்படி. Independently. (Sanskrit.) சஞ்சரிக்கின்ற = வாசஞ்செய்கின்ற. Living.

ராஜ்யபட்டாபிஷேகச்சடங்கு = ராஜ்யம் + பட்டம் + அபிஷேகம் + சடங்கு.

ராஜ்யம் = அரசாட்சி. Administration.

பட்டம் = இராசாக்களுக்கு முடிதரிக்கும் காலத்தில் நெற்றியிற் கட்டுவதோர் அணி. A gold plate worn on the forehead especially by kings, as a distinction. It is called நெற்றிப்பட்டம் and is a symbol of dignity.

அபிஷேகம் = ஸ்நானஞ்செய்வித்தல் ; நீராட்டல். Bathing with holy waters.

சடங்குகள் = கிரியைகள். Ceremonies. When a king is crowned he is bathed with holy waters, a plate of gold is worn in his forehead, and a crown is placed on his head. These are some of the important ceremonies during a coronation.

இராசத்துவம் = இராச உத்தியோகம். Office of a king.

பராக்கிரமம் = வல்லமை. Power.

பேரிடி = பெரிய இடி. Loud thunder.

ரிஷபம் = இடபம் ; எருது. Ox ; bull.

முக்காரம் = எருதின் தொனி. The bellowing or roaring of a bull.

தொனி = சப்தம். Sound.

## Page 3

அசைவற = அசைவு + அற = அசைவு இல்லாமல். Motionless.

காடகன் from காடகம் Deceit or fraud. Hence a crafty or deceitful person.

தமனகன் = அடிக்கிறவன். One who beats. 'கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்.' This is a proverb. Literally, 'why should a frog in the well bother its head about the fertility of the country.' This is said of one who is inquisitive.

ஆப்பு = மரம் பிளப்பதற்கு உபயோகப்படுத்தும் மரக்கட்டை ; முளை. Wedge.

சுதத்தன் = சு + தத்தன் = நன்றாய்க் கொடுப்பவன். One who gives well.

திருப்பணி = திரு + பணி. திரு = Holy or sacred and பணி = work. Hence கோயில் வேலை. The temple work.

நந்தவனம் = பூந்தோட்டம். Flower garden.

பிளப்பு = வெடிப்பு. Slit.

பிடுங்கு = இழுத்தெடு. Pluck.

நெருங்கி = சேர்ந்து. Closed together.

உடனசுங்கி = உடல் + நசுங்கி. The body got jammed.

பிராணசேதம் = ஜீவநாசம். Loss of life.

சுவாமி = Here used in the sense of master. It denotes the lion who was their king.

மித்திரர் = சிநேகிதர். Friends.

உபகாரம் = நன்மை ; சகாயம். Good ; help.

சத்துருக்கள் = பகைவர். Enemies.

அபகாரம் = கெடுதி ; தீங்கு. Evil.

இராஜ சேவை = அரசனிடத்து ஊழியஞ்செய்தல். Serving the king. (Sanskrit combination.)

பிரயோசனம் = பலன். Benefit.

காகபலி = காகத்துக்குச் செலுத்தும் பலி. The offerings made to a crow. The ball of rice thrown to the crow during Srartham and other Hindu ceremonies.

எச்சில் = எஞ்சியது ; சாப்பிட்டு மீந்தது. Refuse ; remaining food.

பசை = ஈரம். Moisture ; sap.

வெள்ளெலும்பு = வெண்மையான எலும்பு. White bone.

கவ்வி = வாயினால் கடித்துப் பிடித்து. Grasped by the mouth; snatched. Also கௌவி.

யசமானன் = எசமான். Master.

கவளம் = உருண்டை. A ball of rice ; a morsel.

எக்கிக்கொண்டு = வயிற்றைச் சுருக்கிக்கொண்டு. Contracts its belly.

எளிய = அற்ப ; இரக்கப்படத்தக்க. Exciting pity ; poor.

## Page 4

குழைத்து = ஆட்டி. Shake or wag the tail.

கெஞ்சி = மன்றாடி. Beg.

பாகன் = யானைசெலுத்துவோன். A groom or elephant driver.

வலிய = தன் இஷ்டமாக. Of his own will.

கர்வம் = பெருமை. Pride.

அசட்டை = அலட்சியம். Neglect ; despise.

புகழ் = கீர்த்தி. Fame.

பாக்கியவான் = பாக்கியம் + வான். Sanskrit பாக்கியம் is wealth, but here it is luck or fortune and வான் an affix denoting possession like மான் in the words புத்திமான், கல்விமான், etc. Hence பாக்கியவான் denotes a lucky or fortunate person. புண்ணியவான்.

சேரங்கை = சேர் + அங்கை or closed hand; the quantity contained in a closed hand. Hence handful; very little quantity. சொங்கை is the word usually used.

இதாகிதம் = இதம் + அகிதம். (Sanskrit.)

இதம் = நன்மை.

அகிதம் = தீமை.

Hence நன்மை தீமை. Good or bad.

ராஜகாரியம் = இராசனுடைய ஊழியம். Royal Service.

வீணை = வியர்த்தமான. Vain; fruitless.

மனோராச்சியம் = மனம் + ராஜ்யம் = மனதிலே இராச்சியம் செய்வதாகப் பாவித்தல். Fancying in mind as reigning; giving place to idle fancies. (Sanskrit.)

" முடவன் கொம்புத்தேனுக் காசைப்பட்டாற் கிட்டுமோ?"

'If a lame man longs for the honey-comb that hangs from the branch of a tree, will it be accessible to him?' This is said against indulging in vain hopes.

முடவன் = நொண்டி; நடக்கமாட்டாதவன். Lame man.

கொம்பு = கிளை. Branch.

பிரதானி = பிரதானமானவன்; அமைச்சன். Chief officer of a kingdom. Minister.

அப்பிரதானி = இழிவானவன். Insignificant person.

முயற்சி = பிரயாசை. Endeavour; effort.

லகுவானவன் = அற்பன். Insignificant person.

சமர்த்தன் = கெட்டிக்காரன். Clever fellow.

கைகூடுதல் = சித்தியாதல். Succeeding.

மலையுச்சி = மலையின் நுனி. Summit of a mountain.

எளிது = சுலபம். Easy..

பெருமை = மேன்மை. Greatness.

சிறுமை = தாழ்மை. Meanness.

'முயற்சியுடையா ரிகழ்ச்சியடையார்.' (Proverb.)

முயர்சி = சுறுசுறுப்பு; பிரயாசை. Industry.

இகழ்ச்சி = அவமானம். Disgrace. The proverb means that the industrious shall not suffer disgrace.

## Page 5

மோந்துகொள்ளுவது = வாசனை பார்ப்பது. Smelling.

சதுரன் = சமர்த்தன்; கெட்டிக்காரன். Clever fellow.

பரதேசம் = புறதேசம். Foreign country.

சத்துரு = பகைவன். Enemy.

அகாலம் = சமயமல்லாத காலம். Improper time. Untimely opportunity.

கொடிகள் = படருகிற செடிகள். Creeping plants.

இங்கிதம் = இதமான வார்த்தை; இனிமையான வார்த்தை. Pleasing sweet words; flattery.

இரங்குவார்கள் = மனது உருகுவார்கள். Will be moved; will take pity.

## Page 6

உத்தரம் = மறுமொழி. Reply; answer.

பிரகஸ்பதி = பிரகஸ் + பதி. (Sanskrit.)

பிரகஸ் = மேலானவர்கள்; தேவதைகள்.

பதி = அதிபதி; குரு.

Hence பிரகஸ்பதி is priest of the Hindu gods. He is supposed to possess great wisdom and ideal character.

பாராட்டாமல் = சாதியாமல். Without cherishing.

பரிபாலித்து = பாதுகாத்து. Protect; patronize.

விர்த்தியடைய = செழித்தோங்க. To prosper.

அனுசரிக்கிறதற்கு = சேருவதற்கு; அடைதற்கு. To join; to make friends with.

சுபாவம் = தன்மை. Nature.

தண்டம் = நமஸ்காரம். Prostrate worship.

திருவடி = திரு + அடி. Sacred feet.

'சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்' (Proverb). 'Even a small splinter will be of service to pick the teeth.' Thamanaka means that even an insignificant person will be of some help at times.

குணவான் = நலமுடையவன். A man of good qualities; Virtuous man.

சற்குணம் = நல்ல குணம். Virtue.

சுவாலை = வெளிச்சம். Flame.

வராகவடிவு = வராகம் + வடிவு = பன்றி ரூபம்.

வராகம் = Hog and வடிவு = image. Hence, the incarnation of Vishnu as a hog.

பூசிக்க = வணங்க. To worship.

ரூபம் = வடிவு. Shape.

குணம் = யோக்கியமான தன்மை. Integrity.

தேர் = இரதம். Car.

சுள்ளாணி = சுள் + ஆணி. சுள் = Small, slender and ஆணி = nail. அதாவது கடையாணி; பக்கச்சாவி. The side nail or a smail linch pin.

கருவி = ஆயுதம். Instrument; means.

## Page 7

ஆற்றல் = வலிமை; சக்தி. Ability; power.

சார்பு = பக்கம். Side.

வாத்தியக்கருவி = இசைக்கருவி. Musical instrument.

யோக்கியர்கள் = சன்மார்க்கர். Honest people; virtuous people.

சாஸ்திரங்களும் = Sacred writings; from Sanskrit Shastras.

பரிபாலனம் = காப்பாற்றி உபயோகப்படுத்துதல். Protect and use; patronage.

அபகீர்த்தி = அவமானம். Disgrace.

மேகமுழக்கம் = மேகத்தின் முழங்கல். Roaring of the clouds; thunder.

தொனி + சத்தம். Sound.

பிராணி = பிராணனையுடையது. That which has life; creature.

பிரமாணம் = மெய்யறிவு. Guiding principle.

வழுக்கிவிழுகையில் ஊன்றுகோல் போல். Like a staff for a man who slips and falls.

கோல் = தடி. Stick.

போர்க்களம் = போர்செய்யுமிடம்; யுத்தபூமி. Battle-field.

அசநியில் = காத்திராப்பிரகாரம். Suddenly; unexpectedly.

பேரிகை = மேளம். Drum.

## Page 8

தெளிந்து = நன்றாயறிந்து. knew satisfactorily.

மூலம் = வேர்; காரணம். Root; cause.

செலவு = உத்தரவு. Permission.

புஷ்டி = வளர்ச்சி; கொழுப்பு. Stoutness; fatness.

தங்கணட்பு = தங்கள் + நட்பு. Your friendship.

நட்பு = சிநேகம். Friendship.

தரிசனம் = பார்வை. Vision; sight; interview.

உபசாரம் = மரியாதை. Attention to a guest; civility; from Sanskrit Upachara.

மத்தகம் = தலை. Head; from Sanskrit Mastaka, the top of anything.

கொத்துகிற = குத்துகிற. Prick; chop; hack.

அங்குசம் = யானைத்தோட்டி. An iron instrument used to control an elephant.

ஆஷாடபூதி = ஆஷாடம் + பூதி. ஆஷாடம் or ஆசாடம், the month of July or ஆடி. From Sanskrit Ashadha. பூதி = பிறந்தவன். One who is born. Hence, one who is born in the month of July.

கூட்டுறவு = சேர்க்கை; சிநேகம். Friendship; company.

## Page 9

தோஷம் = குற்றம். Fault. (Sanskrit.)

தேவசன்மா = தேவன் + சன்மா. தேவன் = கடவுள். God. சன்மா is a title.

சந்நியாசி = துறவி. Ascetic.

கந்தை = கிழிந்த பழைய துணி. Rags.

சூது = இரகசியம். Secret.

தாசி = அடியாள். சுவாமிக்கு அடியவளாய் இருப்பவள். Originally these women were very religious and were of very

high character. As they were unmarried, they gradually became prostitutes, so that the word now denotes a woman of ill-fame.

பிரமசாரி = பிரமம் + சாரி. Sanskrit. பிரமத்தை அனுசரிப்பவன். பிரமம் = வேதம். Vedas. This word originally meant one who chants the Hindu Vedas and as those who do so are not married, it meant bachelors. It now means an unmarried person.

நிசாரம் = சாரமில்லாதது. உபயோகமற்றது. Vain; useless. The prefix நி in நிசாரம் has a negative force.

சமுசாரம் = குடும்பம். Family.

சாகரம் = கடல்; சமுத்திரம். Ocean. It is supposed that the sea was dug by சகரர் and so it is called சாகரம்.

மலையாமல் = மயங்காமல். Without being confused.

கடைத்தேற = ஈடேற; விருத்தியாக. To be saved; to prosper.

மகானுபாவன் = மகா = பெரிய, அனுபாவன் = மகிமையுடையவன்; அதாவது மிக்க கீர்த்தியுடையவன். An illustrious person; a great and liberal man.

பரம = மேலான. Noble.

பாசாங்கு = மாய்மாலம்; பொய் வேஷம்; கடிப்பு. Dissimulation; hypocrisy.

தலைமேற் கையை வைத்து. இது காப்பாற்றுவதற்கு ஓர் அடையாளம். Placed the hand on the head. This is a sign of protection.

பிட்சை = யாசகம். Alms.

அன்னமிட்ட வீட்டிற் கன்னமிடலாமா? = நமக்குச் சாப்பாடு போட்டவர் வீட்டில் நாம் திருடலாமா? Is it proper to rob one who has fed us; broadly is it proper to do evil for good? நன்மை செய்தவர்களுக்குத் தீமை செய்யலாமா?

## Page 10

கன்னம் = களவு ; திருட்டு. Theft ; from Sanskrit Karnam, a hole.

உப்பிட்டவரை யுள்ளளவு நினை = உனக்குச் சிறிது உப்புக் கொடுத்தவரையும் மரணபரியந்தம் நினை. Remember for ever him who has given you even a little salt. Be grateful to those who do you good.

அன்னதாதா = அன்னமிடுபவன், சாதம் கொடுப்பவன் ; தருமவான். One who gives rice ; generous man.

நொடியளவில் = ஒரு நொடிக்குள். In a second.

பரபரப்பாய் = விரைவாய் ; சீக்கிரமாய். இது பரபர என்னும் வினையடியாகப் பிறந்தது. Hastily ; hurriedly.

பிட்டம் = பின்புறம். Back-side.

பின்பிரைக்க = பின்பு + இரைக்க = ஓடுவதினால் மூச்சுவாங்க. To pant ; palpitate.

ஆசாரியன் = குரு. Priest ; religious teacher.

அநுக்கிரகம் = அருள் ; கிருபை. Favour ; grace. அநுக்கிரகம் பஞ்ச கிருத்தியங்களில் ஒன்று. From Sanskrit Anugraha.

பரசொத்து = மற்றவர்களுடைய பொருள். The property of others.

பரமாத்துமா = பரம + ஆத்துமா. (Sanskrit combination.) பரம = மேலான, ஆத்துமா = ஆத்துமாவை யுடையவன் ; அதாவது உத்தம புருஷன். Noble soul ; excellent person.

சிஷன். Disciple.

ஜலபாதை = மலஜலங்கழிப்பது. Answering the call of nature. The word ஜலோபாதை would be better.

அலம்ப = கழுவ. To wash.

அனர்த்தம் = துன்பம் ; கஷ்டம். Trouble.

'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும்.' (Proverb.) 'We must winnow when the wind blows.' அதாவது சமயம் வாய்த்தபோது காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளவேண்டும். Equivalent to 'Make hay when the sun shines.'

வய்த்தான் = மோசம் செய்தான். The root of the verb is வய், deceive.

உப்புக்கண்டம் = உப்பு இட்டு உலரவைத்த மாமிசத் துண்டு. Piece of salted flesh.

உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பாத்தி போல. Like the Brahman woman who lost the piece of salted flesh. The Brahmans are supposed to be strictly vegetarians. If they eat flesh it must be in private and if a piece of salted flesh belonging to a Brahman woman is stolen, she will never mention it in public lest she would betray herself. In the same way the Sannyasi did not mention the theft to anybody.

சேகரிக்க = சம்பாதிக்க. To procure.

## Page 11

விக்கினங்கள் = தீமைகள். Dangers.

நட்பு = சிநேகம். Friendship.

உபாயம் = தந்திரம். Device.

பராக்கிரமம் = வல்லமை. Power.

சொர்ணமாலை = பொன்மாலை. A garland of gold coins.

கிருஷ்ணசர்ப்பம் = கறுத்த பாம்பு; கரும் பாம்பு. A black snake; a cobra.

பொந்து = துவாரம். Cavity on a tree.

நண்டு. Crab.

## Page 12

செம்படவன் = வலைஞன்; மீன் பிடிப்பவன். Fisherman.

நிர்மூலம் = வேரில்லாதிருத்தல்; முற்றிலும் அழிதல். Eradicate; completely destroy.

அபாயம் = தீங்கு. Danger.

இரட்சி = காப்பாற்று. Save.

தள்ளாமையான காலம் = பலவீனமான காலம். Old age.

பரோபகாரி = பர + உபகாரி. அன்னியருக்கு உபகாரம் செய்கிறவன். One who helps strangers; philanthropist.

பேதமையான = அறியாமையுள்ள. Ignorant; non-suspecting.

வஞ்சனையான = சூதுள்ள. Deceitful.

மச்சங்கள் = மீன்கள். Fishes.

பாறை = பெரிய கல்லு. Stone.

உலர = காய. To dry.

சீவ காருண்யன் = சீவன்களிடத்தில் கிருபையுடையவன்; நல்லுபகாரி. A person who is kind or merciful to living creatures; benefactor.

உள் = உள்ளம்; மனது. Mind.

மீன்முட்கள் = மீன்களுடைய எலும்புகள். Fish bones.

## Page 13

பரிவாரங்கள் = கூட்டத்தவர்கள். Followers.

கொடுக்கு. Claw.

நறுக்கி = வெட்டி. Cut.

இராஜகுமாரி = அரசனுடைய மகள். Daughter of the king; princess.

மஞ்சனசாலை = மஞ்சனம் + சாலை = ஸ்நானம்செய்யுமிடம். மஞ்சனம் or Sanskrit Manjana denotes bathing as a religious act and means the bathing of an idol or a sacred person. At present it is also used for the bathing of royal personages.

சாலை = மண்டபம். Hall or room. Hence, மஞ்சனசாலை means bath room.

ஆபரணங்கள் = நகைகள். Jewels.

நாகம் = பாம்பு. Snake; cobra.

'எவன் புத்திமானோ அவன் பலவான்.' This is a proverb. 'Whosoever is wise is strong.'

புத்திமான் = புத்தியையுடையவன். Wise man.

பலவான் = பலத்தையுடையவன். Strong man.

பூர்வம் = முற்காலத்தில். In olden days.

நெருங்கிய = செடிகள் அடர்ந்திருக்கிற. Dense.

மதோன்மத்தன் = மத + உன்மத்தன். மதம் = மதத்தினால், உன்மத்தன் = பித்தம் பிடித்தவன்; அதாவது மிகுந்த மதமுடையவன். Person mad or intoxicated with vanity or arrogance.

வெறி = மயக்கம். Intoxication.

மிருகேந்திரா = மிருகம் + இந்திரா. மிருகம் = மிருகங்களுக்கு இந்திரா = இந்திரனே ; அதாவது மிருகங்களுக்கு அரசனே. Indra is supposed to be the god of gods. Hence, Indra here means king, so that மிருகேந்திரா means, Oh king of beasts !

## Page 14

பட்சித்து = புசித்து. Devour.

பிரார்த்திக்க = கெஞ்ச. To beg or pray.

சத்தியம் = ஆணை. Oath.

விலங்குகள் = மிருகங்கள். Beasts.

மெள்ள. Another form of மெல்ல = மெதுவாக. Slowly.

கை—Here it refers to the foreleg of the lion.

மோதி = அறைந்து. Stamped ; struck.

பாழ்ங்கிணறு = பாழ் + கிணறு = பாழாய்ப்போன கிணறு. A well in ruins.

நிழல் = உருவம். Shadow.

## Page 15

மங்களம் = சுபம் ; நன்மை. Luckiness ; prosperity.

மித்திரன் = சிநேகிதன். Friend.

விசுவாசம் = சிநேகம். Faithfulness ; friendliness.

தண்டித்தாலும் = தண்டனைசெய்தாலும். Though you punish.

பிரதானி = இராச காரியத்தை முற்றிலும் பார்ப்பவன். Chief officer of a king ; minister.

ராஜ லட்சுமி = ராஜ சம்பத்து. அரசர்களுக்குரிய செல்வம். Lukshmi is the goddess of wealth and is used in the sense of wealth. Hence ராஜலட்சுமி means the wealth of kings.

கர்வம் = அகங்காரம் ; பெருமை. Pride ; arrogance.

சுதந்தரன் = சுவதந்திரன் = தனக்குத்தானே வசமாயிருக்கிறவன் ; ஒருவருக்கும் கீழ்ப்படாதவன். An independent person.

களைய = அகற்ற. To remove.

## Page 16

சாதுக்கள் = புத்திசாலிகள். Wise men ; sages.

ரோகி = ரோகத்தையுடையவன்; வியாதிக்காரன். Sick person.

விபத்து = ஆபத்து. Danger.

துர்லபம் = துர் + லபம்.

லபம் = லபிப்பது ; அடைவது.

துர் = இன்மையைக் காட்டும் உபசர்க்கம். Hence துர்லபம் means கிடையாதது. Difficult to attain.

காதகன் = கொல்லுகிறவன். Murderer.

அபயம் = அ + பயம் = பயமின்மை ; பாதுகாப்பு. Fearlessness ; protection.

துரோகம் = சதி ; துன்பம். Treachery.

குணக்கு = கோணல். Curve.

அமுதம் = அமிர்தம் ; பால். Milk.

விருத்தாந்தம் = சமாசாரம் ; செய்தி. Details ; particulars.

பாமரர்கள் = இழிந்தோர் ; மூடர். Lower class people ; fools.

பொல்லாங்கு = கெடுதி. Harm.

மந்திராலோசனை = மந்திரம் + ஆலோசனை. Sanskrit redundant combination. Both the words mean consultation and the use of two words to express the same idea seems unnecessary although grammar allows it.

மந்திராலோசனை = அரசன் மந்திரிமாரோடு இரகசியமாய்ச் செய்யும் ஆலோசனை.

## Page 17

சீலைப்பேன். Lice in clothes.

மூட்டுப்பூச்சி. Bug.

பஞ்சணை = பஞ்சினாற் செய்யப்பட்ட அணை; மெத்தை. Cushion.

மந்தவிசர்ப்பணி = மந்தம் + விசர்ப்பணி. (Sanskrit.) மெதுவாக ஓடுகிறவன். One who moves slowly ; a dull tardy runner.

டிண்டிபன் = பெருத்த தேகத்தையுடையவன். One who has a big body. (Sanskrit.)

துடுக்காய் = முரட்டுத்தனமாய் ; Rudely ; rashly.

சயனம் = படுக்கை. Bed. (Sanskrit.) sayana.

டெடுக்கென = சடுதியாய். Suddenly.

மெத்தென = மெதுவாக. Slowly.

சுறுக்கென்று = உறைக் தம்படியாக. In a sharp manner.

சோதனைக்காரர் = ஆராய்ந்துப்பார்ப்போர். Thosewho examine; those who look after the comforts of a king and investigate into the causes that render a palace uncomfortable.

சகவாசம் = சிநேகம். Friendship.

## Page 18

சம்பத்து = செல்வம், செல்வாக்கு. Prosperity.

விபத்து - துன்பம். Calamity; adversity.

யாசகன் = பிச்சைக்காரன். Beggar; mendicant.

சம்பவித்தது = உண்டானது; நேரிட்டது. Happened.

துர்ச்சனர் = துன்மார்க்கர். Wicked people. The prefix துர் means bad or wicked.

விபரீதம் = மாறுபாடு. Different manner.

சந்தனமரம். The sandal tree. The wood has a fragrant smell. Its paste is used by Hindus on festive occasions.

தாழை = தாழைமரம். A tree of the palm species found in sea-shores and sandy plains. Its flower has a sweet scent.

## Page 19

பிரமா = நான்முகன். The four faced Brahma the creator of the universe according to the Hindu belief. One of the Hindu triad.

அங்குசம் = யானைத்தோட்டி. An elephant's goad.

நிருமித்தான் = ஏற்படுத்தினன்; நிருமாணஞ்செய்தான். Formed; constructed.

எமன் = யமன்; கூற்றுவன். Yama the god of death.

ஒட்டை = ஒட்டகம். Camel.

மதோற்கடன் = மத + உற்கடன் = மதத்தினல் மிகுந்தவன்; மிகுந்த மதமுள்ளவன்.

மந்தானசன் = மந்த + அனகன் = மெதுவாக நடப்பவன். One who walks slowly.

## Page 20

தழை=இலை. Leaf.

பீடிக்கப்படுகிறவன்=வருத்தப்படுகிறவன். One who is tormented.

'வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய் தேடலாமா?' Would you be in search of ghee having butter in your possession?' Said of one who neglects his own resources.

பூமியைக் கையால் தொட்டு=Touched the earth with its hand (i.e. its leg). பூமியைத் தொட்டது ஒட்டையைக் கொல்லலாமென காகம் சொன்னதினாலுண்டான துக்கத்தினால்.

சிவ சிவா! Mentioning Siva's name. காகம், சொன்னதைக் கேட்ட பாவம்போக 'சிவ சிவா' என்று சொல்லிற்று.

## Page 21

அசுவ மேதம்=அசுவம்+மேதம்=குதிரையாகம். A yaga or ceremony of sacrifice as practised by the Hindus of old.

புண்ணியம்=பலன். Merit.

விண்ணப்பம்=வேண்டுகோள். Prayer.

ரக்ஷணைக்காக=இரட்சிப்புக்காக. For the salvation or safety.

துறக்கலாம்=கைவிடலாம். Abandon.

பரிபாலனம்=பாதுகாப்பு. Protection.

## Page 22

கீழ்கள்=கீழ்மக்கள்; தாழ்ந்த ஜனங்கள். Low class people; the wicked.

சண்டைமுனை=யுத்தகளம். Battle-field.

சொர்க்கம்=மோட்சம். Swarga the heaven of Indra. According to Hindu shastras a person who dies at the battle-field without retreating, goes to heaven.

சூரர்=வீரவான்கள். Men of valour; Brave warriors.

சிட்டுக்குருவி. A little bird.

தாரதம்மியம்=தாழ்வும் உயர்வும்; பேதம். Difference.

இதம்=நன்மை. Good.

கழி=தடி. Stick; rod.

## Page 23

விகடம்=விசாலம். Bro[illegible]

சங்கடம்=நெருக்கம். Na[illegible]ss.

அன்னம்=அம்ச பட்சி. A fabulous bird of the Hindus not in existence in these days. They call it swan but it is not the modern bird of that name.

கம்புக்கிரீவன்=கம்பு+கிரீவன். சங்குபோன்ற கழுத்தையுடையவன். One whose neck is as white as chank shell.

செப்பட்டை=சிறகு. Wings.

ஸ்திரமாய்=உறுதியாய். Firmly.

பேரிரைச்சல்=பெரிய இரைச்சல்; அதிக கூச்சல். Big noise.

புலாற்றின்பவர்கள்=புலால்+தின்பவர்கள். மச்சம், மாமிசம் புசிப்பவர்கள். Those who eat fish or flesh.

## Page 24

வலைஞர்=மீன் பிடிப்போர். Fishermen.

விபத்து=ஆபத்து. Danger; harm.

உதயம்=சூரியன் உதிக்கும் சமயம். Sun-rising time.

## Page 25

சேவல்=ஆண்கோழி. Male fowl; cock..

திராணி=சக்தி; வல்லமை. Ability.

கருடன்=The Brahmany kite supposed to be the vehicle of Vishnu one of the Hindu triad. This kite is represented as a man with wings, and is supposed to be the king of birds.

சரணமடைந்தது=தஞ்சமென்று அடைந்தது. Took shelter or refuge.

அகங்காரம்=கர்வம். Pride; arrogance.

நெறித்து=உயர்வாக நிற்கச்செய்து. Cause to stand erect.

## Page 26

இருவருடைய சிநேகத்தின் வாயிலும் மண்விழுந்தது. Literally, dust has fallen in the mouth of the friendship of both. Fall-

